யிருந்ததனையிருந்தபடி யிருந்துகாட்டிச், சொல்லா மற்சொன்னவரை நினையாமனினைந்துபவத் தொட க்கைவெல்வாம்.

## சுப்பிரமணியர்.

கறங்குதிரைக்கருங்கடலுங் காரவுணப்பெருங்க டலுங் கலங்கக்கார்வந், துறங்குசிகைப்பொருப்புஞ் சூ ருரப்பொருப்பும்பிளப்பமறை யுணர்ந்தோராற் றும், அறங்குலவுமகத்தழலு மவுணமடவார்வயிற்றி னழலுமூள, மறங்குலவுவேலெடுத்த குமரவேள்சே வடிகள் வணக்கஞ்செய்வாம்.

## நந்திதேவர்.

வந்திறையடியிற்றாழும்வானவர்மகுடகோடி, பந் தியின்மணிகள்சிந்தவேத்திரப்படையாற்றாக்கி, யந் தியும்பகலுந்தொண்டரலகிடுங்குப்பையாக்கு, நந்தி யெம்பெருமான்பாதநகைமலர்முடிமேல்வைப்பாம்.

## தண்டியடிகள் - திருத்தொண்டர்கள்.

தந்தைதாளொடும்பிறவித் தாளெறிந்து நிருத்தரி ரு தாளைச்சேர்ந்த,மைந்தர்தாள்வேதநெறி சைவநெ றிபத்திநெறி வழாதுவாய்மெய்,சிந்தைதானரனடிக் கே செலுத்தினராய்ச்சிவானுபவச் செல்வராகிப், ப ந்தமாந்தொடக்கறுந்த திருத்தொண்டர்தாள்பரவி ப் பணிதல்செய்வாம்.

திருச்சிற்றம்பலம்.

# பாண்டித்திருநாட்டுப்படலம்.



மேகங்கள் சகலதேவநாயகனாகிய பரமேஸ்வரனுடைய நீறணிந்த திருமேனிபோல் வெண்ணிறங்கொண்டு சென்று, சமுத்திரஜலத்தைப் பானஞ்செய்து, பார்வதிதேவியாருடைய திருமேனிபோன்ற நீல நிறத்துடன் ஆகாயத்திலெழுந்து முழங்கி, முனிவர்பெருமானாகிய அகஸ்தியர் எழுந்தருளியிருக்கின்ற பொதியமலையில் மழைபொழிய, அம்மலையினின்றும் பேரோசையுடன் வருகின்ற தாமிரபர்ணியென்னும் நதி வெள்ளம் பெருகியபோது, பாண்டித்திருநாட்டின் மருதநிலத்துழவர்கள் பொன்னேர்பூட்டி, நிலத்தையுழுது பயிர்செய்து, பொன்மலைபோல் வரிசைவரிசையாகப் பெரிய நெற்போர்கள்செய்து, ஊர்க்காணித்தெய்வத்துக்கும் இரவலர்க்கும் தக்கவாறு செலவுசெய்து, பின்னர், அளந்து கணக்கிட்டு ஆறிலொருபங்கு அரசர்கடன்கொடுத்து, மற்றைய ஐந்துபாகத்தையும் வண்டியிலேற்றி வீட்டுக்குக்கொண்டுபோய், தென்புலத்தார், குலதெய்வம், விருந்து, ஒக்கல்களுக்கு உண்ணக்கொடுத்துத் தாமுமுண்பார்கள். கருப்பங்கட்டி, எள்ளு, சாமை, கொள்ளு, சோளம், துவரை, வாழைக்குலை, அவரை, தினை, வெவ்வேறுவகையான பயறுகள் முதலிய புன்செய்யில் விளைகின்ற பலவகைப்பயன்களையெல்லாம் பொதிமாடுகளிலும், வண்

டில்களிலும் ஏற்றிக்கொண்டு போவார்கள். சந்நியாசிகள், சிவனடியார்கள் இவர்கள் பசிக்கு நல்லுணவும், பிணிக்கு மருந்தும், உடுக்க வஸ்திரமும், இருக்க இடமும் இன்னம் வேண்டியவைகளும் கொடுத்து, அவரவர்கள் செய்யும் தருமங்களுக்கு வரும் இடையூறுகளை நீக்கி அரியகதி சேர்ப்பிக்க வல்லவர்களாய், சிவனடியார்களைக்கண்டால் தங்குழந்தைகள் மேல்வைத்த அன்பும், ராஜபுத்திரர்களைக்கண்டாற்போன்ற பயமுங்கொண்டு, அவர்கள் திருவடிகளை வணங்கி, இன்மொழிகூறி, அவர்கள் இச்சைவழிநடந்து, மனக்குறிப்பறிந்தேவல்செய்வார்கள்.

மேலும் சிவனடியார்களை வழிமறித்தழைத்துக்கொண்டுபோய், முக்கனிகளும் தேனும் கலந்தபாலுடனே நல்லவாச நெய்பெய்த அன்னத்தையுண்டு, உங்களுக்குவேண்டிய பொருள்களையும் கொள்ளுங்களென்று திருவமுது செய்விப்பார்கள். அந்தப் பாண்டித்தமிழ்நாடாகிய பெண்ணுக்கு, அங்கங்கே அவயவங்கள்போல் விளங்காநின்ற ஊர்கள், அணியச்செய்த பொன்னாபரணங்களேகோயில், மடம், தருமசத்திரம், தண்ணீர்ப்பந்தல், அன்னசத்திரமென்று உருமாறியிருக்கின்றன. உலகமெல்லாம் திருமால் வடிவுபோலிருக்கின்ற உலகில், பாண்டிநாடு திருமால் உந்தித்தாம

ரைமலர்போலிருக்கின்றது. அந்நாட்டிற் பொதியமலை தாமரையிலுள்ள பொருட்டைப் போலிருக்கின்றது. அம்மலைமேலிருக்கின்ற அகத்தியன் அப்பொருட்டின்மேல் வாசஞ் செய்யும் நான்முகன்போலிருக்கின்றனன். அவ்வகத்தியனாலுண்டான முத்தமிழும் வேதங்கள்போன்றன. இன்னும் பொதியமலையே மேருவாகவும், தாமிரபர்ணியே சாம்பூநதநதியாகவும், தாமிரபர்ணியைச்சூழ்ந்த நிலமெல்லாம் சாம்பூநதத்தைச் சூழ்ந்த போகபூமியாகவும் விளங்குகின்றது. மதுரையைச் சிவபுரமென்று சொல்வதனால், அம்மதுரைக்கு வெளியே விளங்கும் ஊர்களெல்லாம் இந்திரன், பிரமன், விஷ்ணு முதலிய தேவர்களுடைய உலகங்களின் வடிவாம். இன்னமும் பெண்கள்கொங்கைமேற் பூசிக்களைந்த குங்குமக் கலவையும், கஸ்தூரி சேர்ந்த மயிர்ச்சாந்துங் கலந்த தாமிரபர்ணிநதி பரிமளம் வீசுவதல்லாமலும், அந்த ஆற்றின் பக்கங்களில் விளைந்த செந்நெற்களும், கரும்புகளும், அவ்வாசம் வீசுகின்றன. சந்தனவிருக்ஷங்க ளெல்லாம் பொதியமலையில் விளைகின்றன. தருமங்களெல்லாம் அவ்வாறு சூழ்ந்த ஊர்களில் உண்டாகின்றன. ஈஸ்வரபக்திகள் அவ்வூரிலிருப்பவர்கள் புத்தியிலே விளைகின்றன.

நீலகண்டக்கடவுளாகிய பரமசிவன் தென்திசையிலுள்ளோர்கண்டு சேவிக்க வெள்ளியம்பலத்தின்கண் ஆனந்தத்தாண்டவஞ்செய்வது, அவ்வாடலின் இளைப்புநீங்க மந்தமாருதம் முகத்தில் வீசவும், முத்தமிழையும் திருச்செவிகளாற் கேட்கவுமன்றோ? பின்னும் சிவபெருமான் பாணினிமஹாமுனிவருக்கு பூர்வம் வடமொழிக்கிலக்கணஞ் சொன்னாற்போலவே, அகத்தியமஹாமுனிவருக்குத் தென்மொழிக்கிலக்கணஞ்சொல்லி, அவ்வடமொழிக்கிணையானது தென்மொழியேயென்று நிச்சயப்படுத்திய தமிழென்னும் இளம்பெண்ணுக்கு, நிருத்தனசபையென்று சொல்லத்தக்கது பாண்டிநாடல்லவோ? மேலும் கண்ணுதற்பெருமானும் சங்கத்தாரோடு கூடியிருந்து பல நலங்களும் பொருந்தத்தெரிந்து ஆராய்ந்த இப்பசுந்தமிழ், மற்றைய நாடுகளில் இலக்கணவரம்பில்லாமல் வழங்கும் பாஷைகள்போல், பதினெட்டு பத்தொன்பது என்னும் கணக்கிற் சேர்க்கிடந்ததாக எண்ணிச் சொல்லவுங்கூடுமோ? கூடாது. ஏனெனில், பரமேஸ்வரனைத் தூதுவிட்டதும், முதலையுண்டபாலனை மீள வழைத்ததும், எலும்பைப் பெண்ணுருவாக்கியதும், திருமறைக்காட்டில் கதவைத்திறந்ததும், தமிழ்மொழியோ வேறு நாட்டுப்பாஷைகளோ கூறுங்கள்? மழையின்றி விளைவுருஞ்

றினும், வேந்தர் நீதிதவறினும், வறுமைநோய் வந்து வருத்தினும், அப்பாண்டி நாட்டார் சிவநேசமாறாமல் தம்மை விற்றாயினும் தருமஞ்செய்வார்கள். சகலலோகமாதாவாகிய உமாதேவியாரும், சிவபெருமானும், இளையபிள்ளையாராகிய சுப்பிரமணியக்கடவுளும், முறையே தடாதகைப்பிராட்டியாராகவும், சோமசுந்தரபாண்டியனாகவும், உக்கிரகுமாரபாண்டியனாகவும் வந்து அரசுசெலுத்திய நாடு இப்பாண்டிநாடேயல்லாமல் உலகில் வேறெந்த நாடேனுமுண்டோ? கிடையாது, விண்ணாட்டினுமில்லையென்க.

திருச்சிற்றம்பலம்.

---

## மதுரைத்திருநகரப்படலம்.

---

பாண்டித்திருநாடென்னும் பெண்ணுக்குப் புறத்திலுள்ள நகரங்களெல்லாம் மற்றைய வயவங்கள்போலாம். மதுரையே திருமுகமாம். இன்னும் அம்மதுராநகரமானது, திருமகளுக்குச் செந்தாமரைக்கோயிலாகவும், கலைமகளுக்கு வெண்டாமரைக்கோயிலாகவும், ஞானசத்திக்குயோகபீடமாகவும், பூமிதேவிக்கு நெற்றித்திலகமாகவும் விளங்குகின்றது. அம்மதுராபுரியின் மதிலைச்சூழ்ந்த அகழிக்கிடங்

கானது, சிவபெருமான் திருவருளால் எழுக
டலும் புண்ணிய தீர்த்தமாகவந்து நிற்பவற்
றைக்கண்டு, பெரும்புறக்கடலும் வந்து மது
ரைக்குவெளியே சூழ்ந்துகிடப்பது போலிரு
க்கின்றது. இரக்கமற்ற வெவ்விய யமன்போ
ன்ற முதலைகள் கிடந்து வருத்துகின்ற அந்த
ஆழ்ந்த அகழிக்கிடங்கில் யாரேனும் வீழ்ந்
தால், பரமசிவனுக்கொப்பாக வேறு சில தெ
ய்வங்களை யெண்ணினவர்கள் இருண்ட நர
கத்தில் வீழ்ந்து கரையேறினாலும், அதினின்
றும் தப்பிக் கரையேறமாட்டார்கள். உமா
தேவியாருடைய திருமுலைப்பாலையுண்டு திரு
வாய்மலர்ந்தருளிய திருஞானசம்பந்தசுவாமி
களுடைய தமிழ்வேதத்தைத்தெரிந்து, வை
திகசைவ நிலைகளை நிலைபெறச்செய்தவையை
யாறும் அம்மதுரைக்கு ஒருபால் அகழாக
விளங்குகின்றது. சூரியன் தேர் செல்லும் வ
ழியைத் தடைசெய்யும்படி யோங்கியிருக்கி
ன்ற அம்மதுராபுரியின் மதிலுக்குவெளியே
சூழ்ந்துகொண்டு பகைவர்கள் வளைந்தபோ
து, எதிர்த்துச் சண்டைசெய்து வெல்லுதற்
கு வீரர்களும் வேண்டுமோ? அம்மதிலுக்கு
றுப்பான சூத்திரப்பாவைகளே வெல்லவல்ல
ன. அவைசெய்யும் வீரங்களைச்சொல்லிமுடி
யா. இன்னும், அம்மதுராநகரத்தின் வீதிகள்
என்றும் மங்கலங்களையேகொண்டு விளங்கா

நிற்கும். அவற்றின்சிறப்பு உரையிலடங்காது. வேதங்களுக்தேடி இன்னமுங்காணப்பெருத சிவபெருமான் மாணிக்கம், வளையல், விறகு இவை விற்க மதுராபுரியில் இரிந்தகாலையில், எம்பெருமான் திருவடிகளை அவ்வீதிகள் சுமக்கப்பெற்ற தவஞ்செய்தனவென்ருல், அத்தெருக்களின் பெருமையை யாவர் சொல்ல வல்லார்?.

காமுகரை மோகவலையிலகப்படுத்திப் பலவகைத்தந்திரங்களாற் பொருளைக் கவரும்பரத்தையர் வீதிகளும், விண்ணுலகத்திலும் மண்ணிலும் நிறைந்த கீர்த்தியும், மோக்ஷாபேக்ஷைபுற்ற திவ்வியஞானமும், பொறுமையும், கெடாதநன்றியும், ஊக்கமும் தானதருமசிந்தையும், உயிர்கள்மேலன்பும், தகுதிப்பாடும் சிநேககுணமும், மானமும் இவைகளைத் தவங்கிடந்துபெற்ற பிள்ளைபோல் வளர்க்கவல்ல வேளாளர் வாழும் வீதிகளும், சொல்லினும் இலாபங்கொள்ளவல்ல வணிகர் வீதிகளும், ஒற்றையாழித்தேரோனுகிய சூரியன் உலகிலுள்ள இருளை யோட்டுவதுபோல், ஆக்ஞாசக்கரத்தால் உலகிற்பாவ இருளைப்போக்கிச் செங்கோல் நடாத்தி, புஜபலபராக்கிரமத்தால் பகைவரைவென்று ஜயபதாகை நாட்டிய ராஜவீதிகளும், பெரியோர்களால் உண்டென்று சொல்லப்பட்ட தர்மார்த்த காமமோக்ஷங்க

ளையில்லையென்னும் வஞ்சகர்களாகியநாத்திக ர்களுடைய நாவையறுக்கும் ஆயுதமாக ஈஸ் வரனாலுரைக்கப்பட்ட வேதப்பிரமாணங்க ளைக்கண்டு மனந்தெளிந்து,பரிசுத்தராய் மோ க்ஷவிருப்பத்தினையுடைய மறையவர் வாழும் வீதிகளும், தெய்வத்தன்மைபொருந்திய வி பூதியே பாய்மரமாகவும், பஞ்சாக்ஷரமே கப் பலாகவுங்கொண்டு, பிறவிக்கடல்களேழையு ங்கடந்து, சிவனது திருவடிமலராகிய கரை யைச்சேருகின்ற சைவமாதவர்வசிக்கும் மட ங்களையுடைய திருவீதிகளும், அம்மதுராபுரி யிற்சிறந்துள்ளன. உக்கிரகுமாரபாண்டியன் வெற்றிவேலைவிட்டுக் கடலைவென்றதும், மகு டத்தைச்சிதைத்து இந்திரனைக்கருவபங்கஞ் செய்ததும்,மேகங்களை விலங்கிட்டதும், பொ ன்மலையைச் செண்டாலடித்து வென்றதும், இம்மதுராநகரின் இடவிமையாலன்றோ? எ ங்கும் நாவுகளும், எங்கும் கண்களும்,எங்கும் வியாபகமுமுள்ள பரம்பரனையல்லாமல்,ஆயி ரம்கண்ணுள்ள இந்திரனும், ஆயிரம் நாவுள்ள ஆதிசேஷனும்,இந்நகர்ச்செல்வத்தைப்பார்க்க வும் சொல்லவுங் கூடுமோ? கூடாது.

திருச்சிற்றம்பலம்.

---

# திருக்கைலாயப்புகழ்ச்சி.



திருமால்முதலிய தேவர்கள் தங்கள் அபீஷ்டங்களைப் பிரசாதித்தருளும்படி கரங்களைச்சிரமேற்கூப்பிப் பிரார்த்திக்க அவர்கட்குத் திருவருள் சுரந்து, மாயையாதீதனாய், மனோவாக்குக்கதீதனாய், வேதமுடிவுக்கெட்டாதவனாய் விளங்கும் பரமேஸ்வரன் வீற்றிருப்பது திருக்கயிலாயமாகும். அத்திருமலை, புரந்தராதி தேவர்பதவிகளும், பிரமபதவியும், விஷ்ணுபதவியும் அழியுங்காலத்தும் தான் நிலைகெடாமல் சாஸ்வதமாய்நின்று ஊழிதோறும் வளராநிற்கும். பின்னும் அரம்பைமாதர்கள் நடன ஒலியும், வீணைமுதலிய நரம்புக்கருவிகளின் ஓசையும், மத்தளமுதலியதோற் கருவியினோசையும், அனேகயானைகள் முழக்கமும், அருவியாற்றின் ஒலியும்மாறாமல் விண்ணிலும் திக்குகளிலும் சென்று நிரம்பிநிற்கும். உடலமெங்குமணிந்திருக்கும் திருநீற்றின் வெண்ணிறத்தாலும், சிவபெருமானைத்தம்மகத்துட்கொண்டு அசைவறச் சிவயோகத்திலிருக்கையாலும், அருவியாறுபோல் ஆனந்தபாஷ்பம் பொழிகின்றகண்களாலும், அங்கு வீற்றிருக்கு மாதவர்களுக்கு அக்கைலாயமலையும், தனது சாரூபத்தைத் தந்ததுபோல் விளங்குகின்றது. அம்மலையின்கண் கல்லென்று ஒலித்துப்பெருகிவருகின்ற அருவிவெள்ளமேயல்லாமல், வேதச்சிரப் பொருளாயுள்ள

பரமேஸ்வரனைத்தரிசித்து, ஆனந்தக்கடலின் மூழ்கிய பெரியோர்களுடைய விழிகளும் வெள்ளம்பொழியாநிற்கும். மேலும், அத்திருமலையின் ஒருபால், கோட்டுமலர், கொடிமலர், நீர்மலர், நிலமலர்களைக்கொண்டும், பாமலர்களைக்கொண்டும் சிவபெருமானுடைய திருவடிகளிற் சூட்டும் மாதவர்களுடைய கூட்டமும் சூழ்ந்திருக்கும். யானைகளும், புலிகளும், பாம்புகளும் தம்மினத்து முன்னோர்கள் வழிபட்ட சிவபெருமானாகவே அம்மலையின் கணுள்ள பெரியோர்களைப்பாவித்து, அன்பு பாராட்டாநிற்க,விண்ணுலகும் மண்ணுலகும் புகழ்வதாயுள்ளது அத்திருக்கைலாயமலை.

திருச்சிற்றம்பலம்.

---

## புராணவரலாறு.

தன்பெருமையை இவ்வளவென்று அளவிட்டுரைத்தற் கருமையாகிய அக்கைலாயமலையின் சிகரத்தில், சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கோயிலுக்கு முன்னுள்ள அதிபரிசுத்தமாகிய சிவதீர்த்தத்தின் பக்கத்தில், சந்திரகாந்தக் கற்களாலமைத்து நவமணிகள் பதித்துவிளங்கும் ஆயிரக்கால் மண்டபமொன்றுளது. அம்மண்டபத்தின்கண் அஷ்டாதசபுராணங்களையும் ஓதியருளிய சூதமுனிவர்

புலித்தோலாசனத்தின்மீது எழுந்தருளியிரு
ந்த காலையில், அங்குள்ள சிவதீர்த்தத்தின்
மூழ்கி அம்மண்டபமடைந்து சந்தியாதி கரு
மங்களை முடித்து,சிவபெருமானுடைய சரண
கமலங்களைத் தியானித்துத் துதித்தாலந்த சம்
புபத்தன்முதலிய மாதவர்கள் சூதமஹாமு
னிவரை வணங்கி ஒன்று வினவுவாராயினர்.
சுவாமி! பரமேஸ்வரன் எழுந்தருளியிருக்கும்
மேரு, மந்தரம், கைலைமுதலிய க்ஷேத்திரங்
களின் மான்மியங்களையெல்லாம் அடியேங்
கட்கு ஓதியருளினீர். அவைகேட்டும் சிற்ற
றிவினராகிய யாங்கள் தெளிவுபெற்றிலேம்.
ஆகையால் எங்கள் மயக்கொழியுமாறு மூர்த்
தி, தலம், தீர்த்த மூன்றிலுஞ்சிறந்த ஓர் தலம்
ஓதியருளல் வேண்டுமென்று பிரார்த்திக்கச்
சூதபுராணிகர் சொல்லுவாராயினர்.

புராணங்கள்பதினெட்டில், ஸ்காந்தத்தின்
ஆறுசங்கிதைகளில் ஒன்றாகிய சங்கரசங்கிதை
யென்னும் நூலினைச் சிவபெருமான் உமாதே
விக்கு ஓதுங்காலையில், அம்மையார் மடித்தல
த்திருந்து சுப்பிரமண்ணியக்கடவுள் உணர்ந்
து, தன்னைவழிபடும் அகத்தியமாமுனிவரு
க்கு ஓதியருள, அன்றுகொட்டு அது அகத்தி
யசங்கிதையென்று வழங்கிவருகின்றது. அது
கேட்போர்க்கு ஈஸ்வரன் திருவடிநீழலளிப்ப
தாயொரு தலத்தினையுரைக்கும். அது யாதெ

னில், பூர்வம் நான்முகக்கடவுள் அசுவமேதஞ் செய்யவேண்டித் தன்புதல்வர்களோடுங் காசிப்பதியை யடைந்து, அகஸ்தியர் முதலிய பலமுனிவர்களோடும் பத்து அசுவமேதங்கள் முடித்து, அவர்களுக்குவேண்டிய பொருள் வழங்கிச் சதுமுகன் பிரமலோகம்போய்ச்சேர்ந்தனன். பின்னர், அம்முனிவர்கள் யாவரும் காசிவிசுவநாதரைப்பணிந்து, முத்தி மண்டபத்தில் சிவபெருமான் சந்நிதியின்கண் பக்தியோடிருந்து, நாரதமுனியைநோக்கி யொன்று வினவலுற்றனர்.

சுவாமீ! தலமுதல் மூன்றிலுஞ்சிறந்த ஓர் சிவக்ஷேத்திரம் அடியேங்கட்கு ஓதியருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க, அம்முனி புங்கவன் வியாசமுனிவரைக்கேண்மினெனக்கூற, அன்னோன் முருகக்கடவுளிடத்தில்உணர்ந்த அகஸ்தியரைக்கேளுமென்று விடுத்தனன். அதுகேட்டமுனிவர்கள் யாவரும் அகஸ்தியருடைய திருவடிகளில் வணங்கித் துதிசெய்து, அடிகளே! மூவகைச்சிறப்புள்ள ஓர் சிவஸ்தலமடியேங்கட்கு உரைத்தருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க, முனிசிரேஷ்டராகிய அகஸ்தியர் முகமலர்ந்து மாசுணந்தன் என்னும் மறையவனும் அவன்மனைவியும் மக்களிருவரும் மூன்றும் யுகத்தில் பாவத்தாற்கோழிகளாய்ப்பிறந்து முத்திமண்டபத்தில் முத்திய

டைய வந்திருந்த சேவல்களையும், விநாய கரையும், முருகக்கடவுளையும், தக்ஷிணாமூ ர்த்தியையும் பணிந்து, அங்கயற்கண்ணம் மையையும், சொக்கலிங்கப் பெருமானையும் இதயதாமரையிலிருத்திச் சிவயோகசமாதியி லிருந்து, பரவசத்தராய், உமாதேவிக்குச் சிவபெருமானருளிச்செய்த சங்காசங்கிதை யை முருகவேள் எனக்குத் தெருட்டியரு ளினார். அதில் நீவிர்கேட்ட முச்சிறப்புமு ள்ளதும், அறுபத்து நான்கு திருவிளையா டல் புரிந்து சிவபெருமான் வீற்றிருந்தருளு வதுமான திருவாலவாயின் மான்மியத்தை என்குருநாதனாகிய முருகக்கடவுள் எனக்கு ஓதியருளியபடி உங்கட்குக் கூறுகின்றேன், கேட்பீர் முனிவர்களே யென்று அகஸ்திய முனிவர் சொல்லத்தொடங்கினார்.

திருச்சிற்றம்பலம்.

---

## தலவிசேடம்.

---

முக்கணாயகன் திருவடிகளி லன்புபூண்ட முனிவர்களே! நீவிர்கேட்ட தலம் திருவால வாயாகும். அதில், பொற்றாமரைமலர்ந்த தீ ர்த்தமும், சோமசுந்தரக்கடவுளென்னும் இலி ங்கமும் உண்டு. மேலும் திருவாலவாய்க்கிணை யாகிய ஒருதலமும், பொற்றாமரைக்குச் சம

மாகிய ஒரு தீர்த்தமும், சோமசுந்தரக்கடவுளைப்போல் இகபரசெல்வங்களைத்தந்து அழியாவீடு பேறுதருந்தெய்வமும் மூவுலகத்திலுமில்லை. அத்தகைய முச்சிறப்புகளில் முதல் தலப்பெருமையைக்கூறுகிறேன் கேளுங்கள். சிதம்பரம், காசி, காளத்தி, திருவாலவாயென்னும் நான்கில், திருவாலவாய் அதிகமாகும். எங்ஙனமெனில், சிதம்பரம் தரிசிக்கவும், காசி வசித்திறக்கவும், காளத்தி பக்திவழிபாடுசெய்யவும் போகமோக்ஷங்களைத்தரும். திருவாலவாய் கேட்டவுடன் போகத்தையும் மீளாக்கதியையும் அளிக்கும். இதுவல்லாமலும், சிவபெருமான் ஆதியில் எல்லாத்தலங்களையும் படைக்கும் பொருட்டு, முதலில் இத்தலத்தை நிருமித்து அங்குவீற்றிருந்தருளினார்.

இன்னும் அதன்பெருமை கூறக்கேளுங்கள். திருவாலவாயென்று கேட்டவரே அறத்தையும், நினைத்தவரே பொருளையும், சோமசுந்தரக்கடவுளை அவ்விடத்தில் தரிசித்தவரே இன்பத்தையும், அப்பதியில் வசித்தவரே மோக்ஷத்தையுமடைவர். காசிமுதலாகிய க்ஷேத்திரங்கள் மறுமையில் கதியளிக்கும். திருவாலவாய் சீவன் முத்தியைத்தரும், பின்னர் பரகதியையுமளிக்கும் ஆகையால், இச்சீவன் முத்திபுரம் அதிகமாகும். இத்துணைச் சிறப்பினதாய இத்திருப்பதியைவிட்டுப் பிறதலங்

களிற்போய்த் தவஞ்செய்வோர், தேன்கலந்த பாலமுதத்தை விட்டுப் புறங்கையை நக்குவோரொப்பார். ஆதலின், இத்தலத்தின் பெருமையை அளவிட்டுச் சொல்லவல்லவர் யாவர். மற்றைய தலங்களில் அசுவமேதமுதலிய பலவகையாகங்கள் செய்தபேறும், எள், நெய், அன்ன முதலியன தானங்கள் செய்தபேறும், காசியாதி தலங்களில் வசித்தபேறும், கங்கைமுதலிய நதிகளில் மூழ்கியபேறும், மதுரைத்திருப்பதியில் நாடோறும் வசித்தவர்க்கு உண்டாம். அன்னியதலங்களிற் செய்த பிரமகத்திமுதலிய பாதகங்கள் திருவாலவாயில் வந்து வசிப்பவரைவிட்டோடும். மற்றையதலங்களில் மாதந்தோறும் சாந்திராயணவிரதமனுஷ்டித்தவர்கள் பெறும்பேறு, இத்தலத்தில் ஓரிரவு உண்டியாலடைந்த பேறாகும். பிறதலங்களில், மாச உபவாசத்தாலடையும் பலன், இங்கோர் நாளுணவு ஒழிந்தவர் எய்தும் பேறாகும். பிறக்ஷேத்திரங்களில் நான்கு மாதம் விரதமனுஷ்டித்தெய்தும் பலனை, இங்கு நோற்கும் அஷ்டமிவிரத மொன்றேயளிக்கும். அயற்பதியில் ஆறுமாதம் விரத மனுஷ்டித்தடையும்பலனை, இத்தலத்தில் சோமவாரவிரதமொன்றேயளிக்கும். ஏனைய தலங்களில் ஓராண்டு உணவொழிந்து செய்யும்விரதத்தாலடையும் பயனை இங்கு சிவராத்திரியொன்

றேயளிக்கும். இங்கு புலன்களைவென்றோன் முப்போதும் உணவருந்திவசித்தாலும், வாயு பக்ஷணஞ்செய்து வருந்தி நோற்குமாதவத்தோனாவன். இத்திருவாலவாய்ப்பதியில், யாவனேனும் அந்தணருக்கும், அருந்தவருக்கும் பிக்ஷையளிப்பவர், பிறதலங்களில் செய்த சோடசதானத்தால் அடையும்பலன் பெறுவர். பலதலங்களில் வசித்தபலனும், பலதீர்த்தங்களாடியபலனும், பலதானங்களாலடையும்பலனும், பலபூஜைகள் செய்வதனால்வரும் பலனும், பலதவங்களால்வரும்பலனும், பலமந்திரங்களாலடையும் பலனும், பலநூற்கேள்விகளாலடையும்பலனும், பலவகைஞானங்களுணர்ந் தடங்கும் பயனும், அத்திருப்பதியில் வசிப்போரடைவரென்றால், இதற்கு நிகரான பதிவேறெங்குளது? பூர்வம் சதுமுகக்கடவுள், கைலைமுதலாகிய எல்லாத்தலங்களையும் ஒரு துலையிலும், இத்தலத்தை யொருதுலையிலுமிட்டுத் தூக்கி நோக்குங்கால், திருவாலவாய் மிகவுங்கனத்திருந்தமை கண்டு, யாவற்றினு மேலாகவைத்த தலமிதுவென்றால், இதன்பெருமையைக்கூற வல்லவர்யாவர்? அத்திருநகரின் பெயர் சிவனகரம், கடம்பவனம், சீவன்முத்திபுரம், கன்னிபுரம், திருவாலவாய், மதுரை, பூலோக சிவலோகம், சமட்டிவிச்சா

புரம், தென்கூடல், துவாதசாந்தபுரம் என்று பெரியோர்கூறுவர்.

திருச்சிற்றம்பலம்.

---

## தீர்த்தவிசேடம்.

கங்கை, காவிரிமுதலிய நதிகளும், கடலும், மேகமும் தோற்றுவதற்குமுன், சோமசுந்தரப்பெருமான் தன்னை யபிஷேகித்தற்குக்கண்டதாகு மிப்பொற்றாமரைத்தீர்த்தம். எங்ஙனமெனின், பூர்வம் சோமசுந்தரப்பெருமான் சமஸ்தலோகங்களையும் ஒடுக்கி, அந்நெறியே தோற்றுவித்தற்குத் திருவுளத்தெண்ணித்தானொரு திருவிளையாட்டாலே சகளவுருவங்கொண்டு, நந்திமுதலிய கணநாதர்கள் தன்னைப்புடைசூழ்ந்துவர, நாகலோகம், பொன்னுலகம், பிரமலோகம், விஷ்ணுலோகமுதலிய பலவுலகங்களிலுஞ் சென்றுலாவித் திரும்புகையில், பிரமன், இந்திரன் திருமாலிவர்கள்வந்து வணங்க, அவர்கட்குவேண்டியவரங்கணல்கி, மதுராநகரையடைந்து, சிவலிங்கத்திற் பிரவேசித்திருந்தனர். அக்காலையில், நந்தியெம்பெருமான் முதலியகணநாதர்கள் வணங்கி, சுவாமீ! இவ்விலிங்கமூர்த்திக் கபிஷேகிக்கவும், யாங்களெல்லாரு மூழ்கிக்கடைத்தேறவும், இப்போதுகங்கையாதிபுண்ணியதீர்த்தங்களோ

ன்றுமில்லை யாகையால், இருமைப்பேறுந்தர த்தக்க வோர்புண்ணியதீர்த்தத்தைத் தேவரீ ரிங்குகண்டருளல்வேண்டுமென்று குறையிர ந்தனர்.

அப்போது, சிவபெருமான் தன் இலிங்க மூர்த்தத்துக்குத் தென்கீழ்ப்பாரிசத்தில் திரி சூலத்தைநாட்ட, அங்கேஓர் தீர்த்தமுண் டாயது. அதில்தன் ஜடாமகுடத்திலுள்ள கங்காஜலத்தைத்தூவி, மஹாதீர்த்தமாக்கிக் கணாதிபர்களைநோக்கி, எல்லாத்தீர்த்தங்கட் கு முன்னரியாமிதனையுண்டாக்கினமையால், இது ஆதிதீர்த்தமாகும். எவைக்குமேலாங் காரணத்தால் பரமதீர்த்தமாகும். இதில் மூ ழ்கினோர்கள் எல்லாமங்களங்களையு மெய்து வதால் சிவதீர்த்தமாகும். உள்ளிருளகற்றி ஞானமீதலாலிது ஞானதீர்த்தமாம். நற்கதித ரலால் முத்திதீர்த்தமாம். இத்தீர்த்தத்தில் மூழ்கித் தர்ப்பணதானங்கள்செய்து பஞ்சா க்ஷரமுச்சரித்து நம்மையடைந்துவணங்கினோ ர் நற்கதியடைவார்கள். இத்தீர்த்தத்தால் ந ம்மையபிஷேகித்தால், பதினெண்குலகிலுள்ள பலதீர்த்தங்களாலு மபிஷேகித்த பயனுண் டாம். ஆதலின், கணாதிபர்களே! இதில்மூழ் கி நம்மைப்பூஜியுங்களென்று கூறி, சிவபெரு மானே அத்தீர்த்தத்தின்மூழ்கிக் கணாதிபர்க ளையு மூழ்குவித்து, சிவலிங்கத்துட்கலந்துவிர

திருந்தனர். பின்னர், சந்திராதி கஞ்ஞதியர்கள் அத்தீர்த்தத்தால் சோமசுந்தரக்கடவுளை யபிஷேகித்துப் பூஜித்துத்தங்கள் அபீஷ்டங்களை யடைந்தனர். இத்தெய்வதீர்த்தத்தை அபுத்தி பூர்வகமாய்த் தீண்டினும் தீவினைநீங்கி முத்தியெய்துவர். எங்ஙனமெனின், தீயினைநினைவின்றித் தொட்டாலும் சுடுவதுபோலாம். வருணம், ஆக்கினேயமந்திர ஜபங்களால் ஸ்நானஞ்செய்வோர் பெறும்பேறுகளும் இத்தீர்த்தஸ் நானஞ்செய்வோரடையும் பலனுக்கிணையாகா. அன்பின்றியத்தீர்த்தத்தின் மூழ்கினோன் சுவர்க்கமடைவன். அன்புடன்மூழ்கித்தேவர்கட்கு அரிசி, யெள்ளு தர்ப்பணஞ்செய்வோன் பலயாகங்கள்செய்த பலனடைவான்.

ஜனனநாளில், அத்தீர்த்தத்தின் மூழ்கினும், சித்திரை, கார்த்திகை, மாசி இந்தமாதங்களில் மூழ்கித் தென்புலத்தோர்க்குப் பிண்டதானஞ்செய்தாலும், பிறவித்துயர் நீங்கிமுத்தியடைவர். அத்தீர்த்தத்தின் பாங்கர்தென்புலத்தோர்க்கு எள்ளினால் தர்ப்பணஞ்செய்யின், எள்ளொன்றுக்கு ஆயிரமாண்டாக எத்தனையெள் உதவுகின்றனரோ அத்தனையாண்டு அவர்களை விண்ணுளவைப்பார்கள். அமாவாசை, மாசப்பிரவேசம், கிரகணகாலம், விதிபாதம் இந்நாட்களில் ஸ்நானஞ்செய்து தரு

ப்பணதானஞ்செய்தலும், மந்திரமோதலும், எண்ணிறந்த பலனைநல்கும். சித்திரை, மார்கழி இந்தமாசப்பிரவேசங்களில் மூழ்கினால் பதினுயிரமடங்கதிக பலனுண்டாம். தை, ஆடி மாசப்பிரவேசங்களில் மூழ்கினால் இருபதினுயிரமடங்கதிகபலனுண்டாம். அமாவாசைகூடிய சோமவாரத்தில் மூழ்கி, மந்திரோச்சாரணஞ்செய்தால் அனந்தமடங் கதிகபலனுண்டாம். பிரயாகையில், தைமாதமுப்பதுநாளு மூழ்கி யடையும்பலனை இத்தீர்த்தத்திலொருநாள்மூழ்குவோனடைவான். விரதசீலம்பூண்டு ஒருவருடம் இத்தீர்த்தத்தில் மூழ்கி, அங்கயற்கண்ணம்மையோடு சோமசுந்தரக் கடவுளையொருவருடம் வழிபட்டால், மலடிக்கும் நன்மகப்பேறுண்டாம். உலகிலுள்ள எல்லாத்தீர்த்தங்களும் இப்பொற்றாமரைத் தீர்த்தத்தின் கோடியிலோர்கூற்றுக்கு நிகராகாது. இத்தீர்த்தத்தைக் கண்டதனாலறமும், ஸ்பரிசித்ததனாற் பொருளும், அங்கையிலள்ளிக்கொள்வதனாலின்பமும், மூழ்கியதால் மோக்ஷமுங் கொடுக்கும். இத்தீர்த்தம் சிவபெருமானுடைய ஜடாமுடியிலுள்ள கங்கைநீரிற் கலந்தகாரணத்தால், சிவகங்கையென்றும், எல்லாத்தீர்த்தங்களிலு மேலானதால், தீர்த்த மோத்தமமென்றும், பொற்றாமரைமலர்ந்த காரணத்தினால், அது பொற்றாமரைத்தீர்த்த மென்றும்

பெயர்பெறும். இன்னும் அறமுதலிய நான்கி னையுந் தருதலால், தருமதீர்த்தம், அர்த்ததீர்த் தம், காமதீர்த்தம், மோக்ஷதீர்த்தம் என்றும் பெயராம். இத்தீர்த்தம் பாவமென்னும் விற குக்குத்தீயாகும். இதன்பெருமையைக்கேட் டோர்கள் இகபரசெல்வங்களையடைவார்கள்.

திருச்சிற்றம்பலம்.

---

## மூர்த்திவிசேடம்.

மேரு, கைலை, மந்தரம், கேதாரம், காசிமு தலிய தலங்களில் உள்ள சிவலிங்கங்கள்தோ ன்றுமுன்னர், இப்பதியில் கடம்பவிருக்ஷத்தி ன்கீழ் இச்சிவலிங்கமுளைத்தது. மேற்கூறிய தலத்துச் சிவலிங்கங்களெல்லாம் பின்னர் இ தனிடத்தில் கிளைத்தெழுந்தன. இக்காரண ங்களால் இச்சிவலிங்கம் மூலலிங்கமாய்ச்சிறக் கும். இந்த மஹாலிங்கத்தில் முப்பத்திரண்டு இலக்கணங்களோடும் சிவபெருமான் அருட் டிருமேனிகொண்டு உமாதேவியாரோடும் சந் ததம் எழுந்தருளி விளங்குவதால், சோமசுந் தரனென்றுவானோர் திருப்பெயர் சாத்தினர். எவ்வுலகங்களிலும் வியாபியாயிருக்கும் கட வுளே சோமசுந்தரனுகையாலே, பாண்டியன் கைப்பொற்பிரம்பு பட்ட அடித்தழும்பு திரி லோகத்திலும் பட்டது. இந்தச் சமஷ்டிரூப

ஞான சோமசுந்தரனைத் தரிசிக்கப்பெற்றவர்கள் ஏனைபதலங்களில் வியஷ்டிரூபமாயுள்ள சிவலிங்கங்களைத்தரிசித்தவர்களாவார். எங்ஙனமெனின், மரத்தின்வேரிற்பெய்த நீர்போய் மற்றையகிளைகளைத்தழைப்பித்தல்போலாம். மலைகளில் மேருவும், தருக்களிற்கற்பகமும், வேள்விகளில் அசுவமேதமும், தானங்களில் அன்னதானமும் சிறந்தன. மனிதர்களிலுயர்ந்தோர் ஆதிசைவர்களும், தேவர்களில் மஹாதேவனும், விரதங்களில் சோமவாரமுமாம். மந்திரங்களில் பஞ்சாக்ஷரமாம். மணிகளிற் சிந்தாமணியாம். தருமங்களில் சிவதருமமாம். பசுக்களிற் காமதேனுவாம். தீர்த்தங்களில் பொற்றாமரையாம். பிறதலங்களில் வைகும் எல்லாத்தேவரினும் சோமசுந்தரனே சிறந்தோனும். இச்சிவலிங்கத்தைத் தரிசித்துவணங்கினோர் பாவங்களெல்லாம் அழற்பொறிவாய்ப்பட்டபஞ்சுபோலும், ஆதவன் முன்னிருள் போலும் சிதைந்துபோம்.

உதயகாலத்தில் சோமசுந்தரக்கடவுளைத் தரிசிக்கப்பெற்றால், பூதானஞ்செய்தபலனெய்தும். உச்சிக்காலத்தில் தரிசிக்கப்பெற்றால் வேதியர்க்கு நூற்றுப்பத்து கோதானஞ்செய்தபலனெய்தும். மாலையில்வணங்கினால் கோடிபசுக்கள் தானஞ்செய்தபலனெய்தும். அர்த்தயாமத்தில் பணிந்தால் அசுவமேதயாகஞ்

செய்தபலனெய்தும். அச்சிவலிங்கப்பெருமானைக்குடங்கையளவு நீரினுலபிஷேகித்துப்பூஜித்தவர்கள், ஏனைய அனந்த தலங்களிலுமுள்ள சிவலிங்கமூர்த்திகளைச் சிவாகமவிதிப்படி பூசித்தோராவார். சோமசுந்தரக்கடவுள் திருமுடிமேல் ஒரு நன்மலர்கொண்டு சாத்தினல், பிறதலத்தில் நூறுமலர்கொண்டு பூசித்த பயனெய்தும். அக்கடவுளுக்கு ஒருகால்தூபங்கொடுப்போர் திரிகரணமொத்துச்செய்த குற்றங்கள் ஆயிரமாயிருந்தாலும் அவற்றை எம்பெருமான்பொறுப்பன். திருவமுதுநிவேதனஞ்செய்வோர், சாதமொன்றுக்கோருகமாகச் சிவலோகத்தில் நிலைத்து வாழ்வர். தாம்பூலமுகவாசமளிப்போர், தெய்வவருஷம் நூறுகோடி சிவலோகத்தில்வாழ்வார்கள். ஒருகருப்பூரவிளக்கிடுவோர், சிவசாரூபமடைவார். சோமசுந்தரக்கடவுள் திருமுன்னர் வாத்திய சகிதமாய்ப் பாடலாடல் செய்விப்போர், மூவுலகுந்தொழவாசாண்டு அரம்பையரொத்த மாதராடல்கண்டு இன்புற்று வாழ்வர். ஒருகால், அஷ்டாங்கமாயேனும், பஞ்சாங்கமாயேனும் மதுரைநாயகனைப்பணிவோர், செங்கோன்மன்னராய், பிறவரசர்கள் தங்களை எக்காலும் வணங்கவாழ்வார். இத்தகைய சோமசுந்தரக்கடவுள் திருமுன்னர் செய்யும் யாகங்களும், மந்திரங்களும், தானங்களும் அனு

வெனினும் மேருவளவாம். இச்சிவலிங்கத்தின் பெருமையெல்லா மெடுத்துரைக்க யாவரா லு முடியாது. இத்தலத்துக்கொப்பாகிய தல மும்,பொற்றாமரைக்கொப்பாகிய தீர்த்தமும், இவ்விலிங்கத்திற் கிணையான சிவலிங்கமும், சொர்க்க மத்திய பாதலமென்னு மூவுலகத்தி லுமில்லை.இந்தமூர்த்தி திருநாமங்கள், கர்ப்பூர சுந்தரன், கடம்பவனசுந்தரன், கலியாணசுந் தரன், அபிராமசுந்தரன், சண்பகசுந்தரன், மகுடசுந்தரன், மான்மதசுந்தரன், பழியஞ்சு சுந்தரன், சோமசுந்தரன், ஆலவாய்ச்சுந்தர ன், கூடனாயகன், மதுராநகர்வேந்தன், சம ட்டிவிச்சாபுரநாதன், சீவன்முத்தி புரநாதன், பூலோக சிவலோகநாதன், கன்னிபுரேசன், மூலலிங்கநாதன் என்பனவாதியவாம்.

திருச்சிற்றம்பலம்.

---



# இந்திரன்பழிதீர்த்தபடலம்.



கிரேதாயுகத்தில்பொன்னாட்டுக் கதிபனாகிய தேவேந்திரனானவன் கற்பகநிழலிலமைத்த சிங்காதனத்திலிருந்துகொண்டு, அரம்பைமாதர்களுடைய ஆடல்பாடல்களைக்கண்டு கேட்டு ஆனந்தக்கடலிலாழ்ந்திருந்தனன். அப்போது,தேவகுருவாகியவியாழபகவான் அங்கெழுந்தருள,அவர்க்குவழிபாடுசெய்யாதுமயலிலாழ்ந்தவனாயிருத்தலைக்கண் டவரேகியமாத்திரத்தில், இந்திரனுடைய செல்வங்குன்றலும், இஃது ஆசாரியரிடத்திற்செய்த அபசாரத்தால்விளைந்த கேடென்றுதுணிந்தவனாய், பலவிடங்களிலுந்தேடி குருவைக்காணாமல் சிந்தாகுலமுடையவனாய் பிரமலோகஞ்சேர்ந்து, சதுர்முகக்கடவுளைவணங்கி நிகழ்ந்தவற்றைப்போத, வியாழபகவானைக்காணுமளவும், துவட்டா என்னுமசுரனுடையபுத்திரனாகிய முச்சிரங்களுடைய விச்சுவவுருவனென்பவனை நீவழிபடுங்குருவாக வைத்துக்கொள்ளென்று பிரமதேவன்கூறினன். அதற்கிசைந்து,அவ்வாறேயவனை குருவாகக்கொண்டு, ஒருயாகஞ்செய்தலும், விச்சுவவுருவன் தன்னினத்தாராகிய அசுரர்களுக்கு நன்மையும், தேவர்கட்குத்தீமையுங்கருதிச்செய்ய, அச்செயலைஇந்திரனறிந்து, தன்வச்சிராயுதத்தால் அவனுடையமூன்று சிரங்களையுந்துணித்து வீழ்த்தினன். உடனே பிரமஹத்தியானது தேவேந்திரனைப்பற்

றனும், அதனைத்தேவர்கள், மரம், மண், மாதர், நீர்மேற்செலுத்தி, மரத்திற் பிசினாகவும், மண்ணிலுவராகவும், மாதரிடத்தில் பூப்பாகவும், நீரில்நுரையாகவும் தீர்கவென்றோதினர். அன்னோர், இப்பழிசுமந்த எங்கட்குயாதுநலமென்றுகேட்க,மரம்வெட்டுந்தோறுந் தழைத்தோங்கவும்,மண் அகழ்ந்தபோதும்அதனாலேயேவடுவொழிகவும்,மாதர்கருவுயிர்க்குமளவும் கணவர்தோண் மருவி வாழவும், நீரிறைக்குந்தோறுஞ்சுரக்கவு மநுக்கிரகித்தனர். இவ்வாறுதேவேந்திரன் தனக்குவந்தபழியையொழித்து வாழ்ந்திருக்க, துவட்டா என்னுமசுரன், தன்புதல்வனைத் தேவர்கோன்கொலை புரிந்தமையைக்கேட்டுத் துன்புற்று, பழிவாங்கக்கருதி யொருகொடியயாகஞ்செய்தனன். அதினின்றும் விருத்திராசுரனென்னும் ஓர்வீரன் தோன்ற, அவனைத்துவட்டாநோக்கி, நீபோய் என்புதல்வனைக்கொன்றமகவானை யெதிர்த்துக்கொல்லக்கடவையென்றாஞ்ஞாபித்தனுப்பினான். அவனவ்வாறேவந்து போர்புரிகையில், தேவேந்திரனந்த விருத்திராசுரனுடன் சிலநாள் அமர்செய்துவெல்லுதற்காற்றலற்றவனாய், பிரமனிடம்போய்முறையிட, பிரமன் இந்திரனையழைத்துக்கொண்டுதிருமாலிடஞ்சென்று நிகழ்ந்தனவெல்லாம் புகன்றனன்.விஷ்ணு இந்திரனைநோக்கி,உன்கையிலுள்ளவச்சிராயுதம்

மிக்கபழையதாகையால், சத்துருக்களைவெல்லவலியிலது. புதியதொன்று வேண்டியிருந்தவின், அதுபெறுமாறு ஓதுகின்றனன்.

பூர்வம் நாம் திருப்பாற்கடல் மதனஞ்செய்தபோது, தேவர்களும், அசுரர்களும் ஆயுதபாணிகளாய்வர, அங்ஙனம்வருதல்பழுதென்று அவ்வாயுதங்களையெல்லாம் வாங்கி ததீசிமகாரிஷியினிடஞ் சேர்ப்பித்தோம். பின்னர், பலநாட்கள் கழிந்தும் அவ்விருதிறத்தவரில் ஒருவரேனும் வந்து கேளாமையால், அத்தபோதனர் அவற்றை யெல்லாம் விழுங்க, அவையொன்றுதிரண்டு முதுகந்தண்டெலும்பாயிருக்கின்றது. அதனை நீயவர்பாற்சென்றிரப்பாயாகில், கருணாமூர்த்தியாகிய அவர் மறுக்காதுவழங்குவர் என்று விஷ்ணுமூர்த்திசொல்லக்கேட்டு, தேவேந்திரன் வானவர்களோடு ததீசி மகாமுனியிடஞ்செல்ல, அவர்கண்டு உள்ளமு முகமுமலர்ந்து இருக்கையளித்து, உபசாரமொழிகூறி, நீவிர்மிக்க மெலிவடைந்தீண்டடைந்த காரணம்யாது? விளங்கதநுரைத்தல் வேண்டுமென்ன, அமரர்பெருமான் நடந்தயாவு முறையேகூறி, முதுகந்தண்டெலும்பு வேண்டிவந்தவரலாற்றையுமெடுத்துக்கூறினன். ததீசிமகாமுனிகளிகூர்ந்து, யோகத்திலிருந்து பிரமரந்திரவழியாகக்கபாலத்தைக்கீண்டு, துறக்கநாடுசேர்ந்து இன்புற்றிருந்தனன்.

இப்பால், தேவேந்திரனனவன் அம்முனி புங்கவருடைய முதுகந்தண்டெலும்பை தெய்வத் தச்சனால் வச்சிராயுதமாக்கிக் கொண்டு விருத்திராசுரன்மேல் போர்க்குச் செல்ல, இருதிறத்தவரும் அமர்புரியாநிற்கையில், தேவேந்திரன் தன்கையினிடத்துள்ள வயிரப்படையை விதிர்த்தமாத்திரத்தில், அசுரன்பயந்து ஓடிக் கடலிற்புகுந்தொளித்தனன். இந்திரனும் அவனேடுகடலிற்பாய்ந்து தேடிக் காணமல், தாமரைவாசியாகிய நான்முகனிடம்வந்து மொழிய, அவன் நீ அகத்தியர்பாற் சென்று இதனைமொழிகவென்று அனுப்ப, அவ்வாறேயவரிடம் போய் உரைக்க, அவர்கருணைகூர்ந்து, வடவைத்தீயையுட்கொண்டு, கடலையுழுந்தினளவதாக்கி உள்ளங்கையிற்கொண்டு பானஞ்செய்தனர். கடல்வற்றியபின்னர், அதிலொளித்திருந்த வஞ்சகனகிய விருத்திராசுரனை, இந்திரன் அநாயாசமாகக்கொன்றனன். அதனல் பிரமசாயையானது நிழல்போற்றொடர்ந்து விடாது இந்திரனைவாட்டலும், அதற்குப்பயந்தவனய்ஈசானதிசையிற்போய், அங்கோர் தடாகத்திலுள்ள தாமரைநூலுக்குள்ளொளித்திருந்தனன்.

இவனிங்கிவ்வாறிருப்ப, தெய்வலோகத்தில் சிறிதுநாள் அரசாட்சியில்லாதிருத்தலும், பூலோகத்தில் அசுவமேதயாகஞ் செய்துகொ

ன்டிருந்த நகுஷனென்பவனைத் தேவர்கள் மு
டிசூட்டித் தங்கட்கு வேந்தனாகக்கொண்டனர்.
அரசனாகவந்த அவனும் காமாந்தகாரமன்னா
ய், விரைவில் இந்திராணியை இவ்விடத்தழை
த்து வாருங்களென்று பரிசனங்களையேவ, வ
ந்தழைத்தவர் சொற்கேட்டு இந்திராணிநடுங்
கி, குலகுருவாகிய வியாழபகவானிடம்போய்
குறைசொல்லிக்கொள்ளலும், அவர் சத்தவிரு
டிகள் சிவிகைதாங்க எழுந்தருள்பவன் எவ
னோ அவனே தேவர்பெருமானும், நினக்கு
நாயகனுமாமென் றருளினர். அதைக்கேட்டு
அவ்வாறேவருகவென்று அவள் தூதுவிடுப்ப,
சத்தமகாரிஷிகளால் தாங்கப்பெற்ற சிவிகை
மேற்கொண்டுவரும் நகுஷனனவன் வினைவ
சநோக்காமல், இந்திராணியுடன் இன்பநுக
ருங்காதற்பெருக்கால், விரைவிலேகும் என்ற
ருத்தங்கொள்ளும் "சர்ப்ப" என்னும் பதத்
தைப் பிரயோகித்தனன். உடனே முன்கொம்
பு தாங்கிச்செல்லும் அகத்தியமாமுனிவர்
வெகுண்டு நீ சர்ப்பமாகக்கடவையென்று சபி
க்கத் தக்ஷணமேயாயினான்.

பிறகு, தேவர்கள் தமது குலகுருவாகிய
வியாழபகவானைப்பணிந்து, சுவாமீ, இந்திர
லோகம் வேந்தனின்றித் துயருறுகின்றது எ
ன்று விண்ணப்பஞ்செய்ய, வியாழபகவான் க
ருணைகூர்ந்து தடாகத்தில் தாமரைநாளிற்

காந்திருந்தபுரந்தரனைப்போயழைத்துக்கொண்டுவரலும், அவன் ஆசிரியனைப்பணிந்து,நாயேனைப்பற்றிய பழியைத்தொலைப்பதெவ்வாறு? ஓ கருணாமூர்த்தியே, அநுக்கிரகித்தல்வேண்டுமென்ன, இப்பழி பூதலத்திலன்றி வேறெங்குமொழியாது, ஆகலின் நீ வேட்டைக்கென்று பூமியின்கண்வருவாயென்றனன், தேவேந்திரன் ஐராவதத்தின்மீ தாரோகணித்துக்கொண்டு, அமரர்குழாம் புடைசூழ்ந்துவர, மண்ணுலகில்வந்து, ஸ்ரீகைலாயத்தைத்தொழுது, கங்கைமுதலாயபல புண்ணியதீர்த்தங்களின்மூழ்கி, காசி திருக்கேதாரமுதலிய திவ்யக்ஷேத்திரங்களைத்தொழுது, கடம்பவனத்துக்குச் சமீபமாகச்செல்லாநிற்கையில், இந்திரனைப்பற்றியபழிவிலகி, சுமந்த பெரும்பாரங்கழிந்தானொத்து விளங்கக்கண்டு மிக்ககளிகூர்ந்து, இந்நிகழ்ச்சியை ஆசிரியர்பாலோத, அவர் இஃது மூர்த்தி, தலம், தீர்த்தப்பெருமை யுடையதாயிருத்தல்வேண்டும். ஆதலின் நீ சிலரைவிடுத்தறிகவென்று மொழிய, அவ்வாறே யனுப்பிய தூதுவர்போய்க் கண்டறிந்து வந்து, தேவேந்திரனடியிற்பணிந்து, பெருமானே, எவ்வுலகத்திலுங்காணாத ஒரு அதிசயமின்று அடியோம்கண்டுவந்தோம். அஃதென்னையெனின், இவ்வனத்தில் ஒரு புண்ணியதீர்த்தத்தின் பக்கத்தில் கடம்பவிருக்ஷ நீழ

பின்கண் சுயம்புவாய் ஒரு சிவலிங்கம் முளைத்திருக்கின்றது என்று புகலக்கேட்டு, ஆனந்த பரவசனாய், கைகளையுச்சிமேற்குவித்து, வழிக்கொண்டுபோய், தடாகத்தின் மூழ்கி, கடம்பவிருக்ஷ நீழலிலமர்ந்திருக்கும் பரஞ்சோதியைத் தனது ஆயிரங்கண்களாலுந்தரிசித்து, தண்டாகாரமாய் விழுந்தெழுந்து, கண்களிலானந்தபாஷ்பம் பெருக, மொழிகுழற, உடல்கம்பிக்க, நின்றுதுதித்து, அருச்சனைக்குவேண்டிய உபகரணங்களைப் பொன்னாட்டினின்றுங் கொண்டுவரும்படி தேவர்களைவிடுத்து, விமானமொன்றமைக்கும்படி தெய்வத்தச்சனுக்காஞ்ஞாபித்து, தடாகத்தையணைந்து, சிவபெருமானை யருச்சிக்க மிக்கவிருப்பினனாய், மலர்கிடையாதயரும்போது, அத்தீர்த்தத்தில் பரமசிவனருளால், பலகோடி பாலசூரியர்கள் கடன்முகட்டி லுதித்தாற்போல் பொற்றாமரைமலரக்கண்டு, அன்பின் மிகுதியா லானந்தக்கூத்தாடி, இதற்கு இனிமேல் பொற்றாமரைத்தீர்த்தமென்று பெயர் விளங்குகவென்று கூறி, அத்தீர்த்தத்தின்மூழ்கி, பொற்றாமரையைக் கொய்தெடுத்து, சிவலிங்கத்தண்டைவந்து சூழ்ந்திருந்த கடம்பவனத்தைவெட்டி நிலந்திருத்திவருமளவில், சூரியகிரணம் சிவலிங்கத்தைத்தீண்டக்கண்டு அயர்வெய்தி, தனது வெண்குடையால் நிழ

ல்செய்ய, அத்தருணத்தில், சூரியமண்டலமி ழிந்துவருவதுபோல், தகதகாயமாய் அஷ்ட திக்கயங்களால் தாங்கப்பட்டு வானுலகத்தி னின்றும் வந்த விமானத்தைச் சிவலிங்கப் பெருமானுக்குச்சாத்தி, பொற்றாமரைத் தீர் த்தத்தில் ஸ்நானஞ்செய்து, தேவர்கள்கொண் டுவந்த பொருள்களால் சிவபெருமானை ஆகம விதிப்படியருச்சித்து, அன்பின் மிகையாலா டிப்பாடித்துதித்து நின்றனன்.

அப்போது,சிவபெருமான் அவனைநோக்கி, அன்பனே, உனக்கென்னவரம் வேண்டுமெ ன்று திருவாய்மலர்ந்தருள, புரந்தரன் பணிந் து, இருகரங்களையுஞ்சென்னிமேற்கூப்பி,கரு ணைக்கடலே, என்னைவிடாதுநிழல்போற்றொ டர்ந்துவந்தகொடும்பழியானது, உன் எல்லைக் கணித்தாக வந்தபோதே யொழிந்தது, அடி யேனும்மை யருச்சிப்பதற்கும்உரியனானேன், இதனிலும் பெரும்பேறு எனக்கென்னிருக்கி ன்றது. உமது திருவடித்தாமரைகளை இவ் வாறே நான் என்றும்பூசித்து, உம்மடியாருள் யானுமொருவனாகும்படி யனுக்கிரகஞ்செய்த ல் வேண்டுமென்று பிரார்த்திக்க, பரமசிவன் கருணைகூர்ந்து, நீ வருடந்தோறும் சித்திரை மாதத்தில் வருகிற சித்திராபௌர்ணமியில் வ ந்து நம்மையருச்சிப்பாயாயின், முந்நூற்றரு பத்தைந்து நாள்களுமருச்சித்த பயனெய்து

பின்கண் சுயம்புவாய் ஒரு சிவலிங்கம் முளை த்திருக்கின்றது என்று புகலக்கேட்டு, ஆன ந்த பரவசனாய், கைகளையுச்சிமேற்குவித்து, வழிக்கொண்டுபோய், தடாகத்தின் மூழ்கி, கடம்பவிருக்ஷ நீழலிலமர்ந்திருக்கும் பரஞ் சோதியைத் தனது ஆயிரங்கண்களாலுந்தரி சித்து, தண்டாகாரமாய் விழுந்தெழுந்து, க ண்களிலானந்தபாஷ்பம் பெருக, மொழிகுழ ற, உடல்கம்பிக்க, நின்றுதுதித்து, அருச்ச னைக்குவேண்டிய உபகரணங்களைப் பொன் னாட்டினின்றுங் கொண்டுவரும்படி தேவர்க ளைவிடுத்து, விமானமொன்றமைக்கும்படி தெ ய்வத்தச்சனுக்காஞ்ஞாபித்து, தடாகத்தையு ணைந்து, சிவபெருமானை யருச்சிக்க மிக்கவி ருப்பினனாய், மலர்கிடையாதயரும்போது, அ த்தீர்த்தத்தில் பரமசிவனருளால், பலகோ டி பாலசூரியர்கள் கடன்முகட்டி லுதித்தாற் போல் பொற்றாமரைமலரக்கண்டு, அன்பின் மிகுதியா லானந்தக்கூத்தாடி, இதற்கு இனி மேல் பொற்றாமரைத்தீர்த்தமென்று பெயர் விளங்குகவென்று கூறி, அத்தீர்த்தத்தின்மூ ழ்கி, பொற்றாமரையைக் கொய்தெடுத்து, சி வலிங்கத்தண்டைவந்து சூழ்ந்திருந்த கடம்ப வனத்தைவெட்டி நிலந்திருத்திவருமளவில், சூரியகிரணம் சிவலிங்கத்தைத்தீண்டக்கண்டு அயர்வெய்தி, தனது வெண்குடையால் நிழ

ல்செய்ய, அத்தருணத்தில், சூரியமண்டலமி ழிந்துவருவதுபோல், தகத்தகாயமாய் அஷ்ட திக்கயங்களால் தாங்கப்பட்டு வானுலகத்தி னின்றும் வந்த விமானத்தைச் சிவலிங்கப் பெருமானுக்குச்சாத்தி, பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, தேவர்கள்கொண்டுவந்த பொருள்களால் சிவபெருமானை ஆகம விதிப்படியருச்சித்து, அன்பின் மிகையாலாடிப்பாடித்துதித்து நின்றனன்.

அப்போது,சிவபெருமான்அவனைநோக்கி, அன்பனே, உனக்கென்னவரம் வேண்டுமென்று திருவாய்மலர்ந்தருள, புரந்தரன் பணிந்து, இருகரங்களையுஞ்சென்னிமேற்கூப்பி,சருணைக்கடலே, என்னைவிடாதுநிழல்போற்றொடர்ந்துவந்தகொடும்பழியானது, உன் எல்லைக் கணித்தாக வந்தபோதே யொழிந்தது, அடியேனும்மை யருச்சிப்பதற்கும்உரியனானேன், இதனிலும் பெரும்பேறு எனக்கென்னிருக்கின்றது. உமது திருவடித்தாமரைகளை இவ்வாறே நான் என்றும்பூசித்து, உம்மடியாருள் யானுமொருவனாகும்படி யனுக்கிரகஞ்செய்தல் வேண்டுமென்று பிரார்த்திக்க, பரமசிவன் கருணைகூர்ந்து, நீ வருடந்தோறும் சித்திரை மாதத்தில் வருகிற சித்திராபௌர்ணமியில் வந்து நம்மையருச்சிப்பாயாயின், முந்நூற்றறுபத்தைந்து நாள்களுமருச்சித்த பயனெய்து

வாய், ஆகலின் இனி நீ விண்ணுறெய்திப் பல போகங்களு மநுபவித்து, மேல் மலபரிபாகம் பெற்று நம்முலகஞ்சேர்வாய் என்று தயாநிதியாகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்து விடைதந்தருளப் பெற்றுக்கொண்டு, ஆனந்தபரவசனாய்ப், கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருக ஆனந்தக்கூத்தாடிப்பன்முறைவணங்கித் துதித்து, நீங்காத மெய்யன்பினால் சிவபெருமானை விட்டுப் பிரியச்சிறிதும் மனமில்லாதவனேனும், அவராணைக்கஞ்சினவனாய், கற்பகநாடடைந்து தேவர்கள் பூமாரிபொழிய, அரம்பைமாதர் இருமருங்குஞ் சாமரைவீச, இந்திராணியுடன் பலபோகங்களையு மநுபவித்துக் கொண்டு, பரமசிவனைக் கனவிலுமறவாமல், முன்போல்பொன்னாட்டிலாக்ஷிசெலுத்திக்கொண்டு வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம்.

சிவாம்ச பூதராய்த் திருவவதாரஞ்செய்துள்ள மஹா முநிபுங்கவராகிய துருவாசர்காசி க்ஷேத்திரமடைந்து, ஆங்கேதன்பெயரால் ஆகமவிதிப்படியோரிலிங்கம் ஸ்தாபித்து, மிக்க வுன்னதமோடு அருச்சனைபுரிகையில், பரமசிவத்தின் திருவருளால் முடிமீதினின்று மோர்

தாமரை மலர்வீழலும், அதனை இருகரங்க ளாலுந்தாங்கிக்கொண்டு, கண்களிலும் சிரத்திலும் மார்பகத்திலுமொத்திக்கொண்டு, உடல்பூரிக்க, ஆனந்தமேற்கொண்டு, அவ்விடம் விட்டுப்புறப்பட்டு, விண்ணூட்டிற் செல்லாநிற்கையில், தேவேந்திரன் ஐராவதத்திலாரோகணித்து, அந்தரதுந்துபிமுதலிய பலமங்கல வாத்தியங்கள் கடல்போன் முழங்க, முனிவர்கள் பல்லாண்டுகூற, அரம்பைமாதர் கானஞ்செய்ய, அமரர்குழாத்தோடு மிக்க விபவாலங்காரத்துடன் பவனிவருங்கோலத்தைக்கண்டு, துருவாசமுனிவர் ஆசிமொழிகூறித் தாம்கொண்டுவந்த தாமரைமலரை யவன் கையிற்கொடுப்ப, அதை யொருகரத்தால் வாங்கிந்தன்பட்டயானை மத்தகமேல் வைத்தனன். உடனே, அவ்வெள்ளையானை யானது, அதனைக் கீழேவீழ்த்தித் தன்காலாற் சிதைத்தலும், அதைக்கண்ணுற்றதுருவாசர் பிரளயகாலருத்திரனைப் போல்கண்களில் அழற்பொறிசிதற மிகச்சினந்து இந்திரனை நோக்கி, ஓ பேதாய்! சர்வலோகைக நாயகனாகிய பரமேஸ்வரனுடைய அடியார்கள் அருவருத்துத் தள்ளியசெல்வத்தருக்கினால் சிறிது மதியில்லாமலென்ன காரியஞ் செய்தனை? தேவர்கள் தரும் பரிசுகளையே பொருளாக மதித்தனையே யன்றி, எம்பெருமான் திருமுடிமேற் சாத்திய

மலமைமதியாதேற்று நின்யானை மிதித்துச் சிதைக்கச்செய்தனை. பசுந் துழாய்மாலையணிந்த திருமாலுடைய இறுமாப்பும், கமலாசனனாகிய சதுர் முகனுடைய இறுமாப்பும், தேவர்கள் தொழவாழு முனது இறுமாப்பும், இவை யெல்லாமெமது பகவானாகிய சிவபெருமானை யருச்சித்துப் பெற்றபேறென்று நீ சிறிது முணர்ந்தாயில்லை யாகலின், உன்னுடைய தலையானது பாண்டியரி லொருவீரனால் சிதறக்கடவது. நின்வாகனமாகிய அயிராவதமும் காட்டானையாகுகவென்று கடுஞ்சாபமிட்டனர். அதனைக் கேட்ட தேவர்கள் மிகப்பயந்து, துருவாசமகாரிஷியின் பாதங்களில்விழுந்து வணங்கி, சுவாமீ, தேவரீர்திருவுள்ள மிரங்கியிதனை க்ஷமித்தருளல்வேண்டுமென்று குறையிரக்க, அவர்சிறிதுகோபந்தணிந்து, சிவபெருமானுடைய நிர்மாலியத்தை நிந்தித்த பெருந்தோஷமானது, எவ்விதமான பிராயச்சித்தத்தாலுமொழியாது, ஆதலால் தலைக்குவந்ததுமகுடமாட்டாகுக, வெள்ளையானை காட்டானையாகி நூறாண்டு கழிந்தபின் பழையநிலையடையக்கடவதென்று பிறிதுசாபம் வழங்கினர். இந்திரன் மகுடபங்கமடைந்தது பின்னருரைக்கின்றோம். அது நிற்க, அயிராவதமானது பொன்னாடு நீங்கி, அறிவிழந்து, காட்டிலுள்ள யானைகளுடன் சேர்ந்து, பலவனங்

களிலும் மலைகளிலுந் திரிந்து நூறுவருடமு ங்கழிந்த பின்னர், கடம்பவனம் வந்து சேர்ந் தது. அப்போது, பரமசிவத்தின் திருவருள் வந்து கூட,முன்னறிவு விளங்கப்பெற்று பொ ற்றாமரைத்தீர்த்தத்தை யணைந்து, ஸ்நானஞ் செய்து, பண்டையவடிவ மெய்தி, எதிரே பரமசிவனது அருட்குறியாகிய சிவலிங்கந் தோன்றக் கண்டு, அருச்சிக்கப் பேரன்புகொ ண்டு, தன்தும்பிக்கையால் தீர்த்தங்கொண் டுபோய் திருமஞ்சனஞ் செய்து, மலர் கொ ண்டு சாத்தி யருச்சனை செய்தது. அன்புக் கெளியனாகிய சிவபெருமான் கருணைகூர்ந்து, அந்தயானையை நோக்கி, நீவந்தகாரணம் யா து? வேண்டிய வரமென்னை? மொழிகவெ ன்று திருவாய் மலர்ந்தருளலும், வெள்ளையா னையானது, சிவபெருமான் ஸ்ரீபாதங்களில் வீழ்ந்திறைஞ்சி, முன்நிகழ்ச்சியும், வந்த கா ரணத்தையுமுறையே கூறி, சுவாமி, உம்மு டைய சந்நிதானத்தையடையப் பெற்றவெ னக்கு இனி என்ன குறைவுளது? உம்முடை ய விமானத்தைத் தாங்குகின்ற இவ்வெட்டுக் கரிகளோடு அடியேனுமொன்றாயும்முடைய திருவடிபிரியாதிருந்து, முதுகிற்சுமக்கவேண் டு மென்று எனக்கு ஒரெண்ணஞ் செனித்தி த்திருப்பதாலதனை யநுக்கிரகித்தல் வேண் டுமென்றிரந்தது, பரமசிவனவ்வாறே நல்க,

விடை பெற்றேகும் வெள்ளையானை யானது, மேற்றிசையடைந்து, தன்பேரால் ஒரு தீர்த்த முண்டாக்கி, அதன் பாங்கர் சிவலிங்கத்தையுங் கணேசமூர்த்தியையுந் தாபித்தருச்சனை செய்து நீங்காப்பேரன்போடிருக்குங் காலையில், இச்செய்திகேட்டு வானவர்கோமான் சிலதூதுவரை விடுத்து யானையைக் கொணருபடி யாஞ்ஞாபிக்க, வந்தவர்களை வெள்ளையானை முன் செல்லப் போக்கி, தான் கீழ்த்திசை யடைந்து, தன்பேராலொரு ஊர் கண்டு, இந்திரேச்சுரமெனத் தன்னிறைவன் பேரா லொன்றுதாபித்து, அவ்விடத்துப் பரமசிவனை யருச்சித்துக் கொண்டிருந்தது. இந்திரன் யானை இன்னும் வந்திலதென்று மறுவேகத்தினுங்கடிய சிலதூதரை விடுப்ப, அவர்களுடன் விண்ணுடெய்தி, இந்திரனைப்பணிந்து, காடு மலைகளில் பன்னாள்திரிந்திருந்ததும், கடம்பமாவன மடைந்ததும், சிவபெருமானருளால் சாபந்தீரப்பெற்றதுமாகிய விளைவுகளெல்லா முறைமே யெடுத்தோதி இனிது வாழ்ந்திருந்தது.

திருச்சிற்றம்பலம்

# திருநகரங்கண்டபடலம்.

பாண்டியகுலதிலகனாகிய குலசேகரன் என்பவன், கடம்பமாவனத்தின் கீழ்பாலுள்ள மணவூரில் அரசுசெலுத்தி வருகையில், அப்பதியிலுள்ளவணிகரில், மிக்கதரும சீலனும், சிவபெருமான் திருவடிகளில் நீங்காத பேரன்புடையவனுமாகிய தனஞ்சயனென்பவன், மணவூரினின்றும் புறப்பட்டு வர்த்தகவிஷயமாய் மேற்றிசைக்கண்சென்று திரும்புகையில், கடம்பமாவனத்தை யணையும்போது சூரியன் அஸ்தமனமாக, மிக்க இருள்சூழ்ந்த அவ்வனத்தில் இந்திரவிமானத்தி லெழுந்தருளியிருக்கின்ற பரஞ்சோதியைக்கண்டுவணங்கி, ஆனந்தபரிதனாய், அவ்விரவை யங்கேகழிக்கவெண்ணித் தங்கியிருந்தனன். அன்று சோமவாரமாதலால், தேவர்களங்கெய்தி, சிவபெருமானுடைய ஸ்ரீபாதங்களைத்தொழுது, அவ்விரவைச் சிவராத்திரிபோலுங்கருதி, நான்குசாமத்திலும் அன்போடு அருச்சனைபுரிந்துகொண்டிருந்தனர். தேவர்கள் வந்ததையும், அருச்சனைசெய்வதையும், மெய்யன்புடையானாகிய தனஞ்சயனென்னும் வணிகன் சிவகடாக்ஷத்தால் கண்டு, தானுமருச்சனைக்குவேண்டிய பொருள்களைக் கொண்டுபோய், தேவர்கள் கையிற்கொடுத்து, எம்பெருமானையருச்சித்துக் கொண்டிருந்தனன். பொழுதுவிடிந்தபோது, தேவர் கூட்டத்தி லொருவரையுங் காணாது,

விமானத்தின்மேல் தனித்திருக்கும் பரமசிவனைமாத்திரங்கண்டு, அதிசயமடைந்து, திருவடியிற்பணிந்து, எழுந்து இருகரங்களையு முச்சிமேற்குவித்து, வலம்வந்து, விடைபெற்றுக்கொண்டு தன்பதிக்கேகி, பாண்டியனாரண்மனையடைந்து, எம்மரசே! நேற்றுநான் கடம்பமாவனத்திலோ ரதிசயங்கண்டேன் என்று தான்கண்டவற்றையெல்லா மெடுத்தோத, குலசேகரபாண்டியன்கேட்டு மிக்கவானந்தமு மதிசயமுமடைந் திருந்தனன். அன்றிரவில் அப்பாண்டியனுடைய சொர்ப்பனத்தில் சிவபெருமான் ஒருசித்தராய்த் திருவேடம்பூண்டுவந்து, பாண்டியனைநோக்கி, அன்பனே! நீ கடம்பமாவனத்தைத் திருத்தி நகராக்குகவென்று பணித்துச்சுவாமி மறைந்தருளலும், பாண்டியன் விடியற்காலையிலெழுந்து, நித்தியக்கடன்களை முடித்து, அமைச்சர்கள் பெரியோர்கள் முதலியவர்கட்குத் தன்கனாவின் செய்தியையோதி, நனவிற்கேட்டதுங் கனவிற்கண்டதுமொத்திருந்தலால், உடனே மந்திரிமுதலானவர்களோடு, அக்கடம்பவனமெய்தி,பொற்றாமரைத் தீர்த்தத்தின்மூழ்கி, சோதிமயமாகிய பொன்விமானத்தி லெழுந்தருளியிருக்கும் பரமசிவனைப்பணிந்து, அஞ்சலியஸ்தனாய், கண்களிலானந்தபாஷ்பம்பெருக, என்பு நெக்குருக, உடல்கம்பிக்க, ஆடிப்பாடித்து

தித்துப் பிரதக்ஷணம்வந்து, ஒருபுறம் அமைச்சரோடிருந்தனன். இவ்வாறிருக்கையில், அரசனுக்ஞையால், காடுவெட்டுந்தொழிலாளர்கள், மரங்களையெல்லாம் வேரொடுங்களைந்து, நிலந்திருத்திச் சீர்ப்படுத்தியதுகண்டு, பாண்டியன், நகரங்காண்பது எவ்வாறென மந்திரிகளோடு ஆலோசனை செய்துகொண்டிருக்கையில், சிவபெருமான் இரவில் சொர்ப்பனத்திலெழுந்தருளியதுபோல நனவிலு மவ்விடம் வந்து, அன்பனே! வேதாகமவிதிப்படி, ஆலயம், மண்டபம், கோபுரம் முதலியன இன்னவாறுசெய்கவென்று வகுத்துச் சொல்லிவிட்டு மறைந்தனர். உடனே பாண்டியன் சிவபெருமான் திருவாய்மலர்ந்தபடி, சிற்பநூற்புலவர்களைக்கொண்டு, பதுமமண்டபம், அருத்தமண்டபம், சிகைமண்டபம், அறுகான்மண்டபம், நிருத்தமண்டபம், விழாமண்டபம், வேள்விச்சாலை, திருமடைப்பள்ளி, பரிவாரதேவர்கள்கோயில், வலதுபாரிசத்தில் மீனாக்ஷியம்மை ஆலயம், கோபுரம், மாடவீதி, பெருவீதி, சந்து, நாற்சதுக்கம், மன்று, செய்குன்று, ஆடரங்கு, முனிவரிருக்கை, அந்தணர்வீதி, யானை, தேர், குதிரை நிலைக்களங்கள், அறச்சாலை, தடாகம், குளம், பொய்கை, நந்தவனம் முதலியன பிறவுங்கண்டு, தனக்கு மாளிகை அந்நகரத்துக்கு வடகீழ்த்திசையி

லைப்படுத்தி, பட்டணத்தைச் சாந்திசெய்ய வெண்ணினன். அதைச் சிவபெருமானறிந்து, தமது சடாபாரத்திலுள்ள சந்திரகலையின முதைச் சிதறவிட்டனர். அதுபோய் நகர்முழுவதையுந் தன்மயமாக்கிப் புனிதஞ்செய்து சாந்தியாக்கியது. அஃது மதுரமயமாயிருந்ததன்மையால், மதுராநகரம் என அதற்குக் காரணப்பெயர் வந்தது. பின்னர், கீழ்த்திசைக்குச் சாத்தனையும், தென்றிசைக்குச் சத்தமாதரையும், மேற்றிசைக்குத் திருமாலையும், வடதிசைக்குக் காளியையும் காவலாகவைத்து, சிவபெருமானை யருச்சிப்பதற்குக் காசியினின்றும் வைதிகப்பிராமணர்களையும், ஆதிசைவவேதியர்களையும் கொண்டுவந்து மதுரையில்தாபித்து, பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் நால்வகையார்குலக்குடிகளையும், அநுலோமர் முதலிய மூவகைப்புறக்குடிகளையும், தத்தம்வர்ணாச்சிரமநெறிவழுவாதொழுகவும், வைதிகமுஞ் சைவமுந் தழைத்தோங்கவும் குடியேற்றி, நகரைமிக்கவளப்படுத்தி, அன்றுமுதல் தானந்நகரத்திலிருந்து, சிவபெருமானுக்குப் பூசனையுச்சவமுதலியன குறைவற நடாத்தி பொதுக்கடிந்து, செங்கோல்செலுத்திவருகையில், பாலசூரியனைப்போல் மலயத்துவசனென்னும் புதல்வனைப்பெற்று, பூபாரத்தை யவன்மேற்சுமத்தி,

பலநாள் சென்றபின்னரொருநாள், சொக்கலிங்கப்பெருமானுடைய ஆலயத்தெய்தி, நாதனைப்பணிந்து, மும்முறைவலம்வந்து, ஸ்ரீபாத நீழலில் இரண்டறக்கலந்து பேரின்பவாழ்வை யடைந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

# தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப்படலம்.

மலயத்துவசபாண்டியன் மதுராபுரியிலரசுசெலுத்திவருகையில், போகமாதர்பதினாயிரவரோடு, சூரியவம்சோத்பவனை சூரசேனன் குமாரத்தி காஞ்சனமாலையை மணம்புரிந்து, பலநாள் மகப்பேறின்றி வருத்தமுற்று, பலவகையான தானதருமங்கள்செய்து, பின்னர், அசுவமேதயாகஞ்செய்யத் தொடங்கினான். தொண்ணூற்றொன்பது பரிமேதமும் நிறைவேற, தேவேந்திரனானவன் மற்றொரு யாகமு முடிவுபெறுமாயின், நமது பதம்போமெனக்கருதி, மலயத்துவசனை யடைந்து, நீமகப்பேறுவிரும்பினையாதலின், அதற்கிசையபுத்திரகாமேஷ்டியாகமியற்றினால் காரியசித்தியடைவாயென்றோதித்தன்னாட்டுக்கேகினான். அக்கணமே, பாண்டியன் அதற்குரியயாவை

யுமமைத்து தன்றேவியாகிய காஞ்சனமாலையோடும் யாகசாலைக்குப்போய், விதிப்படி யெரிவளர்க்கையில், அந்தயாககுண்டத்தில், சகலலோகமாதாவாகிய பார்வதியானவள், சர்வாபரணலங்கிருதையாய் மூன்றுவயதுடைய மும்முலைகளோடுங்கூடிய பெண்குழந்தையாய் நின்றனள். அக்குழந்தையைக்கண்டமாத்திரத்தில், பெருதுபெற்றவளாகிய காஞ்சனமாலையானவள், எடுத்துமார்போடணைத்துச்சிமோந்துமுத்தமிட்டு, கரைகாணக் களிகூர்ந்திருந்தனள். அப்போது, மலயத்துவசபாண்டியன் உமாதேவியே தனக்கரும்பெறன்மகவாய் வந்ததற்கு மகிழ்வெய்தாமல், நான்பலநாள் மகப்பேறின்றியருந்தவமாற்றினேன். அத்தவப்பயனானது எனக்கொருபெண்மகவையேதந்தது, அவ்வாறுதித்தபெண்ணும் பகைவர் நகைக்கும்படி, மும்முலைப்பெண்ணாய்த் தோன்றியதேயென்று மிக்கசிந்தாகுலனாய்த் தளராநிற்கையில், "அரசனே! நின்பெண்ணுக்கு, மைந்தர்போலெல்லாச்சடங்குகளையும் வேதவிதி வழாதுசெய்து, தடாதகையென்று திருநாமமிட்டு, முடிசூட்டக் கடவாய். இப்பெண்ணுக்கு நாயகன்வருங்கால் ஓர்முலைமறையும். ஆகையால், நீ மனம் வருந்தேலென்று பரமசிவனது திருவருளால் ஆகாயத்திலோர்சரீரிவாக்குண்டாயிற்று. அத்திருவாக்கைக்கேட்டவுட

னே பாண்டியன் ஆனந்தமேற்கொண்டு, யாக த்தைப்பூர்த்திசெய்து, தன்பத்தினியோடு ம வ்விடம்விட்டுப்புறப்பட்டு, அரண்மனையடை ந்து, பலவகைதானங்கள்செய்து, ஸ்ரீசுந்தரே சர் ஆலயத்தில் பலசிறப்புகள்நடாத்தி, தளை பட்டிருந்த வேந்தர்களையும், மற்றவர்களையும் சிறையினின்றும் விடுவித்து, நகரெங்குமங்கல மோங்க, சாதகர்மமுதலியசடங்குகளை நிறை வேற்றி, தடாதகையென்று திருப்பெயர்சா த்தி,மிக்க அருமையோடு வளர்த்துவந்தனன். தடாதகையார்பலகலைகளுந்தெளிந்து, யானை யேற்றம், குதிரையேற்றமுதலியனவும், வில் வித்தை முதலியபடைத்தொழிலும்பயின்று, மிக்க வல்லவளாயிருந்தலை வயோதிக தசைய டைந்த மலயத்துவச பாண்டியன்கண்டு, அர சர்கட்கெல்லாந் திருமுகம்போக்கிவருவித்து நகரையலங்கரித்து, நல்லசுபதினத்தில் மிக்க விபவாலங்காரத்தோடு, தன்திருமகட்கு முடி சூட்டி,தன்னரசுரிமையைத்தந்து விண்ணுல கடைந்தனன். பின்னர், தடாதகைப்பிராட்டி யார்தந்தைக்கு ஈற்றுக்கடன்களை நிறைவேற் றி, சிங்காதனத்திலிருந்து, பொதுக்கடிந்து செங்கோலோச்சி, மன்னுயிரைத் தன்னுயிர் போல்பாதுகாத்து மநுநீதிதவறாமல் அரசுசெ லுத்திவந்தனள். கன்னிப்பருவத்தில் பிராட் டியார் அரசுபுரிந்தகாரணத்தால், அந்நாடுகன்

ணிரடெனப் பெயர்பெற்றது, என்று அகத்தியமுனிவர் கூறக்கேட்டுவந்த முனிவர்கள், சுவாமீ, நான்கு வேதங்களினந்தமுங் காண்டற்கரிய பெருமையினையுடைய தேவியார், தன்பால் மிக்க அன்புடையதக்கனும், மலையாசனும் நெடுநாள்வருந்தித் தவஞ்செய்தலால்,அவர்க்கொரு பெண்ணாயவதரித்தனள். மனிதனாகிய பாண்டியனுக்குத் திருமகளாய்வந்த காரணம்யாது? என்றுவினவ, அகத்தியமாமுனிவர், ரிஷிகளே! பூர்வம், விச்சுவாவசுவென்னும் ஒருவித்தியாதரனுடைய புதல்வியாகிய விச்சாவதி யென்பவள், அம்பிகையிடத்து மிக்க அன்புள்ளவளா யிருந்தபடியால், தன்தாதையை நோக்கி,நான்தேவியை வழிபட்டுய்யுநெறி யருள்வாயென்றுபிரார்த்திக்க,தந்தையானவன் கௌரிமந்திரத்தை யுபதேசித்தன்,அந்நெறியேயொழுகுபவளாய் தாதையை நோக்கி,பூலோகத்தில் நான் அம்பிகையை வழிபடத்தக்க சிறந்த தலம் ஒன்றுரையெனக் கேட்ப,அவன் மண்ணில் மூர்த்தி,தலம்,தீர்த்த முதலியவற்றிற் சிறந்ததும், அறுபத்துநான்கு சத்திபீடங்களில் முதன்மைபெற்றதும், துவாதசாந்தபுரமாகியமதுரையேயாம். அங்கு எழுந்தருளியிருக்கின்ற அங்கயற்கண்ணம்மையார், யாவராயினும் தன்னை அன்பின் வழிபடுவோர்க்கு இகபரசெல்வங்களையளிப்பாள்,

என்றுகூறிய தந்தையை வணங்கி விடை பெற்றுக்கொண்டு மதுராநகரெய்தி, பொற்றாமரைத் தீர்த்தத்தில் மூழ்கி, மீனாக்ஷியம்மையைப்பணிந்து, தைமாதந்தொடங்கி உணவு முதலியன துறந்து, வருந்தி நோற்று மறுவருடம் தைமாதத்தில் மீனாக்ஷியம்மைசந்நிதியடைந்து, கையில்யாழேந்தி, அம்மையார்புகழைப்பலவாயெடுத்து அதிமதுரமாய் கானஞ்செய்தனள். தேவியார்கருணைகூர்ந்து வரங்கொடுத்தருள மூன்றுவயதுடைய பெண்குழந்தையாய் எதிர்வந்து நிற்றலும், கண்டுவணங்கிய விச்சாவதியை நோக்கி, அம்மையார் யாதுவரம் வேண்டும் எனத்திருவாய்மலர்ந்தருள, அன்னையே! எக்காலும் உன்பாதாரவிந்தத்தில் நீங்காத அன்பும், இம்மகவுருவோடு நீ என்பால் வந்திருக்க அருளும் அளித்தல் வேண்டுமென் றிரந்துகேட்டனள், தேவியார், மலயத்துவசனென்னும் பாண்டியனுக்கு நீ மனைவியாகவருவை, அப்போது, நான் உன்னிடத்தில் மகவாய் வருவேன் என்று, அநுக்கிரகஞ்செய்தனள். இதுதான் நடந்தகதையென்று அகத்தியமாமுனிவர் ரிஷிகணங்களுக்கு விடையளித்தனர்.

திருச்சிற்றம்பலம்.

---

# தடாதகைப்பிராட்டியார் திருமணப்படலம்.

தடாதகைப்பிராட்டியார் மனுநீதி வழுவாமல் பாண்டியநாட்டில் அரசுபுரிந்துவருநாளில், மணப்பருவம் வந்தடுப்ப; ஈன்றாளாகிய காஞ்சனமாலைகண்டு இன்னம் நமது திருமகட்குமணப்பேறு வாய்க்கவில்லையேயென்று மிகுந்த சிந்தாகுல முடையவளாய்ச் சொல்லும்போது, அதுசெவியுற்ற தடாதகையார் அன்னையே! நீ எண்ணியகாரியம் நிறைவேறுங்காலம் வரும்போது முடியும். அதுபொருட்டு நீ மனம்வருந்தல்வேண்டாம். நான் உலகெங்கும்போய்த் திக்குவிஜயஞ்செய்து ஜயபதாகைநாட்டி மீண்டுவருகின்றேன் என்று விரைவிலெழுந்து பிரயாணப்பட்டனள். அப்போது, சாரதி தேர்கொண்டுவர, அதன்மீதாரோகணித்துக்கொண்டு, வேந்தர் அமைச்சர், ரதகஜதுரகபதாதிகள் தன்னைப் புடைசூழ்ந்துவர, பலவகைவாத்தியங்கள் கடல்போலொலிக்கச்சென்று, திக்குப்பாலர்களையெல்லாம்வென்று, திறைகொண்டு, கைலையைநோக்கிச் சென்றனள். அதனைச்சமீபித்தலும், சேனாவீரர்கள் முற்றிலுஞ் சூழ்ந்துவளைத்துக்கொண்டு, ஆரவாரிக்க, அதுகண்டகைலைமலைக் காவலர்கள் நந்தியெம்பெருமானிடஞ் சென்று கூறினர். அவர் கணங்களோடும் வந்து, தேவியாரோடு போர் புரிந்து வெல்ல மாட்டாமல் கணங்க



தடாதகைப்பிராட்டியார் திருமணம்.

னெல்லா முதுகிட்டோடக்கண்டு நாணுற்று, சிவபெருமானிடத்திலிதனைப்புகல, அவர்போர்க்களத்தில்வந்து, கணவீரர்களைத்தோற்கடித்ததுமல்லாமல், இன்னும எவர்வந்தெதிர்த்தாலும பின்னிடாது முனைந்து போர்செய்து வலிகவரும்படி, பெண்சிங்கம்போல் வீறி நிற்கின்ற தேவியாரைக்கண்டனர். இவ்வாறு தன்னைநோக்கிய சிவபெருமானைத் தடாதகையார் எதிர்நோக்கியபோது, ஒருதனமறைந்திடலும், நாணங்கொண்டு, பண்டைய அன்புவந்து மனத்தேகுடிகொள்ள, தன்புறவடியையே நோக்கியவண்ணம் மண்கிளைத்துக்கொண்டு நின்றனள். உடனே, சுமதியென்னு மந்திரி பிராட்டியாரைநோக்கி, அன்னையே! இவரே நின்மணக்காதலனுமென்று மொழிந்து நிற்கையில், சிவபெருமான் தடாதகைப் பிராட்டியாரை நோக்கி, பெண்ணே! என்றுதொடங்கி நீ திசாமுகங்களிற்செல்லக்குறித்தெழுந்தனையோ, அந்நாள்தொடங்கி நாமும் நம்மதுராநகரைவிட் டுன்னைவிடாது பின்பற்றி வந்தோம். நாம் சோமவாரத்திலுன்னை மணஞ்செய்யவருவோமாகலால், நீ உன்னுடைய நகர்க்கேகென வாஞ்ஞாபித்தனர். பின்னர், தேவியார் தேர்மேற்கொண்டு, சேனைகள் புடைசூழ்ந்துவர, மதுராநகர்வந்து சேர்ந்தனள். பிறகு, மந்திரிகள் எங்கும் மண

வோலைபோக்கி, கலியாண முரசறைவித்து, நகரெங்கும் ஆயிரம் பணாமுடிகளையுடைய ஆதிசேடனாலும் புகழவொண்ணாத பெருஞ் சிறப்போடலங்கரித்து, மணச்செய்திகேட்டடைந்த பலதேசத்தரசர்களுக்கும் விடுதிதந்து, சிவபெருமானுடைய வரவுக்கெதிர்பார்த்திருந்தனர்.

அங்கே வெள்ளியங்கிரியில், பரமசிவனாஞ்ஞையால், நந்தியெம்பெருமானனுப்ப, சங்கு கன்னன்முதலிய கணத்தலைவர்கள், பிரமவிஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் பதிகளிற் சென்று, சிவபெருமானுடைய திருமணச்செய்தியை யறிவிக்க, மாலயன்முதலியதேவர்களும் பூதகணங்களும், இயக்கர் கின்னரர் விச்சாதரர்களும், முனிவர்களும், மற்றுமுள்ளோர்யாவரும் தத்தமனைவியர்களோடும், கயிலைவந்து சேர்ந்து சிவபெருமானைப்பணிய, அவர்களைக் கடைக்கணித்து, குபேரனை வருவித்து, கலியாணகோலத்துக்கேற்ப சர்வாலங்காரமுஞ் செய்வித்துக்கொண்டு இடபவாகனாரூடராயெழுந்தருளி, தேவர்கள் அந்தரதுந்துபி முழக்கிப் பூமாரிபொழிய, மங்கலவாத்தியங்கள் கல்லென்றொலிக்க, அரம்பைமாதர்கள் நடனஞ்செய்ய, பானுகம்பன் ஆயிரமுகங்களால் சங்கமூத, வாணன்குடமுழக்க, முனிவர்களுந் தொண்டர்குழாங்களும் அஞ்சலிய

ஸ்தராய் கனிந்தவன்போடும், ஹரஹரவென்று துதிசெய்ய, இந்திரன் காளாஞ்சியேந்த, ஈசானன் அடப்பைதாங்க, வாயுபகவான் ஆலவட்டம்பணிமாற, அக்கினிபகவான் தூபமேந்த, வருணன் பூத்தட்டுதாங்க, நிருதி கண்ணாடிகொண்டெதிர்வர, குபேரன் நிதிவழங்க, ஆதிசேடன் மணிவிளக்கெடுக்க, வேதங்கள் திருவடிகளைமுடிகளாற் சுமந்துபின்செல்ல, கங்கைகாவிரிமுதலிய நதிகள் பெண்ணுருவங்கொண்டு கவரிகளிரட்ட, குண்டோதரன் குடைபிடித்துவர, ஆலால சுந்தரன் திருநீறும் பூமாலையுங்கொண்டுவர, சதுர்முகனும் திருமாலும் இருபாலுநின்றேத்திவர மதுராநகர் வந்தடைந்தனர்.

அப்போது, தேவதேவன்வந்தான், மால்விடையான்வந்தான், மும்மூர்த்தி முதல்வன்வந்தான், முக்கட்பெருமான்வந்தான் என்று பொற்சின்னங்களூத, நகரில்பிரவேசித்து வீதிமார்க்கமாய் வருகையில், மந்திரிகளும் பலதேயத் தரசர்களும், ஏனையபுருஷர்களும், மாதர்களுமாங்காங்கு திரள் திரளாகக்கூடி சிவபெருமானுடைய திருமேனிப் பொலிவை நேத்திரோச்சுவமாகக்கண்டு ஆனந்தித்துப்பலவாறுகொண்டாட, அரண்மனை குறுகியமாத்திரத்தில், அந்தணமாதர் ஆலத்திசுற்றி, சூடவிளக்குமுதலிய அஷ்டமங்கலங்கள் செய்ய,

வேதியர் ஆசிபுகல, இருபுறத்திலும் பிரமவிஷ்ணுக்கள் கைதாப்பற்றிக்கொண்டு, பாதுகை திருவடிகளிற்சூடி தேவர்கள்மந்தாரமாரி பொழிய, உள்ளே புகுந்தனர். அக்காலையில் மங்கலஸ்திரீகள் கரகநீர்வார்க்க, மாமியாராகிய காஞ்சனமாலை, சிவபெருமானுடைய திருப்பாதங்களைவிளக்கி, அந்நீரைச்சிரமேற் றெளித்துட்கொண்டு, வெண்பட்டால் திருவடிகளைத்துடைத்து, மலர்கள்தூவிக் கும்பிட்டுநின்று, அடியேன் அருமையாகப்பெற்ற இப்பெண்ணை மணம்புரிந்து, இந்நகர்கைக்கொண்டு ஆள்கவென்று மொழிய. அதற்குடன்பட்டுச் சிவபெருமான் குறுநகை கொண்டிருந்தனர். பின்னர், வேதங்களார்ப்பசிங்காதனத்தெழுந்தருளிச் சூழுகின்ற பிரமவிஷ்ணுமுதலிய தேவர்களை அவரவர்கட்கிட்ட ஆசனங்களிலிருக்கக்கட்டளையிட்டு, கலியாணத்துக்கு நியமித்த முகூர்த்தகாலம் வருமளவும் அரம்பைமாதர்கள் நடனத்தைக்கடைக்கணித்திருந்தனர். பின்னர், தடாதகைப்பிராட்டியாரை ஸ்நானஞ்செய்வித்து, திவ்வியவஸ்திராபரணாலங்காரஞ்செய்து, கலைமகளும் லக்ஷுமியுமிருபாரிசத்திலுங் கைகணிட்டுத் தனது திருக்கரங்களாற் பற்றிக்கொண்டு, தூரியம் சங்குமுதலிய வாத்தியங்கள் கோஷிக்க, மலர்மாரிபொழிய, மங்கலப்பெண்கள் வாழ்த்துக்கூற, இந்திரா

ணி அடப்பைதாங்க, திலோத்தமைகண்ணா டியேந்திவர, துர்க்கைபொற்பிரம்புதாங்கி ஜ னநெருக்கையொதுக்கிவர, அரம்பைகாளாஞ் சிகொண்டுவர, ஊர்வசி ஆலவட்டம்வீச,மே னகை பூத்தட்டேந்திவர, மாதர்கள் சோப னகீதம்பாட, மெல்லெனநடந்துவந்து சிவபெ ருமானருகணைந்து தலைவணங்கிக்கொண்டு இ ருந்தனள். அப்போது, திருமால் கரகநீர்கொ ண்டு பரமசிவத்தின் திருவடிகளைவிளக்கி, ம லர்கொண்டுசாத்தி, தூபதீபங்காட்டி, அன் போடருச்சித்து, பாததீர்த்தத்தை திருமால் முதலியசமஸ்ததேவர்களும், முனிவர்களும், தொண்டர்களும் உள்ளும் புறம்புங்கொண்டு கைகூப்பிநிற்ப, திருமால் தடாதகைப்பிராட் டியார் திருக்கரங்களைப்பற்றிச் சிவபெருமா ன் கையிற்கொடுத்து, மந்திரமோதி தாரைவா ர்த்துக் கொடுத்தனர். பிறகு, காமதேனுவின் பாலும், கற்பகக்கனிகளும், நெய்தேன்முதலி யனவுங்கலந்து அமுதுசெய்யச்சொல்லச் சிவ பெருமான் அதைக்கையாற்றொட்டு அமுது செய்ததுபோ லகமகிழ்ந்து, இருடிபத்தினிக ளும், பூமகளும், நாமகளும், மங்கலம்பாட, சது முகன் தன் புதல்வரோடொருங்கிருந்து ஓ மம்வளர்க்க, நான்மறைகளார்ப்ப, மங்கலவா த்தியங்கள் கோஷிக்க, பிரமன்வேதவிதிப்ப டி சடங்குகளியற்ற, சிவபெருமான் தடாத

கைப் பிராட்டியாரைப் பாணிக்கிரகணஞ்செ
ய்து, பொரிவாங்கிச்செந்தீயிட்டு, வேதியர்க்கு
த்தானங்கொடுத்து, எரிவலம்வந்து பிராட்டி
யார் பாதத்தைப்பற்றி அம்மிமேல்வைத்து,
அருந்ததியெங்கென்றுரைப்ப, அவள்கை கூ
ப்பிநேர்வர அருட்கண்சாத்தி, வேள்வியைநி
றைவேற்றி பிராட்டியோடுமணவறைபுகுந்த
னர். பின்னர், மணவறையினின்றும் வதுவை
மண்டபம்வந்து சிங்காசனத்திலிருந்து, பிரம
ன்முதலியதேவர்கட்கும் தந்தம்பதிக்குச்செ
ல்ல விடைநல்கி, சோமசுந்தர பாண்டியனெ
ன்னும் திருநாமம்பூண்டு, தாம்கொண்ட கோ
லத்துக்கேற்ப, சங்குகன்னன்முதலிய கணவீ
ரர்களைப் பரிஜனங்களாகக்கொண்டு, அரசுசெ
லுத்திவந்தனர். இவ்வாறு அரசுபுரிகையில்,
உலகங்காக்குமரசர்கள் சிவனைப்பூசைசெய்ய
வேண்டியது வேதவிதியென்று, தாம்திருவா
ய்மலர்ந்துள்ளதை யெல்லோருங் கடைப்பிடி
த்தொழுகும்வண்ணம், தாமும் அந்நகரில்நடு
வூரென்றோர் பட்டணந்தாபித்து, ஆகமவிதி
ப்படி கோயில் ஏற்படுத்திச் சிவலிங்கப்பிரதி
ட்டைசெய்து, இம்மையேசெல்வந்தரும் பெ
ருமானெனப் பெயர்தந்து பூசித்து, கடம்பவ
னத்துறை சிவபெருமானை முப்போதுஞ்செ
ன்று வணங்கி, உலகமுழுதுஞ்செங்கோனடா
த்தி, மனிதருக்கரசாகியும், பகைவேந்தர்க்கு

ச் சிங்கமாகியும், மடவார்க்கு மன்மதனாகியும், பூதேவிக்குத்திருமாலாகியும், நித்தியாநித்திய வஸ்துவுணர்ந்து, இகபரத்தாசைநீத்து, அகந் தெளிந்த மெய்ஞ்ஞானிகட்குச் சச்சிதானந் தப் பரம்பொருளாகியும் வீற்றிருந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

---

# வெள்ளியம்பலத்திருக்கூத்தாடிய படலம்.

தடாதகைப்பிராட்டியாரைச் சிவபெருமான் மணம்புரிந்தபின்னர், கலியாணத்திற்குவந்த அரசர்களையும், முனிவர்களையும், தேவர்களையும், மற்றுமுள்ளாரையும் உண்ணுதற்கு வாருமென்றழைக்க, அவர்களெல்லோரும், பொற்றாமரையில் ஸ்நானஞ்செய்து, தத்தம் நியமங்களை முடித்துக்கொண்டு வந்தனர். அவர்களுள் பதஞ்சலியும், வியாக்கிரபாதரும், சிவபெருமானைப் பணிந்து, சுவாமீ! அடியேங்கட்குப் பொன்னம்பலத்திலாடுகின்ற உம்முடைய ஆனந்த நடனத்தைத் தரிசித்துண்பது நியமம் என்று விண்ணப்பஞ்செய்தனர். அதுகேட்ட சிவபெருமான் கருணைகூர்ந்து, முனிபுங்கவர்களே! அந்நிருத்தத்தை யாமிங்கு செய்கின்றோம். உலகமெல்லாம் தன

துருவமாகப்படைத்த விராட்புருடனுக்கு அரைக்குமே லுலகமேழென்றும், அரைக்குக்கீழுலகமேழென்று முள்ளவற்றில், திருவாரூர் மூலாதாரஸ்தானமாகவும், திருவானைக்கா நாபியாகவும், திருவண்ணாமலை மணிபூரகமாகவும், சிதம்பரம் இதயமாகவும், திருக்காளத்தி கண்டமாகவும், காசிபுருவமத்தியமாகவும், கயிலை பிரமரந்திரமாகவும், மதுரை துவாதசாந்தஸ்தானமுமாக விருப்பதால், முன்னர் உண்டாகியமுறைபற்றி யீதநிகமாகும் என்றுரைத்துச் சிவபெருமான் ஆலயத்துட்பிரவேசித்தனர்.

அங்கே இந்திரவிமானத்தின் கீழ்ப்பாரிசத்திற்சந்திரமண்டலம்போல் வெள்ளியம்பலமொன்றுண்டாக, அதன்மேல் சூரியன்கடன் முகட்டுதித்ததுபோல் மாணிக்கபீடமொன்றுதோன்றியது. அப்பீடத்தின்மீது பெருமான் ஆயிரங்கதிர்களேககாலத்தி லுதயமானாற்போன்றபெருஞ்சோதி வடிவாய்த்தோன்றி, கணங்கள்மொய்த்து, தண்ணுமைமுதலிய வாத்தியங்களார்ப்ப, நந்தியெம்பெருமான் மத்தளமுழும், நாரணன் இடக்கையுமுழக்க, தும்புருநாரதர் கானஞ்செய்ய, அந்தரதுந்துபி கல்லென்றொலிக்க, நாமகள் சுருதிகூட்ட, பிரமன் சாமகீதத்தையாழிலமைத்துப்பாட, தேவர்கள் கற்பகப்பூமாரிபொழிய, முயலகன்முது

கின்மீது வலத்தாளூன்றி, இடத்தாள்தூக்கி, திசைகடந்த எண்டோளும், திண்படைகளும், தெய்வமாதர் மங்கலசூத்திரங்காத்த நீலகண்டமும், சங்கக்குழையணிந்த திருச்செவிகளும், செக்கர்வானம்போன்ற சடாமுடியும், தெய்வத்திருநீற்றுப்பொலிவும், திரிநேத்திரங்களும், சர்ப்பகங்கணமும், பன்றிக்கொம்புமாமையோடு மணித்துள்ளமார்பமும், உமாதேவியார்பாகமும், அவர்மேல்வைத்தபார்வையும் நகையும் தோன்றவும், கங்காநதியின் ஒலியும், கொன்றைமாலையிலுள்ளகீதவண்டினங்களின் ஓசையும், முழவினோசையும், வேதகோஷமும், மழுசுவாலித்தெழுமோசையும், திருப்பாதச்சிலம்பொலியும் எங்கும் நிறையவும், ஆனந்தத்தாண்டவஞ் செய்தனர். அதுகண்டோரெல்லாம் ஆனந்தபரவசராய் ஆடிப்பாடி வணங்கினர். அத்தபோதனர் பொருட்டால், திருமணங்காணவந்தமனிதர்களுந் தரிசிக்கப்பெற்றனர். பின்னர், அம்முனிவரிருவரும் சிவபெருமானுடைய திருப்புகழைப் பலவாக எடுத்துப்போற்றி நிற்ப அவர்களைநோக்கி, அன்பர்களே! நீங்கள் வேண்டியவரம் யாதென்றுவினவ, எந்தையே! எப்போதும் இத்திருநடனத்தை யாவருந் தரிசித்துய்யும்படி இந்நிலையேநின்று அருள்செய்தல் வேண்டுமென் றிரந்துகேட்ப, அவ்வாறே தந்தோமென்று பெருமான் திரு

வாய்மலர்ந்தருளினர். பிறகு, அங்கிருந்தோ ரெல்லாரும் அவ்விருடிகளிருவரையுந்தழுவி க்கொண்டு வணங்கி, அரஅரவென்றானந்த கோஷஞ்செய்து, கைகோத்துக் கொண்டாடி னர். தேவர்கள் பூமாரிபொழிந்தனர். சிவபெ ருமான் தனது திருநடனத்தைத் தரிசித்தோ ர்க்கு இகபரசெல்வங்களைக் கொடுத்துக்கொ ண்டு அவ்விடத்தே வீற்றிருக்கின்றனர். மார் கழிமாதத்துத் திருவாதிரை நக்ஷத்திரந்தொ டங்கி, மறுவருடம் மார்கழித் திருவாதிரை வரையில், பொற்றாமரையில் மூழ்கி, அந்த வெள்ளியம்பல திருத்தத்தைத்தரிசித்து, அ ங்கமர்ந்திருந்து நூற்றெட்டுதரம் பஞ்சாக்ஷர த்தைச் செபித்து அன்பினிலே நின்றோர்கள், தாங்களெண்ணிய இஷ்டசித்திகளைப் பெறு வர்.

திருச்சிற்றம்பலம்.

---

# குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம்.

---

தடாதகைப்பிராட்டியார் திருமணத்துக்கு வந்த முனிவர்களையும், வேதியர்களையும், ப லதேயத்தரசர்களையும், மற்றுமுள்ளோரையு ம் அமுது செய்வித்தபின்னர், பரிமளத்திரவி யங்களும், வஸ்திரங்களும், ஆபரணங்களும்,

தாம்பூலாதிகளு முறையேவழங்கி, அவரவர்கள் தத்தம்பதிகட்கேக விடையளித்து இருந்தனர். அப்போதுசமையலாளர்கள்வந்து பாதங்களில்வணங்கி, தாயே! அடியேங்கள் சமைத்த அன்னத்தில்ஆயிரத்திலோர்பங்கேனுந்தொலையவில்லை, இனியாங்கள் செய்யக்கடவதியாதென்று பிரார்த்தித்துநிற்க, தேவியார், தமது நாயகராகிய சிவபெருமான் திருமுன்னரடைந்து, திருவடிவணங்கி, ஒருபுறம ஒதுங்கிநின்று சுவாமி! தேவரீர் முப்பத்துமுக்கோடி தேவகணங்களோடு மிங்கெழுந்தருள்வீரெனக்கருதி அளவில்லாத போனகஞ்சமைத்தோம், வந்தவருண்டு மிகுந்துள்ளதின்னு மலையளவாயிருக்கின்றதென்று மொழிந்தருளினர். அதுகேட்டுசிவபெருமான்சிறிதுபுன்னகைசெய்து, பெண்ணே! மூவேந்தரிற்சிறந்த பாண்டியனுடைய அரும்பெறன்மகளாகிய நினக்கு இவ்வுலகில்பெறுதற்கரியபொருளென்னுளது? அளவற்றநின்னுடைய செல்வப்பெருக்கை யாமறியும்பொருட்டே யிவ்வளவுமிகுதியாகச் சமைத்தனைபோலும். இத்தகைய நின்விருந்துண்டு களிக்கமிக்கபசியுடையாரை நமதுகணத்தில் ஒருவரையுங்காணேமென்றுரைத்து, அடுத்துநின்றகுண்டோதரன் வயிற்றில் வடவாக்கினியைப் புகுத்தியமாத்திரத்தில், அவனடங்காப் பசியினனாய்உடல்சோர்ந்து, வேர்த்து, ஆவி

யொடுங்கி, பெருமானைப்பார்த்து சுவாமீ! அடியேன் ஆற்றொணாப்பசியால் மிகத்துயருறுகின்றேனென்று முறையிட்டனன். அப்போது, சிவபெருமான் தேவியாரைநோக்கி, பெண்ணே! குடைதாங்கு மிக்குண்டோதரனுக்குச் சிறிதன்னமிட்டால், பின்னர்சொல்லுகின்றோமென்றருளலும், அவ்வாறே யவனையழைத்துக்கொடுபோய் பரிசாரகரிடத்தில்விட்டு அன்னம்படைக்கும்படி கட்டளையிட்டனர். அவர்களப்பணியைச்சிரமேற்கொண்டு, குண்டோதரனைக்கொண்டுபோய் அன்னக்குவியல் முன்விட்டனர். அவன் அதைச்சமீபித்ததையும் பிறகுஒன்று மின்மையையுங் கண்டாரேயல்லாமல், எடுத்ததையும், உண்டதையுமொருவருங்கண்டிலர். அஃதொழிந்தபின்னர், பாகஞ்செய்தற்குவைத்திருந்த அரிசிகாய்கறிமுதலியனவும், பால்தயிர்நெய்முதலியனவும், பழக்குவியல்களும், கரும்புதெங்குமுதலிய யாவற்றையும் எடுத்தெடுத்துண்டுந் தீராதபசி யுடையவனாய் வருந்தாநிற்பதைத் தடாதகைப்பிராட்டியார் கண்டு, அதிசயமடைந்து, சிவபெருமானிடஞ்சென்று உள்ளத்தில் நாணங்கொண்டு, தலைகுனிந்திருந்தலைப் பெருமான்கண்டு, ஒன்றுமறியார்போல் பிராட்டியாரைநோக்கி, பெண்ணே! குண்டோதரன் உண்டு இன்னமிகுதியாயிருக்குமாயின், நாம் நமது கணங்களை

யனுப்பி உன்னுள்ளஞ் சந்தோஷிக்கச் செய்கின்றோமென்றுரைத்தனர். அதுகேட்ட தேவியார், சுவாமீ! உள்ளதையெல்லாமுண்டும் இக்குண்டோதரன்பசியே இன்னந்தணிந்திலது, இன்னும்வேறு கணவீரர்களையனுப்புவீராகில், அவர்கள் இவ்வுலகங்களையெல்லாமெடுத்துண்டு விடுவார்கள். அதனால் உமக்குப் பிரளயகாலருத்திரனென்னும் பெயர் கிடைக்கும். அக்குண்டோதரன் தானேவந்துரைத்தால் யாவுந்தெரியவருமென்றுரைத்துக்கொண்டிருக்கையில், அவன்பசித்தீச்சுடவோடிவந்து சுவாமீ! எம்பெருமாட்டியார்மலைபோலுஞ்சமைத்துவைத்த போனகம்யாவுஞ் சிறிது விடாமலுண்டு மென்பசியின்னும் ஆறவில்லையென்று பெருமூச்சுவிட்டு, அண்டங்கள் வெடிபடக்கதறி ஆவிசோர்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## குண்டோதரனுக்கு அன்னக்குழியும் வையையுமழைத்தபடலம்.

---

சிவபெருமான் பின்னர், தடாதகைப்பிராட்டியாரைப்பார்த்து புன்னகைசெய்து, தணியாப்பசியுடைய குண்டோதரன்பொருட்டாக அன்னபுவனமாதைநினைத்தலும், உடனே

போய் நாற்பக்கங்களிலுமுண்டான பெருங்குழிகளில் தயிரன்னத்தை நிறைத்தனன். அப்போது, பெருமான் குண்டோதரனைப்பார்த்து நின்பசி தணியுமட்டும் முண்கவென்று பணித்தருளலும், அவன் உடலெல்லாம் வயிறுடையான்போல வாரிவாரியுண்டு பூரித்து, மலைபோலும் நிலத்தின்கண் வீழ்ந்து மூச்சற்றுபுரண்டுமிக்க நீர்வேட்கைகொண்டு, ஜலந்தேடுவானாய், ஓடை குளங் கிணறு முதலியவற்றையெல்லாம் வறப்பக்குடித்தும், தாகவிடாய் நீங்காதுவருந்தினன். அதுகண்டு பரமசிவன், கருணைகூர்ந்து, தன்ஜடாமுடியிலிருக்கும் கங்கையைநோக்கி, இன்று நீ யிம்மதுராநகரில் நதிரூபமாய்ப் பெருக்கெடுத்து விரைவில்வருதியென்று கட்டளையிட, அதுசெவியுற்றபகீரதியும், சுவாமி! பூர்வம்பகீரதன்பொருட்டாக பூவுலகத்திற்சென்று மூழ்குவோர்பாபங்களைப்போக்கி வாழ்கவென்றுபணித்தீர், அதுபோலுமின்று மோர்தீர்த்தமாய்ச் செல்லுகவென்று ஆஞ்ஞைசெய்வீரானால், என்னைத் தரிசித்தோர்களும், என்னிடமூழ்கினோர்களும் பவத்தொடக்கற்று, பத்திஞானங்களடைந்து,மோக்ஷமெய்தும்படி யருள்புரிதல் வேண்டுமென்றிரங்கி வேண்டியவ்வரம் பெற்றுக்கொண்டு, அதிவேகமாகப் பிரவகித்து வந்தது. சிவபெருமான் அதுகண்டு, குண்டோதரனை

நோக்கி, நின்வேட்கையறும்படி நீருருந்துக வென்று பணித்தருளினர். அதுகேட்ட மாத்திரத்தில், குண்டோதரன் வெள்ளத்தையணுகி, இரண்டுகரைகளிலுங்கைநீட்டி, எதிர்வரும்ஜலப்பிரவாகத்தைக் குறுக்கிட்டுத்தடுத்து, மலைபோலோங்கிவரும் புனலை வாய்மடுத்துண்டு விடாயொழிந்தவனாய், சிவபெருமான் திருமுன்னரடைந்து திருவடிகளில்வணங்கி, ஆடிப்பாடித்துதித்து நின்றனன். குண்டோதரனுடைய பாடலைக்கேட்டுச்சிவபெருமான் சந்தோஷித்து, தன்கணங்களின் இறைமைதந்து, தடாதகைப்பிராட்டியாரோடு புவியாண்டிருந்தனர். அவ்வையையாறானது, சிவபெருமான் ஜடாபாரத்தினின்றும் வந்தமையால், சிவகங்கையென்றும், ஞானந்தரலால் சிவஞானதீர்த்தமென்றும், காற்றினுங்கடுகிவரலால் வேகவதியென்றும், கிருதமாலையென்றும் பெயர்வழங்கப்படுகின்றது.

திருச்சிற்றம்பலம்.

---

## எழுகடலழைத்தபடலம்.

---

சிவபெருமான், சோமசுந்தர பாண்டியனாயிருந்து, பொதுக்கடிந்து செங்கோலோச்சுநாளில், ஞான நிஷ்டர்களாகிய சமஸ்தரிஷிகளும் வந்து எம்பெருமானைத் தரிசித்துப்போ

வாராயினர். ஒருநாள், கௌதமரிஷி யவ்வாறேதரிசித்து மீள்பவர் கற்பிற்சிறந்த காஞ்சனமாலையினுடைய மனையிற் பிரவேசிக்க, அதுகண்டு பொன்மாலையுமெதிர்கொண்டழைத்துப் போய், உபசரித்து, ஆசனந்தந்து, இருகரங்களையுங் கூப்பிக்கொண்டு, சுவாமீ? அடியேன் ஜனனசாகரத்தைக்கடந்து கரையேறத்தக்க ஒரு நல்ல தவமார்க்கத்தை யருள்செய்தல் வேண்டுமென்று பிரார்த்தித்தலும், முனிபுங்கவராகிய கௌதமர் முகமலர்ந்து மொழியலுற்றனர். சமஸ்தபுவனகோடிகளையும் பயந்த தடாதகைப்பிராட்டியாருக்குத்தாயாகினை, ஜகதீஸ்வரனாகிய சிவபெருமானை மருமகனாகப்பெற்றுள்ளாய்,இத்தகையபெறுதற்கரிய பெரும்பாக்கியம் பெற்ற நீயறியாதவிரதமார்க்கங்களுலகில்யாவுள? ஆயினும் நீயேகேட்டபடியாலெடுத்துப் புகல்கின்றேன். மானதம், வாசிகம், காயிகமென்றுவகுத்துச் சொல்லப்பட்டதவங்கள் மூன்றனுள் காயிகதவமேமிகச் சிறந்தது. அந்தவிரதாநுஷ்டானத்தில் தீர்த்தயாத்திரை யதிகமாகும், அதனில் சிவதீர்த்தங்களாகிய கங்கைமுதலிய புண்ணிய நதிகளில் தனித்தனிபோய் மூழ்கலேற்றமாகும், அந்நதிகள் யாவும்வந்து நிறையப்பெறுதலால் சமுத்திரம் எல்லாவற்றிலு முயர்ந்ததாகும், என்று கௌதமமுனிவர் சொல்லக்கேட்டு,காஞ்

சனமாலை சமுத்திரஸ்நானஞ்செய்ய மிக்கவிருப்பினளாய், தன்திருமகளாகிய தடாதகைப்பிராட்டியாரிடத்தில் கூறினள். பிராட்டியார் சிவபெருமான் சந்நிதியணைந்து, சுவாமீ! இன்று, என்னுடைய அன்னையானவள் திரைகடல் ஸ்நானஞ்செய்ய விருப்பங்கொண்டிருக்கின்றனளென்று மிக்கபணிவோடு மொழிந்து குறையிரக்கக்கேட்டு, சிவபெருமான் பெண்ணே! எழுகடலையுமிக்கணமே யிங்கு வரவழைக்கின்றேமென்று திருவுளத்தி லெண்ணினர். அவ்வாறு நினைத்த மாத்திரத்தில், சப்த சாகரங்களும் அண்டமுகடளாவும்படியாரவாரித்தெழுந்து, ஊழிக்காலத்தில் பொங்கிமேல்வருவதுபோல், நகரத்திலுள்ளோர் யாவருங்கண்டு நடுக்கமெய்தும்படிவந்து, கீழ்த்திசையிலுள்ள ஓர்தடாகத்தில் எழுவேறுருவோடும் அடங்கியிருந்தது.

திருச்சிற்றம்பலம்.

---

## மலயத்துவசனையழைத்தபடலம்.

சோமசுந்தரபாண்டியனாக மதுராநகரிலரசுசெலுத்திவந்த சிவபெருமான், தடாதகைப்பிராட்டியாரோடு நந்தனவனஞ்சென்று, ஆங்கமைத்த சிங்காதனத்தி லெழுந்தருளியிருந்து, சேடியர் பல்வகை மணமலர்கள் கொய்

துகொண்டுவந்துதரவாங்கி ஆக்கிராணித்து மகிழ்வோடிருக்கையில், எம்பெருமான் பிராட்டியாரைநோக்கி, பெண்மணீ! உன்பொருட்டாக யாம் எழுகடலையுமழைத்தன மாதலால், உன் அன்னையை இங்குவந்து ஸ்நானஞ்செய்தற் கழையென்று சொல்ல, அவ்வாறேயழைக்கவந்த காஞ்சனமாலையும், பௌராணிகர்களைநோக்கி, சமுத்திரஸ்நானஞ் செய்யும் விதியாதென்று வினவச்சொல்லுவாராயினர். கற்பிற்சிறந்துள்ள மாதரசே! கணவன், புத்திரன் இவர்கள்கரத்தையாவது, கன்றின்வாலையாவது,இம்மூன்றிலொன்றையங்கையாற் பற்றிக்கொண்டு, மூழ்கல்மரபென்றுகூறலும், அதுகேட்டு,காஞ்சனமாலையும்,மேலைப்பிறப்பில் குறைவறத்தவம்புரியாத கொடியபாவியாகியவெனக்கு,நாயகனும், புதல்வனுமில்லையாகலின்,இனிபெறத்தகுவது கன்றேயன்றிவேறில்லையென்று கவலையுற்று,தன் திருமகளாகிய தடாதகையாரைநோக்கி, குழந்தாய்!கன்றின்வாலைப்பற்றிமூழ்கவோவென்றுகேட்கையில், பிராட்டியார்சிவபெருமானிடஞ்சென்றுகுறைகூறக் கருணைகூர்ந்து, இந்திரனோடொருங்குவாசஞ்செய்கின்ற மலயத்துவசன்மேல் திருவுள்ளஞ்செலுத்தினர். உடனேமலயத்துவச பாண்டியன்உலகின்கண்வந்து பெருந்துபெற்ற தன் திருமகளைக் கண்டானந்தித்து, மருமக

ஞகியகடவுளைவணங்குமுன்னர், மாமனென்னுமுறைமையால் கையையமைத்துத்தழுவிக்கொண்டு,நின்பன்னியோடும் திரைக்கடலில்மூழ்கிச்செல்லுகவென்று பணித்தருளலும், நாணுற்று எதிர்வந்து வணங்கிநின்ற நிறைந்தகற்புடையபொன்மாலையும், பஞ்சாக்ஷரத்தையோதிக்கொண்டு, தன்னுடையகணவன்கையைப்பற்றிச் சமுத்திரஸ்நானஞ்செய்து கரையேறி, சிவசாரூப்பியம்பெற்று, மேலிருந்திழிந்த தெய்வவிமானத்திலாரோகணித்துக் கொண்டு, அந்தரதுந்துபிமுழங்க, தேவர்கள் பூமாரிபொழிய, ஹரஹரவென்னு மொலியெங்குமார்ப்ப, முனிவர்கள்துதிசெய்ய, சிவபெருமான் ஸ்ரீபாதங்களைத் தியானித்துக்கொண்டு, அன்பானது பின்னிழுக்க, கட்புலனுக்கெட்டு மளவு மஞ்சலிசெய்தவண்ணமாய், புவலோகம், சுவலோகம், மகாலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம், மாயோனுலகமுதலிய யாவுங்கடந்தப்பாலுள்ள சிவலோகஞ்சென்று இன்புற்றுவாழ்ந்திருந்தனர். பின்னர், தடாதகையார் சிவபெருமானோடிரண்டனையெய்திநாயகனைநோக்கி சுவாமீ!என்னுடைய அன்னைமூழ்கும்படி யெழுகடலையுமழைத்தது மன்றி, விண்ணிருந்த கணவனையுமழைத்துத் தந்தீர் பாண்டியவம்சம் நசித்ததென்னும் பழி ஏற்காவண்ணம் திருமுடிபூண்டு செங்கோலோச்சி

வருகின்றீர். இங்கிலைமைக்கினியொன்றும் இடையூறில்லையேயென்று பணிவுடன் வினவ, சிவபெருமான் பிராட்டியார் உள்ளக்கருத்தையுணர்ந்து மகிழ்வெய்தி யிருந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

## உக்கிரபாண்டியன் திருவவதாரப் படலம்.

ஸ்ரீ சிவபெருமான் சோமசுந்தரபாண்டியனாக வீற்றிருந்து மதுரையில் அரசுபுரிந்துவரும்நாளில், மலயத்துவச பாண்டியனுக்கும், காஞ்சனமாலைக்கும் திருமகளாக உமையைத் தந்து, தானுமருகனாக வந்ததுமன்றி, அப்பாண்டியவம்சம் மேன்மேலும் விர்த்தியடையும்படி முருகக்கடவுளையுங் கருப்பமடையாமல் தடாதகைப்பிராட்டியாரிடந் தோன்றும்படி திருவுளங்கொண்டனன். அம்முருகக்கடவுள் வரவுக்குத்தக்க கருப்பக்குறிகளை யாங்கள்கண்டு மாதங்கள்தோறுஞ் செய்தற் பாலனவாகிய சிறப்புகளையுந் தரிசிக்கமிக்க ஆசைகொண்டிருக்கின்றோம் தாயேயென்று தோழியர்களும் மற்றுமுள்ளோருங் குறையிரக்க, அவ்வாறே கோலங்கொண்டிருந்தனள். பின்னர், மாதங்கள்தோறுஞ்செய்யவேண்டிய சடங்குகளைமுறையேசெய்துவரப் பத்தாந்திங்களில்,

திருவாதிரை நட்சத்திரங்கூடிய சுபதினத்தில் நான்மறைகண்முழுங்க, மந்தாரமாரிபொழிய,வேள்வித்தீ வலஞ்சுழித்தெழுந்தோங்க, அஷ்டதிக்கஜங்களும் சேடனும் இளைப்பாற, அந்தாதுந்துபியொலிக்க, இந்திரன், மேருத்தெய்வம், வருணன் இவர்கட்கு இடத்தோள் துடிக்கவும், பாலசூரியனைப்போல் முருகக்கடவுள் தடாதகைபிராட்டியாரிடந்தோன்றினர்.

குழந்தையைக்கண்டமாத்திரத்தில், தடாதகையார் எடுத்துச்சிமோந்து, தனங்களினின்றும் பெருகிய பாலூட்டி, நாயகன்கையிற் கொடுத்தானந்தங்கொண்டிருந்தனர். பின்னர், பிரமவிஷ்ணுவிந்திராதிதேவர்களும், சோழபாண்டியர்களும், தத்தம் மனைவியரோடுவந்து தரிசித்துச் சென்றனர். நகரிலுள்ளோரெல்லாரும் தங்கள் தங்கள் மனைகளில் மங்களநடத்தினர். இவ்வாறு தேசமெங்கும்மகிழ்வெய்த அளவிறந்ததானங்கள்வழங்கி, சாதககருமமுடித்து, வருணன், இந்திரன் மேருக்கடவுள் இவர்களுடைய தருக்கொழித்து பயமுண்டாக்குங் காரணம்பற்றி உக்கிரவருமன் என்னும் நாமகரணஞ்செய்து, சந்திமிதித்தல், அன்னபிராசனம், சௌளம் முதலிய சடங்குகளை அவ்வத்திங்கடோறு முறையேசெய்து, வேதசாஸ்திரப்பயிற்சி, வில்வித்தை, வாள்வித்தை, யானையேற்றம், குதிரையேற்ற முதலியனவும்

குருமுகத்தறியவேண்டுமென்னுங் கொள்கையாலே வியாழபகவானிடமுணர்ந்து, வேறொருவராலு முணர்த்தற்குக் கூடாத பாசுபதாஸ்திரப் படையைச் சிவபெருமானிடத்தே தெளிந்தனன். இவ்வாறு பலகலைகளுங்கற்று, தன்னொத்த அரசிளங்குமரரோடு ஆடல்புரிந்தொழுகு நாளில், தாதையாகிய சோமசுந்தரபாண்டியன், தன்திருமகனுடைய அங்க அவயவச்சிறப்புகளைநோக்கி, அவைமிகவும் நல்ல இலக்கணம்பொருந்தி இருப்பதால், இவன், இசை, நீதி, நற்குணம், தெய்வபக்தி, சாந்தம், எல்லாவுயிரிடத்தும் அருள், ஈகை, கல்வி, வெல்லற்கரியாரை வெல்லல், செல்லற்கரிய தேயத்துச்சென்று திறைகொள்ளல், பூபாரந் தாங்கல் ஆகிய நற்குணமுடையனாகி இருப்பன், ஆதலின், இவனுக்குமுடி பின்னர்தரிப்போம், முன்னேமணம்புரிதல் வேண்டுமென்று அமைச்சரோடு ஆலோசித்தனர்.

திருச்சிற்றம்பலம்.

---

## உக்கிரகுமாரனுக்குவேல், வளை, செண்டுகொடுத்தபடலம்.

சோமசுந்தரபாண்டியனாகி வீற்றிருந்து மதுரையில் அரசுபுரிந்துவந்த சிவபெருமான், தமது திருக்குமாரனாகிய உக்கிரபாண்டியனுக்

குமணஞ்செய்விக்கவிரும்பி, மந்திரிமுதலாயி ஞரோடு ஆலோசிக்க, அவர்கள் செல்வப்பெருக்கிலும், குலங்கோத்திர முதலியவற்றிலும் ஒத்த அரசர்கள் யாவரென்று நன்காராய்ந்து, வடதிசையிலுள்ள மணவூரி லரசுசெய்யுஞ் சூரியவம்ச திலகனாகிய சோமசேகரனுடைய மகள் காந்திமதியைப்பேசும்படி தீர்மானித்திருந்தனர். அன்றிரவில்சிவபெருமான் சோமசேகரனுடைய சொர்ப்பனத்தி லெழுந்தருளி அரசனே! யாமதுரைச்சிவபெருமான், நீயரிதிற்பயந்த காந்திமதியென்னும் திருமகளைக் கொண்டுபோய்,சோமசுந்தர பாண்டியனுடையபுதல்வனாகியஉக்கிரகுமாரனுக்குத்தருகவென்று திருவாய்மலர்ந்தருளலும், விழித்து பரமானந்தபரிதனாய், கருணையங்கடலாகியபரமேஸ்வரனுடைய பேருளைநினைந்து உள்ளுருகிக்கைகூப்பித்தொழுது, அருணோதய காலத்திலெழுந்து, நித்தியகடன்களைமுடித்து, சதுரங்கசேனைகள் புடைசூழ்ந்துவர, பல்லியங்கணமுழங்க, தன்திருமகளைத் தோழியர்கூட்டத்தோடும் இரதமீதேற்றி திருமணத்துக்குவேண்டிய பலபொருள்களோடும் மதுராநகரைநோக்கிச்சென்றனன். இதுநிற்க,மதுராபுரியில் முன்னாள்மணம்பேசயோசித்தவாறே மந்திரிமுதலாயினோர் மணவூர்நோக்கி வருங்கால், மார்க்கத்தில் சோம சேகர வேந்தனைக்

கண்டு, எமது சோமசுந்தர பாண்டியனுடைய திருமகனுக்கு உமதுமகளைத்தரல்வேண்டுமென்ன, அவனும் இரவில்தனது கனவின்கண்சிவபெருமான் அருளியசெய்தியாவுங்கூறி, அவ்வாறே இசைந்து மதுரையம்பதியடைந்து, சோமசுந்தரபாண்டியனைப்பணிய அவருந்தழுவி உபசரித்து இருப்பிடந்தந்து வீற்றிருந்தனர். பின்னர், அமைச்சர்கள், பலதேயத்தரசர்கட்கும் திருமுகம்விடுத்து, நகரையலங்கரித்து எங்குமணமுரசறைவிக்க, சேர சோழர்களும், மற்றுமுள்ள எல்லாத்தேயத்தரசர்களும், முனிவர்களும், பிரமவிஷ்ணேணந்திராதி தேவர்களும், யாவரும்வந்து சிவபெருமானைத்தொழுது நிற்க, அவர்கட்கெல்லாமுறைப்படி வரிசைகணல்கிச்சிவபெருமான் சிங்காதனத்திலெழுந்தருளியிருந்தனர். அப்போது, வாணிகேள்வனாகிய பிரமன் உக்கிரகுமாரனுவக்கும்படி காந்திமதியின் வடிவின்சிறப்பிலக்கணத்தைக் கேசாதிபாதம்வரையில் எடுத்து உரைக்க யாவரும்வியப்பெய்தி இருந்தனர். இப்பால், மணமகன், மணமகளிருவரையும் ஸ்நானஞ்செய்வித்து, வஸ்திராபரணாலங்கிருதஞ்செய்து ஆசனத்தின்மீதிருத்தி, வேதவிதிப்படி சடங்குகளியற்றி, சோமசேகரன் தன்மகளைத்தாரைவார்த்துக் கொடுத்து, அளவற்றவரிசைகள் ஸ்ரீதனமாகத் தந்தனன். பின்னர்,

மணவினைகளைமுடித்து,உக்கிரகுமாரன்நகரில் பவனிவரும்போது, கோயிலையடைந்து, சொக்கலிங்கப்பெருமானையும், அங்கயற்கண்ணம்மையையும் வணங்கி, அரண்மனையெய்தி பெற்றோரைத்தொழுது, திருமணத்துக்கு வந்தவர்களையெல்லாம் அமுதுசெய்வித்து, அவ்வவர்கட்கு முறைமைப்படி பலவரிசைகளைல் கிவிடைகொடுத்தனுப்பியபிறகு, சிவபெருமான், தன்திருமகனைநோக்கி, பிள்ளாய்! உனக்கிந்திரனும் கடலும் பகையாகும், மேருதருக்கடையும், ஆதலின்மகவான்முடி சிதறும்படி இந்தவளை கொண்டெறிந்து, இந்தவேலினால் கடல் சுவறச்செய்து, இச்செண்டினால் மேருவைப்புடையென்றுகொடுக்க, அம்மூன்றுபொருளையும் வணங்கிப்பெற்றுக்கொண்டு எதிர்நிற்க, அவனுக்கு உக்கிரபாண்டியனென்று வேதமுழங்க இயங்களார்ப்பமுடிசூட்டி, தன்செங்கோலைத்தந்து, அமைச்சர் முதலாயினோரை நோக்கி, இவனைக்கண்ணிமைபோற்காப்ப துமதுகடமையாகும் என்று பணித்து புதல்வனைநோக்கி, மைந்தனே! நெடுநாள் யாம் இப்பூபாரந்தாங்கி காத்துவந்தோம், இனிநீ மந்திரிகள் மொழிதவறாதுநடந்து செங்கோலோச்சி, வையங்காத்து செல்வத்தோடும் வாழ்கவென்று ஆசிமொழிந்து, பின்னர்,தன்கணங்களெல்லாம் பழைய வடிவங்கொள்ள, தாம்

தடாதகையாரோடும் கோயிலடைந்து வீற்றிருந்தனர். உக்கிரகுமாரபாண்டியனும் மனுநீதி வழுவாமல் செங்கோலோச்சி உலகாண்டுவந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## கடல்சுவறவேல்விட்ட படலம்.

உக்கிரகுமாரபாண்டியன் மதுராநகரில் அரசுபுரிந்துவருகையில், அஸ்வமேதஞ்செய்ய விருப்புற்று வேதியரைக்கொண்டு தொண்ணூற்றாறு மகங்கள் செய்துமுடிப்ப, இந்திரன்கண்டு இவனுடைய நாட்டில் நல்லமழைபெய்து மிக்கவளமோங்கியிருந்தும், பின்னும் யாகஞ்செயல் யாதுபொருட்டென்று சங்கைகொண்டவனாய், பொறாமைமேற்கொண்டு கடல்வேந்தனாகிய வருணனையழைத்து, நீ போய் ஊழிக்காலத்தில் உலகங்களையெல்லா மொருங்கழிக்க வெழுகின்ற வெள்ளம்போல்பொங்கி மதுரையை இக்கணமே அழிக்கவேண்டுமென்று கட்டளையிட்டனன். வருணனுமவ்வாறே செய்யச்சம்மதித்து, விளைவுதெரியாதவனாய், மிக்கவிருள்சூழ்ந்த அர்த்தராத்திரியில் ஊழிவெள்ளம்போற்பொங்கி, அண்டமுகடளாவவோங்கி யாரவாரித்து மதுராபுரியை நோக்கிவரும்போது, சிவபெருமான் ஒருசித்

தராய் உக்கிரகுமாரபாண்டியன் கனவிலெய்தி, உன்பதியையழிக்கும்படி கடல்பொங்கிவருவதால், நீ விரைவிலெழுந்துபோய், வேல்விடுத்து வெற்றிபெறக்கடவை யென்று திருவாய்மலர்ந்தருள, சிவபெருமானுடைய திருவருளை வியந்து, வணங்கிப்போற்றி படுக்கைநின்று மெழுந்து, அமைச்சரோடுஞ்சென்று, பொங்கிவருகின்றகடலைக்கண்டு அதிசயித்து நிற்கும்போது, இரவில் கனவின்கண்வந்த சித்தவேடர் நனவிலும் வந்து, அப்பனே! இன்னுங்காலதாமதஞ்செய்து நிற்பதென்னை! விரைவில்வேலெறிந்து வெற்றிபெறுவாயென்று மொழிந்தருள, உக்கிரகுமாரன் வேலைவலப்புறஞ்சுழற்றிச்சமுத்திரத்தின்மேல் விடுத்தனன். உடனே வெள்ளமெல்லாஞ் சுவறிப்போய் உக்கிரகுமாரபாண்டியனுடைய கணைக்காலளவில் நின்றது. பின்னர், சித்தரூபியாய் வந்த சிவபெருமான், ககனமார்க்கத்தில் பார்வதிசமேதராய் விடைமேலெழுந்தருளித் தரிசனந்தர, பாண்டியன்கண்டு பேரானந்தமுற்று, அஞ்சலிசெய்து துதிந்து விடைகொண்டு அரண்மனையெய்தி, மதுரைக்கும், கடலுக்குமிடையிலுள்ள நாடுகளெல்லாம் சொக்கலிங்கப் பெருமானுக்கென்று நானஞ்செய்து உலகாண்டிருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

# இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம்.

உக்கிரகுமாரபாண்டியன் மதுராபுரியில் அரசு புரிந்து வருநாளில், வான் மழைபொழியாது மறுப்ப, பயிர்களெல்லாம் தீய்ந்து, சேர சோழ பாண்டியநாடுகள் மூன்றிலும்வளஞ் சுருங்கிப் பஞ்சமுண்டாயது. மூவேந்தர்களும், அக்குறைவுதீரப்பெறும்பொருட்டு அகத்தியமுனிவர்பாலெய்திக்குறைகூறலும், கருணாமூர்த்தியாகிய அம்முனிவர் பெருமான் கோள் நிலைகளைக்குறித்துப்பார்த்து, வேந்தரைநோக்கி, இனிப்பன்னிரண்டு வருடமழை பெய்யாதாகலின், மேகநாதனாகிய தேவேந்திரனைப்போய்க் கேளுங்களென்றுரைத்தருளினார். அதைக்கேட்ட மூவேந்தர்களும் குறுமுனியை நோக்கி, சுவாமி! அடியேம் பொன்னாடு செல்லும் வகை யெவ்வாறென்று வினவலும், இரிஷிபுங்கவராகிய அகத்தியர் சோமவாரவிரதத்தினை ஆகமவிதிப்படி யெடுத்துக்கூறி, இதனைப்பத்தியோடநுஷ்டித்துச் செல்லுமி னென்று அநுக்கிரகித்தருளினார். அவ்வாறே யவ்விரதத்தைச்செய்துமுடித்துச் சிவபெருமானுடைய அருள்பெற்று, தமிழ்வேந்தர்மூவருங் ககனமார்க்கமாய்ச் செல்லாநிற்கையில், அமரர்கோனதையறிந்து, அவரிருப்பதற்கு மூன்று சிங்காதனங்கள், தனதாசன

ணத்திற்குத் தாழவமைக்க, பொன்னாடுசேர்ந்த மூவரில் சேரனும் சோழனும் தேவர்கோன்காட்டிய தவிசிலிருந்தனர். உக்கிரகுமாரபாண்டியன் இந்திரனுடைய ஆசனத்திலேறி யவனுடனொக்கவீற்றிருக்க, மகவான்கண்டு பொறாமையுற்று, தாழவிருந்த ஏனையவிரண்டரசரையு நோக்கி, நீவிரீண்டுவந்தகாரணம் யாதென்றுகேட்ப, அவர்கள், எங்கள் நாட்டில் மழை மறுத்தமையால் உம்மிடம் வந்தோ மென்றனர். அது செவியுற்ற தேவர்கோன் உள்ளமிரங்கி மகிழ்வெய்தி அவர்கள் நாட்டினளவின்மாத்திர மழைபெய்யும்படிச்செய்து, வேண்டியபரிசுகளுமளித்து, விடைதந்தனுப்பிய பின்னர், மழைவேண்டாது தருக்கோடு தன்னாசனத்திலொக்க வீற்றிருக்கும் உக்கிரகுமாரபாண்டியனுடைய பெருமிதத்தைக்கண்டுள்ளம்புழுங்கி, வரிசைசெய்வான்போல், எண்ணிறந்தோர் சுமந்தாற்றாது மெலிவுறுமோராரத்தை யுக்கிரகுமாரனுக்களிக்க, அதை யநாயாசமாகவாங்கி யதிவிரைவிற்கழுத்திலணிந்தனன். அதைக்கண்ட அமரர்பெருமானதிசயித்து, இதுமுதல் உன்னை ஆரந்தாங்கு பாண்டியனென்றுலக மதிக்கக்கடவதென்றுரைப்ப, அதைச்சிறிதுமெண்ணாமல், உக்கிரகுமாரபாண்டியன் தெய்வலோகம் விட்டுப் புறப்பட்டுத் தன்னாடுவந்துசேர்ந்தனன். பின்னர்,

௮௪ இந்திரன்முடிமேல்வளையெறிந்தபடலம்.

சேர சோழர்கள் நாடுமட்டில் மழைபெய்து, பாண்டியநாடுமுன்போலவே யிருந்தது. இவ்வாறு நிகழுநாளில், ஒருநாள் உக்கிரகுமார பாண்டியன் பொதியமலைச் சாரலையடைந்து, பலவகைமிருகங்களை வேட்டையாடுகையில், புட்கலாவருத்த முதலாய சத்தமேகங்களும், அவ்வழிவந்துமேயக்கண்டு, அவற்றைப்பற்றிக்கொண்டுபோய்த் தளையிட்டுச் சிறைவைத்தனன், அச்செய்தி இந்திரன் கேட்டு மிகவுஞ் சினங்கொண்டு, ஒருமனிதனுக்கிவ்வளவு வலியாதென்று மதுராநகரை வந்துவளைத்துக்கொண்டு உக்கிரகுமாரபாண்டியனோடு கடும்போர்புரிகையில், பாண்டியன் தன்கைத்தலத்திற்பற்றிய வளையைச்சுழற்றி மகவான்மேல் விடுத்தலும், அது அவன் விடுத்த வச்சிராயுதத்தைவீழ்த்தி, சிரத்திலணிந்திருந்த மகுடத்தைத்தள்ளிச் சிதைத்தது. அதுகண்ட இந்திரன் மிகவும்பயந்து போருக்காற்றாதோடிப்போய், பாண்டியன் வீசியவளை நம்முடைய சிரத்தைத்துணிக்காது மகுடத்தை வீழ்த்தியது, சோமசுந்தரக்கடவுளுக்கு நாம்புரிந்த பூஜையின்பயனே யாமென்று உறுதிகொண்டு, “நான் உன்னுடைய நாட்டுக்கெல்லாம் மழைநல்குவேன், மேகத்தைத் தளைநீக்கிச் சிறைவிடுத்தல்வேண்டு”மென்று பாண்டியனுக்குத் திருமுக மனுப்பினன். தூத

வன்கொண்டுவெந்தவோலையைப்பார்த்து இந்திரன்மொழியை நம்பாமல், மேகங்களைச் சிறைவிடாமலேயிருப்ப, தேவேந்திரனுக்கு நண்பனாகிய வொருவேளாளன்வந்து நான்பிணையென்றுவணங்கிக்கூறலும், உயிர்க்கூற்றம் வரினும் சத்தியந்தவறாதுகாக்கின்றவேளாண்குலத்தில்வந்த அவனுடைய மொழியை வேதவாக்கியம் போல் நம்பி, சிறைக்களத்தினின்று மேகங்களை யெல்லாம் விடுத்தனன். பின்னர், தேவேந்திர னேவலால், பாண்டியநாட்டில் மாதமும்மாரிபெய்து, மிக்கவளம் பெற்றிருந்தது.

திருச்சிற்றம்பலம்.

---

## மேருவைச் செண்டா லடித்த படலம்.

உக்கிரகுமாரபாண்டியன், முனிவர்பெருமானாகிய அகஸ்தியர் சொல்லியருளிய சோமவார விரதத்தை வழாது அநுஷ்டித்து வருநாளில், தன்பத்தினியாகிய காந்திமதி வயிற்றினிடத்திலோர் புத்திரனுதித்தனன். அப்புதல்வனுக்கு வீரபாண்டியனென்னும் நாமந்தரித்து, வேதசாஸ்திரங்கள், யானை, குதிரை, தேர், படைக்கலங்கள் முதலியனவும் பயிற்று

வித்து, பெருமகிழ்ச்சியடைந்து வருநாளில், கோள் நிலைதவறியதால் மழைசுருங்கி, உயிர்களெல்லாமுணவின்மையால் வாடி நலிவது கண்டு, உக்கிரகுமாரபாண்டியன் சோதிடம் வல்லோரை நோக்கிமழைவறந்தமைக்குக்காரணம் யாதென்று வினவியபோது, அவர்கள், அரசே! கிரகங்கள் சூரியனையுற்று நோக்கி நிற்பதால், ஒருவருடமளவுமழைபொழியாதென்று சாற்றினர். அதுகேட்ட அரசன் சிவபெருமான் சந்நிதியடைந்து குறைகூறி கண்ணீர்சொரிந்து வேண்ட, சொக்கலிங்கப்பெருமான் இரக்கமில்லாதவர்போல் சும்மாயிருந்தலும், துயரக்கடலில் மூழ்கினவனாய், திரும்பியரண்மனையடைந்து, அன்றிரவில் தரையில் கண்டுயிலும்போது, பரமசிவன் ஒருசித்தராய் அவன் கனவிலடைந்து, அன்பனே! மழைபெய்வது இப்போதருமையாகலான், அதுகுறித்து நீ வருந்தல்வேண்டாம். மலையரசாகிய மேருவின்பக்கத்தில் ஒருகுகையில், அழியாப் பொன் வைப்பொன்றுளது. ஆங்கடைந்து, மேருமலையின் தருக்கடங்கச்செண்டால் புடைத்து, பொன்னறைபொதிந்துள்ள பாறையைத்திறந்து, உனக்குவேண்டியமட்டிலெடுத்துக்கொண்டு, மீட்டுமதனைமூடி நின்முத்திரையிட்டு வருகவென்று திருவாய்மலர்ந்தருளலும், வைகறையிலெழுந்து நித்தியகட

ன்களை முடித்துக்கொண்டு, மீனாக்ஷிசமேதரா கிய சொக்கலிங்கப்பெருமானை வணங்கி வி டைபெற்றுக்கொண்டு, சதுரங்கசேனைகள் பு டைசூழ்ந்துவர, வாத்தியங்கள்கடல்போலொ லிப்ப, மிக்க விபவத்தோடு தேரேறிக் கீழ்த்தி சைநோக்கிச் சென்று, காடு, மலை, நாடு முத லியயாவுங்கடந்து, பொன்மலையையடைந்து, அதனைநோக்கி, மலையரசே! எமதுபெருமான் கையிற்றாங்கியசிலையே! இரு சுடர்களும் கிர கங்களும் நாளும்வலம்வருகின்ற தெய்வதமலை யே! என்று மிக்கபணிவோடு அழைத்தலும், மலைவேந்துவருகைக்குச் சிறிதுகாலந்தாழ்ப்ப உக்கிரகுமாரபாண்டியன் சினங்கொண்டு, த ன்கைச்செண்டினாற் புடைத்தனன். உடனே மேருத்தெய்வமானது கலங்கி, எண்டோளு ம், நான்குமுடிகளும் வெண்குடையுந்தாங்கிய உருவத்தோடு நாணியெதிர்வரலும், அரசன் கோபந்தணிந்து நோக்கி, இவ்வளவு காலதா மதஞ் செய்துவந்ததென்னை யென்றுவினவ, அரசே! அங்கயற்கண்ணி சமேதனாகிய சொ க்கலிங்கப்பெருமானை நித்தமு மிவ்வுருவத் தோடுசென்று வழிபடும் நியமமுடையேன், இன்று ஒரு பெண்மயலால், காமாந்தகாரமக் னனாய் அவ்வழிபாட்டைமறந்தமையால், அ ப்பயனையிதோவநுபவித்தேன். திருவடிமறந் த தீமையையொழித்த உனக்குநான் என்ன

கைம்மாறு செய்யவல்லேன். இங்கடைந்தகாரணம் யாதென்றுகேட்ப, உக்கிரகுமாரன் பொன்வேண்டிவந்தனனென்று கூறலும், உன்னாட்டில் உரைபடுமாற்றுடைய பொன்னை வேண்டியமட்டில் அம்மாமரத்தின்கீழ் புதைபட்டுக்கிடக்கின்றதை எடுத்துக்கொண்டுபோவென்றுகாட்டினான். உக்கிரகுமாரபாண்டியன், தன்னவாவளவு எடுத்துக்கொண்டு மீட்டுமதனைமூடிப் பின்னருமதுதன்னதாகவேயிருக்குமாறு தன்பெயர் முத்திரையைப்பதித்து, சேனாசமுத்திரத்தோடு மதுராநகரமடைந்தனன். பின்னர், சிவபெருமான் சந்நிதியடைந்து வணங்கி அரண்மனையெய்தி, குடிகளைப்பாதுகாத்து அரசுபுரிந்து வாழுநாளில், பரமேஸ்வரன் ஆணையால் நடக்குங்கிரகங்களும் பழையபடிநிலைமைமாறி மழைபொழியவளம்பெருகி, உயிர்களெல்லாந் தழைத்திருந்தன. இவ்வாறு உலகாண்டு வந்த உக்கிரகுமாரபாண்டியன் தன்புதல்வனை வீரபாண்டியனுக்கு முடிசூட்டி, தன்னரசையளித்து, சிவபெருமான் திருவடிநிழலடைந்து பழைய தேசொடும் வீற்றிருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

# வேதத்துக்குப்பொருளருளிச்செய்த படலம்.



பூர்வம் ஒருமுழிக்காலத்தில், சமஸ்தசராசரங்களும்மொடுக்கமுற்றபோது, சிவபெருமான் மீட்டுமுத்தொழிலும் நடைபெறுமாறு திருவுளங்கொண்டு திருமாலையுண்டாக்க, அவனுடைய நாபிக்கமலத்தில் பிரமனுதித்து, திரிலோகங்களையும் படைத்தனன். அதுகாலையில். பரமசிவனுடைய திருவாக்கினின்றும் பிரணவமுதிக்க, அதினின்றும் வேதங்களுண்டாயின. பின்னர், நைமிசாரணியத்திலுள்ள கண்ணுவர் கருக்கர்முதலிய முனிவர்கள் அவற்றின் பொருள்விளங்காது மனந்தளர்ந்து முகம்புலர்ந்து இருக்கையில், அங்கு அரபத்தனென்றொரு அந்தணன்வந்து முனிவர்களைநோக்கி, நீவிர் சிந்தை வேறுபட்டு வருத்தமுற்றிருக்குஞ் செயலென்னையென்று வினவ, சுவாமீ! பரமேஸ்வரனால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட வேதத்தின் மெய்ப்பொருளை யுணர்த்துந் தேசிகோத்தமனின்றிமனமயக்கங்கொண்டிருக்கின்றோம். இதற்குச்சூழ்ச்சி யாதென்றுகேட்ப, அரபத்தன்சொல்லுகின்றனன். வேதத்தை மொழிந்தருளிய சிவபரஞ்சுடரே திருவருண் மேனிகொண்டுவந்துபதேசித்தாலன்றி வேறுவகையாற்பெறுதலருமையாம். அங்ஙனம் வந்துபதேசித்தலும் புண்ணிய தலத்திலன்றி

வேறெங்குஞ் சித்திபெறாதாகலான், துவாத சாந்தஸ்தலமாகிய மதுரையம்பதியையடைந்து, அங்கண் இந்திரவிமானத்தி லெழுந்தருளியிருக்கும் சிவபரஞ்சுடருக்குத் தென்பாரிசத்தில் வடவால்நிழலில் வீற்றிருக்கும் தக்ஷிணாமூர்த்தியின் சந்நிதியில் அருந்தவம்புரிவீராயில், அக்கருணாமூர்த்தி யுமக்குவெளிப்பட்டு வேதப்பொருளை யுணர்த்துமென் றுரைப்ப, அவ்வாறே யவ்வரதத்தன் பின்சென்று ஆலயமடைந்து, பொற்றாமரையில் ஸ்நானஞ்செய்து, விமானமீது வீற்றிருக்கும் சொக்கலிங்கப் பெருமானைப்பணிந்து துதித்து, எம்பெருமானே! மறைப்பொருள்தெரியாது வாடிய எளியேங்கட்கு நீயேயப்பொருளாய் நின்றனை, நீயன்றி யதற்குப்பொருள்வேறியாதென்று சிவபெருமானையும், அங்கயற்கண்ணம்மையையுந் துதிசெய்து, தக்ஷிணாமூர்த்தியின் சந்நிதான மெய்திப்பணிந்து, ஆபத்தனால் தக்ஷிணாமூர்த்தியின்இருபத்திரண்டமந்திராக்ஷரங்களையுந் தெளிந்து, கார்த்திகைமாதமுதல் மார்கழிமாதமளவும் தருப்பணம் ஓமமுதலியனபுரிந்து தவமுயலும்போது, சிவபெருமான் பதினாறு வயதுடைய யௌவன வேதியவடிவங்கொண்டு அம்முனிவர்கள் முன்வரலும், ஆனந்தமேற்கொண்டு திருவடியில்வணங்கி, சுவாமீ! அடியேங்களும் உலகமுமுய்யுமாறு, வேதவி

ழூப்பொருளையருளிச்செய்தல் வேண்டுமென்று இரந்துகேட்க, சிவபெருமான் முனிவர்களோடும் சிவலிங்கமுன்பெய்தி அவர்களுள்ளந் தெளிவுபெறுமாறு மறைப்பொருளை நன்குபதேசித்து முதுகைத்தன்திருக்கையாற் றடவிமீண்டுமவ்விலிங்கத்துண்மறைந்தருளினர்.

திருச்சிற்றம்பலம்.

---

## மாணிக்கமவிற்றபடலம்.

வீரபாண்டியன் மதுராபுரியில் செங்கோல் செலுத்தி வாழுநாளில், அவனுக்குக்காமக்கிழத்தியரிடமாகப்பிறந்த புதல்வர்கள் பயிர்க்கெழு களைபோல் நாளுமோங்கி வீறடையவும், தன்குலத்தேவிக்கு மகவின்மையால் வருந்தி இருவரும் சொக்கலிங்கப்பெருமானை நோக்கிவிரதமனுஷ்டித்துவந்தனர். பின்னர், அக்கடவுளருளால் அருந்ததிபோலுங் கற்பிற்சிறந்த அக்குலமாதுக்கோர்புத்திரனுதிக்க, அவனுக்குவேதநூன்முறைப்படி, சாதகாதிகருமங்களை முடித்து பொலிவுபெறவளர்க்குநாளில், வீரபாண்டியன் காட்டில் வேட்டையாடச்சென்று புலிக்கிரையாயினன். அப்போது, நகருளார்யாவருந் துக்கசாகரத்தில் மூழ்கினவர்களாயிருப்ப, காமக்கிழத்தியர்பெற்ற மைந்தர்கள், ஈது நல்லசமையமென நோக்கி, யா

யானை, குதிரை, நிதி முதலிய கவர்ந்ததுமன்றி, இராஜகிரீடத்தையுமபகரித்துக்கொண்டுமறைந்தனர். பிறகு, அமைச்சர்கள் குலமாதிடம்பிறந்த அரசிளங்குமாரனைக்கொண்டு விண்ணடைந்த பாண்டியனுக்கு ஈற்றுக்கடன்களை முற்றுவித்து, பாண்டியகுமாரனுக்கு முடிசூட்டக்கருதிப் பொன்னறைதிறந்து பார்க்கையில், இரத்னமகுடமும், நிலநிதிகளுங் கண்டிலராகித் திகைத்துச் சிந்தைநொந்து, இதுபகைவர்கள்செய்த காரியமாயிருக்கின்றது. வேறுமுடிசெய்வோமெனினும், விலையேறப்பெற்ற மணிகளில்லை. அரசின்றியிருத்தலும் நன்கல்ல ஆதலால், செய்யத்தக்க திங்கென்னையென்று கலக்கமுற்ற சிந்தையராய், பாண்டியகுமாரனையழைத்துக்கொண்டு அரண்மனையகன்று, சிவபெருமான் சந்நிதியடையக்கருதி கோபுரவாயில் குறுகுமுன்னர், மதுரையெம்பெருமான் வணிகவேடத்தராய் தோளில் நவமணிப்பொதி தாங்கிவந்து, நீவிர்சிந்தைவருந்திவந்த செயல்யாதென்று வினவ, அவர்கள் நிகழ்ந்தனயாவு முறையேபுகன்றனர். சிவபெருமான் அவர்களைநோக்கி, நீர்வருந்தல் வேண்டாம், என்னிடத்தில், பதினுயிரங்கோடிப்பொன் விலையேறப்பெற்ற நவமணிகளுள்ளன. அவற்றைக்காட்டுவனென்று கீழ்த்திசைநோக்கி யுட்கார்ந்து, விரித்த கருந்துகிலி

ன்மீது நவமணிகளைப்பெய்து, இம்மணிகள் வலாசுரனுடைய உடற்சின்னங்களா மென்று சொக்கலிங்கப்பெருமான் கூறலும், அமைச்சர்கள், ஐயா! அவ்வசுரன்யாவன்? அவனுடல் மணிகளாதற்குக் காரணம் யாது? விளம்பு மென்ன, வணிகவேடம்பூண்டுவந்த சிவபெருமான் மொழியலுற்றனர். பூர்வம்வலாசுர னென்போன் சிவபெருமானைநோக்கி யருந்தவம் புரிகையில்,எம்பெருமான் வெளிவந்து நீ விரும்பியவரம் யாதென்று வினவ, சுவாமீ, நான் போரில் யாவராலும் இறவா திருத்தல்வேண்டும், ஓர்வேளை ஊழ்வினைவலியால் மரணமெய்தின், என்னுடல்துறவினரும் விரும்பத்தக்க நவமணியாதல் வேண்டுமென்று குறையிரக்க, அவ்வாறே யாகுகவென்று பரமேஸ்வரன் வரமளித்தனர். அன்றுதொட்டு போர்விருப்பமுடையானாய், தேவேந்திரனுடன் யுத்தஞ்செய்யும்போது, அவன் அமர்செய்ய வலியிலனாய் தோல்வியெய்திச் சென்றவன், சூழ்ச்சியால்வெல்ல நினைத்து, படைக்கலங்களின்றி தேவர்கூட்டத்தோடும் மீண்டு மவ்வலாசுரனிடம்போய், ஓ! ஜயசாலியே! நின் புஜபராக்கிரமமும் வெற்றியும், எல்லாத்திசையிலும் பரவியுள்ளகீர்த்தியையுங்கண்டு மிக்கமகிழ்ச்சியடைந் துன்பால்வந்தேன்.நீவிரும்பிய வரங்கேட்பின், தடையின்றித்தருவேனென்

றுரைப்ப, அதுகேட்ட அவுணர்கோனும் குலுங்கநகைத்து, நீநன்குமொழிந்தனை. நீயென்னைப்போரிற் புறங்கண்டதும், அதனாலடைந்த ஜயமும் புகழும், இன்று நீசெய்தயுத்தத்தில் நன்குபுலப்பட்டது. அதனால் உன்கீர்த்தியெங்கும் நிலைநின்றது. இவ்வண்ணமேயுன்கொடையும் நிலைக்கும். ஈஸ்வரனளித்த நல்லவரங்கள் பலவெனக்கிருப்பதால், நின்பால் நானடையவேண்டியதொன்றுமேயில்லையாதலின், நீவிரும்பியவரங்கேள். இப்பொழுதேதருவேன், கொடுக்கத்தவறுவேனாகில், உன்போல் சமர்க்களத்தில் முதுகிட்டவரடையும் பழிப்புகழடைவேனென்று வலாசுரன் புகன்றனன்.

வலாசுரனிவ்வாறிறுமாந்து கூறியமொழியைத் தேவேந்திரன்கேட்டு மனங்களித்து, அப்படியானால் சர்வலோகசரண்யனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீகைலாயமலையையானடைந்து, ஆங்கோர் யாகம்புரியக்கருதி யிருக்கின்றனன். அப்போது, நீதேவர்க்கூட்டும் பசுவாய் வருதல்வேண்டுமென்று கேட்டலும், வலாசுரன் முகமலர்ச்சியுடன் கூறுகின்றனன். பூர்வம் ததீசிமஹாமுனி தன் முதுகந்தண்டெலும்பை வச்சிராயுதத்துக்காக உனக்களித்தகொடையால் ஓர் புகழுடலடைந்தனன். யானோ வெற்றியினாலும்,

மாண்டபின்னர்,மெய்யெலாமணிகளாகப் பெறுங்கொடையினாலும் புகழுடம் பிரண்டடைவேன். இதுபெறுதற்குக் காரணனீயாதலால், உன்னைத் தோழனென்னல் வேண்டுமேயன்றிப் பகைஞனென்றுரைத்தல் கூடாது. நீவிரும்பியவண்ணமே யாகப்பசுவாவேனென்று இந்திரனை முன்போக்கித் தான் தன்னுடைய பதியடைந்து தன்புத்திரனுக்கு முடிசூட்டிவிட்டு, சொன்னமொழிதவறுமல் வேதத்திற் கூறிய லக்ஷணமமைந்த யாகப்பசுவாய் வேள்விச்சாலைப்புறத்து வந்திருந்தனன். அதுகண்ட தேவேந்திரன் அவனுடைய வுறுதிக்காக வியந்து கூறலும், வலாசுரனிறுமாந்து என்னை யாகத்தம்பத்தில் கட்டுங்களென்று குறுகிநிற்ப, தேவர்கள் தருப்பைத்தாம்பினால் பிணித்து,மூச்சடங்கும்படி வாயைப்புதைத்துக் கொன்றனர். உடனே வலாசுரன், தேவர்கள் பூமாரிபொழிய விமானமேற்கொண்டு பிரமலோகஞ்சென்றனன். பின்னர், தேவேந்திரன், அப்பசுவின் வபையைவாங்கி, முன்னர் அக்னிபகவான் சுவைபார்க்க, தேவர்களுக்கருத்தி யாகத்தைப் பூர்த்திசெய்தனன். அப்பசுவின் இரத்தமே மாணிக்கம், பல் முத்து, மயிர் வயிடூரியம், எலும்பு வச்சிரம், பித்தம் பச்சை, கொழுப்பு கோமேதகம், தசைபவளம், கண் நீலம், கபம் புஷ்பராகமாம். இது

தான் நவமணியின் தோற்றம். மாகதத்தோற்றம் பலவேறுவகையாகும். வலாசுரன் வயிற்றிலுள்ள பித்தத்தை இரையின்பொருட்டாகக் கௌவிக்கொண்டு பறந்துபோன பறவைகள் டில்விநாட்டில் சிதறவிழ்ந்து தங்கிய தோற்றமொன்றாம். ஈதல்லாமலும், வினதையென்பவள் அருணன் உதித்தமுட்டையோட்டைக்கருடனரையில் கட்டியனுப்ப, அவன் பறந்து போகையில், அரையினின்றுந் தவறிவீழ்ந்து ஒரு தீவினிடத்திலுண்டாய தோற்றமுமாம். இன்னமொருவகை தாமரைக்கண்ணனாகிய திருமால், மோகினியா யோடாநிற்கையில், சிவபெருமான் ஒரு திருவிளையாட்டாலே மந்தரமலைவரையில் அம்மோகினியணங்கைத் தொடர்ந்துபோ யங்கு சிந்திய இந்திரியத்தில் அரிகரபுத்திரனுதித்தனன். அவ்விந்திரிய சேடத்தைக் கருடன் கௌவிக்கொண்டுசென்று, கடலிலுந் துர்க்கநாட்டிலும் விடுப்ப, அதனிடமுண்டாயது கருடப்பச்சையாம். நீலம் இந்திரநீலம் மாநீலமெனவிருவகைப்படும்.

இந்திரநீலமாவது, விச்சுவவுருவனை இந்திரன்கொன்றகாலத்தில், அப்பழிவாங்கும்பொருட்டாகச் செய்த யாகத்தின் புகையானது பொன்னாட்டிலுள்ள மகவானுடைய குதிரையின் கண்களில் நுழைந்து அதனால் ஒழுகிய

பிளேசிந்திய விடத்தில் தோன்றியது இந்திர நீலமாம். சூரியன்மனைவியாகிய சஞ்சையென்பவள் அவன் கனலுடலைத்தழுவுதற்குச் சகியாதவளாய் தன்உருவத்தைப்போல் நிழலை நிறுத்திவிட்டுக் காட்டகஞ்சென்று தவஞ்செய்கையில், அதைச் சூரியனறிந்து பின்றொடர அவள் பெண்பரியுருக்கொண்டு போகையில் தானுமாண்பரியாய்த் தொடர்ந்து இந்திரியஞ்சிந்த, அவ்விடத்திற்றோன்றிய நீலம்மாநீலமெனப்படும். வலன் கபம்வீழ்ந்தவிடத்தில் புருடராகந்தோன்றும். திருமால் வராகாவதாரங்கொண்டு பாதாளத்திற்சென்று இரணியாக்ஷனைக்கொன்று திசைகள் செவிடுபட நகைத்துக்கக்கிய கபம்வீழ்ந்த தீவிலும் புருடராகந்தோற்றும். இம்மணிபாரியாத்திரகிரியில் கொடுமுடியாய் விளங்கும் மந்தரமலையைப் புறஞ்சூழ்ந்திருக்கின்றன. மயனென்னும் தெய்வத்தச்சன் இம்மணியாலே தேவேந்திரனகரும், அரசிருப்புமண்டபமு மமைத்தனன். பவளம் வலாசுரன்தசை வீழ்ந்த விடத்திலும், நான்முகன் தென்புலத்தாரைப் படைக்குமிடத்து அவருடன்மாசிழிந்தவிடத்திலும், நாராயணன் மதுகைடவர்களைக் கொலைபுரிந்த உதிரம்வழிந்த நிலத்திலும், இந்திரன் பர்வதகுலங்களை யிறகரிந்த இரத்தஞ்சிதறிய விடத்திலுந்தோன்றும் என்று, நவமணிகளின் தோற்

றம், நிறம், சாதி, தெய்வதம், ஒளி, குற்றம் ஆணிவேரனைத்தையும் பலன் முதலியனவு முறையேயெடுத்துக்கூறி, சிவபெருமான் வடதிசைநோக்கி சொக்கநாதரையஞ்சலி செய்து, இப்பாண்டியகுமாரனுக்கு தீர்க்காயுளும், நிறைந்த செல்வமுமுண்டாகுகவென்று ஆசீர்வதித்தளித்தருளலும், பாண்டியகுமாரனும்மதுரையெம்பிரானை நோக்கிப்பணிந்தெழுந்து, அம்மணிகளை இருகையாலுமேற்று நின்றனன். பின்னர், வணிகவேடந்தாங்கி வந்த சிவபெருமான், பாண்டிய குமாரனையும், அமைச்சர்களையும் நோக்கி இம்மணிகளால் முடியமைத்துச்சூட்டி இப்பிள்ளையை அபிஷேக பாண்டியனென் றியம்புகவென்று, அக்குமாரன்மேல் பூரணகடாட்சம்வைத்து, அம்மணிகளுக்கு விலைகொடுக்க வருமுன்னே மறைந்தருளினார்.

மறைந்த சிவபெருமான் உமாதேவி சகிதராய் இடபவாகனத்தி லாரோகணித்து விசும்பிற்றோன்றி தரிசனந்தந்துகோயிற்புகுந்தனர். பின்பு, அமைச்சரும்பாண்டிய குமாரனும், மற்றுமுள்ளாருந்தொடர்ந்து ஆலயத்தெய்தி, பலவாறு துதித்துத்தொழுது எம்பெருமானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, முனிவர் ஆசிகூற, மங்கலவாத்தியங் கோஷிக்க, அரண்மனைவந்தடைந்து, பொற்கம்மியர்க்கு வேண்டியபொருள்கொடுத்து, மகுடஞ் செய்வி

த்து, வேதவிதிப்படி சுபதினத்தில் முடிசூட்டி சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய வண்ணமே அபிஷேகபாண்டிய னென்று நாமந்தரித்து, வீதிவலஞ் செய்வித்து அரண்மனையெய்தினர். அபிஷேகபாண்டியனும், சத்துருக்களெல்லா மடிவணங்க மனுநீதி முறைப்படி செங்கோலோச்சியுலகாண்டு வருநாளில், தன்தந்தையின் காமக்கிழத்தியரிடமாகப் பிறந்தகுமாரர்களைச்சிலர் கொண்டுவந்து விடுப்ப, அவர்கள் முன்னுளில் பொன்னறைதிறந்து கவர்ந்துசென்ற நிதிகளையெல்லா மீட்டும்பெற்று வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

# வருணன்விட்ட கடலை வற்றச்செய்த படலம்.

அபிஷேகபாண்டியன் மதுராபுரியில் அரசுபுரிந்துவருநாளில், சித்திரைமாதத்தில் வருகின்ற சித்திராநக்ஷத்திரத்தில், வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடிய சொக்கலிங்கப் பெருமானைப் பூசித்துவருபவன், ஓர்நாள் பூசனைக்கு வேண்டிய பொருள்களெல்லாங் கொண்டுபோய், நெய்முதலியவற்று லபிஷேகஞ்செய்தபின்னர், கர்ப்பூர நீராலபிஷேகித்துப் பரமசிவனைத் தன்கண்குளிரநோக்கிக்களித்து, என்

கர்ப்பூர சுந்தரனே யென்று கொண்டாடி ஆனந்தபரவசனாயிருந்தனன். அப்பொழுதுபொன்னாட்டுக்கிறைவனாகிய தேவேந்திரன் வருடந்தோறும் எம்பெருமானைப் பூசித்துவரும் நியமனமுடையானாதலால், அன்றும் நியமனம்போல்வந்து பாண்டியனுடைய பூஜைமுடியுமளவுங் காத்திருந்து, பின்னர்நிறைவேற்றித் தன்னாடுசேர்ந்தனன். அன்றுவருணதேவன் தேவேந்திரனுடைய சபைக்குப்போய், அவனுடையமுகம் வாடியிருந்தலைநோக்கி, நீயின்று வாட்டமுற்றிருந்ததற்கேதுவென்னை யென்றுகேட்ப, நான்மதுரைநாயகனைப் பூசித்துவரச் சிறிதுகாலந்தாழ்த்தமையா லென்மனஞ் சஞ்சலமுற்றிருக்கிறதென்று தேவர் பெருமான் ஆகிய இந்திரன் விடைபகர்ந்தனன்.

அதுகேட்ட வருணன், அது மஹாலிங்கமோவென்று வினவ, மகவான்பூர்வம் எனக்குத் துருவாசரால்வந்தபழியும், வெள்ளையானையினுடையசாபமுந் தீர்த்தருள் செய்ததை நீயறிந்திலைபோலுமென்று சொல்ல, அங்ஙனமாயின் தெய்வவைத்தியராலுந் தீர்க்கரிதாய் என்னை நெடுநாளாய் வருத்துகின்ற வயிற்றுநோயைக்குணமாக்குமோவென்று கூறலும், நீவினாயதரிதன்றா? பிரம விஷ்ணுக்களாலுமொழித்தற்கருமையான பிறவிநோயையறுக்கவல்லபெருமானுக்கு, இந்தவற்பமான யாக்

கைப்பிணியைத்தீர்த்த லருமையாமோ? நீய
தை யறியவேண்டின் சோதித்துணர்வாயெ
ன்று இந்திரன்மொழிய, வருணதேவன் கூறுகி
ன்றனன். இந்திரனே, நான் வரும்போது, வ
ழியில்பசுவுங்கன்று மெதிர்ப்பட்டன. அந்த
நற்சகுனத்தின் பயனாக உன்வாக்கி லிந்நன்
மொழிகேட்டேனென்றுகூறி வச்சிரபாணி யி
டத்தில்விடைபெற்றுக்கொண்டு, சிவபெருமா
ன் திருவிளையாடலைக்கண்டு வயிற்று நோய்தீ
ர்த்துக்கொள்ளக்கருதி கடலைநோக்கி, நீவிரை
விற்போய் மதுரையம்பதியையழிக்க வென்று
ஏவ, அது உலகநடுங்கும்படி பிரளயகாலவெ
ள்ளத்தைப்போ லாரவாரித்துப்பொங்கி வரு
வதை அபிஷேக பாண்டியன்கண்டு கலங்கி,
சொக்கலிங்கப் பெருமானை யடைந்து முறை
யிடலும், கருணையங்கடலாகிய எம்பெருமா
ன் பாண்டியனைநோக்கி, அஞ்சேலென்று அப
யாஸ்தந்தந்து தமது ஜடாபாரத்திலிருக்கும்
நான்குமேகங்களை விடுத்தனர். அவைபோய்,
வெள்ளங்கொண்டுவந்த கடலை வாரியுண்டமா
த்திரத்தில், ஜலமெல்லாம் வற்றிப்போயது.
அதுகண்ட மதுராநகரிலுள்ளாரும் பாண்டிய
னும், சிவபெருமானுடைய திருவிளையாடலை
நோக்கியானந்தமெய்தியிருந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

---

# நான்மாடக்கூடலானபடலம்.

அபிஷேகபாண்டியன் மதுராபுரியில் செங்கோல்செலுத்தி வருநாளில், வருணன் தான்முன்னர் மதுரைமேல்விடுத்த கடலைச்சோமசுந்தரப்பெருமான் தமது ஜடாமுடியிலுள்ள மேகங்கள் நான்கினையனுப்பி வற்றச்செய்தமைகண்டு நாணமுற்று, சிவபெருமானுடைய திருவிளையாடலைத்தெளிந்திலானாய்ப் பின்னுஞ் சப்தமேகங்களையும் அழைத்து, கடல் வற்றிப்போம்படி நீரருந்தி, இடித்துச்சோனைமாரிபெய்து மதுராநகரத்தை விரைவிலழிக்கவென்று கட்டளையிட்டனன். உடனே மேகங்களேழும்புறப்பட்டு, சமுத்திரம்வற்றி நிலந்தோன்றும்படி நீருண்டு, கறுத்து மின்னி, எண்டிசையும் வானுஞ்செவிடுபடும்படி யிடித்து, உலகந்தாங்குஞ் சேடனும் உடல்நெளிய, திக்கஜங்கள் துணுக்கங்கொள்ள, கனத்த பளிக்குத்தூண்போல் தாரைகள் வீழ, பூமி, ஆகாயம், திசைகள் ஒன்றுந் தெரியாதிருண்டு மழைபொழிந்தன. இவ்வாறு மதுரையம்பதியைச்சூழ்ந்து வருஷிப்பதை பாண்டியனும், நகருளாருங்கண்டு, இஃது ஊழிநாளோவென்று மயங்கிவருந்தி சொக்கலிங்கப்பெருமானே இன்றும் இரக்ஷிப்பரென்று பாண்டியன் நகரத்தாரோடும் ஆலயமடைந்து, அங்கயற்கண்ணிபாகனைவணங்கி பலவாறு துதித்து குறையிரந்துநிற்றலும், சிவபெருமான் திருவுளமிரங்கி,

முன்போல் சடாபாரத்திலுள்ள நான்குமே கங்களையும் நோக்கி, நீங்கள்போய் மதுரை யம்பதியின் நான்கெல்லையுஞ் சூழ்ந்து, நான் மாடமாகி, சப்தமேகங்களையும் விலக்குங்க ளென்று விடுப்ப, அவையவ்வாறே நாற்றிசை யிலும் சந்துதெரியாமல் சூழ்ந்து போர்த்தன. அந்நான்மாடத்துள் நகரினரும், அமைச்சரு ம், பாண்டியனும், சதுரங்கசேனைகளும் மற் றுமுள்ளனவும், ஊழிகாலத்தில் சிவபெருமா ன் பாதநிழலில் இன்புற்றிருப்பார்போல தங் கியிருந்தனர். பின்னர், சப்தமேகங்களுந் தம் மாற்றலளவுபெய்தும் பயன்படாதது கண்டு நாண, வருணனும் நாணிநின்று, நடுக்கமெய் தி, உள்ளத்திலோருவகையுண்டாகி, பொற் றாமரைத்தீர்த்தங் குறுகுமுன்னர் தன்பழை யநோயொழிய, மிக்க வுள்ளன்போடு சொக் கலிங்கப்பெருமானைப் பூசிக்கமனத்தெண்ணி, பொற்றாமரையின் மூழ்கி, விபூதி ருத்திராக்ஷ மணிந்து, கங்கைமுதலிய தெய்வப்பெண்கள் பொற்கும்பங்களேந்தி நீர்சொரிய, மலர், சந் தனம், ஆபரணம், ஆடைமுதலியன கற்பகந் தர, ஐங்கனி, பஞ்சகவ்வியம், தூபம், தீபம், மு தலியனகாமதேனுவாற்பெற்று, அங்கயற்கண் ணிமணாளனையருச்சித்து, சகஸ்திரநாமங் கூ றித்துதித்து, முத்துவடஞ்சாத்தித் தொழுது நின்றனன். அவனுடைய அருச்சனையுகந்த

பெருமான், வருணனே! நீவிரும்பிய வரங்கே ளென்றருளலும், அடிபணிந்து, சுவாமீ? எவ் விதத்திலுந் தீர்க்கவரிதாயிருந்த என்வயிற்று நோய் உன்பொற்றாமரைத் தீர்த்தத்தில் மூழ் கிய உடனே தீரப்பெற்றேன். வேதங்கள், பிரமவிஷ்ணுக்கள் முதலியோர் சோதனையி லுமகப்படா உன்னைச் சோதிக்கவுந் துணிந் தேன். அறிவிலியாகிய என்னிடத் தென்ன குணங்கண்டு என்பிணிதீர்த்தருளினாய். குற் றத்தைக் குணமாகக் கொள்வது நின்குணமெ ன்று நான்கண்டேன்.

பொன்னாட்டுக்கிறைவனாகிய தேவேந்திர ன் காலந்தாழ்த்துன்னை யருச்சித்து மனச் சோர்வுடன்சென்றதும், அவனையான் வினவி யதும், அதற்கவன் விடைகொடுத்ததும், அ தன்மேல் விநோதபாவமா யானவனைக்கேட் டதும், அனையான் சொல்வழி யும்மைச் சோ தித்ததும், இவையாவும் முடிவில் என்பிணி க்கு மருந்தாய்முடிந்தது. ஆண்டவனே, என் வயிற்றுநோயன்றி மலநோயுமொழிந்து மோ க்ஷமார்க்கமும் பெற்றேன். பிணிக்கு, மணி மந்திர ஔஷதங்களேதுக்கு? இத்தீர்த்தமே சகலபிணிகளையுந் தீர்க்கும். அடியேன் உம் மிடத்திற் செய்த இரண் டபராதங்களையும் பொறுத்தருள்வேண்டுமென்று பலமுறை வணங்கித் துதித்து, வேண்டியவரங்களைப்பெ

ற்று தன்னகரடைந்து வாழ்ந்திருந்தனன். வருணன்விட்ட கடலைவிலக்கச் சிவபெருமான் சடையினின்றும் விடுத்த மேகங்கள் நான்கும் மலைபோலுயர்ந்து நான்குமாடமாகக்கூடிய காரணத்தால் மதுரை நான்மாடக்கூடலாயது.

திருச்சிற்றம்பலம்.

---

# எல்லாம்வல்லசித்தரான படலம்.

அபிஷேகபாண்டியன் மதுராபுரியில் செங்கோல்செலுத்திவருநாளில், பாண்டியனும் மதுரையம்பதியாரும் இம்மைச்செல்வங்களையுமடைந்து மேல்மோக்ஷசாம்பிராச்சியமெய்தியின்புறுமாறு, சோமசுந்தரப்பெருமான் திருவுளங்கொண்டு, ஒரு சித்தவேடராய் மதுராபுரியின் கடைவீதி, சித்திரகூடம், நாற்சந்தி, உப்பரிகை, மாளிகை, நகர்வாயில், திண்ணை முதலிய இடங்களைக்குறுகி, தெற்கிருப்பவர் போற்காட்டி வடபுலஞ்சென்றும், கீழ்த்திசையிலுள்ளவர்போல் நடித்து மேற்றிசையிற்றோன்றியும், ஒருவராலு மறியொண்ணாத இந்திரஜாலங்கள்புரிந்தும், தூரத்திலுள்ளமலையைச் சமீபத்தில்வரச்செய்தும், அடுத்துள்ள மலை

யைத் தூரத்தில்விடுத்தும், வயோதிகர்களையிளையவராக்கியும், இளையாரைவிருத்தராக்கியும், ஆணைப்பெண்ணாகவும், பெண்ணையாணாகவுஞ்செய்தும், மலடியைப் பிள்ளைபெறச்செய்தும், கூன், செவிடு, ஊமை, குருடு, முடமுதலியவை நீர்த்தும், நான்குலோகங்களையும்பொன்னாக்கியும், செல்வர் மனையிலுள்ளபொருள்களை வறியவர்வீட்டிற்சேர்த்தும், சிநேகர்கள் தம்மில்பகையின்றியே போர்புரியச்செய்தும், எட்டிமரத்தில் இனியகனிகள்பழுக்கச்செய்தும், அகாலத்தில் வையை நீர் பெருக்கெடுக்கவும் மீளவறப்பவுஞ் செய்தும், நன்னீரையுடைய ஓடையுந்தடாகமும் உவர்ப்பாகவும், கடல் நன்னீராகவுஞ்செய்தும், தன்கையிலுள்ள மாத்திரைக்கோலை அந்தரத்தில் நிறுத்தி, அதன்மேல் ஊசிநாட்டி, அவ்வூசிமேல்பெருவிரலூன்றியூசலாடியும், ஊசியின்மேற்றலைகீழாய் நின்று ஆகாயத்தில் சேவடிநீட்டிச்சுழன்றும், கருடனைப்போலாகாயத்திற் றாவிப்பறந்துமேகங்களைப்பிடித்து, இடியுடன் உண்டாநீரைப்பிழிந்து கண்டவரதிசயிக்கக்காட்டியும், மீண்டும் அம்முகில்களை வானத்தில்விடுத்தும், இரவில்வரும்பொருள்களைப் பகலிலும், பகல் உண்டாகும்பொருள்களை இரவிலும் வரச்செய்தும், நெருப்பு, நீர், காற்று, இவற்றின் வலிகளையடக்கியும், நாளாநாளில்

மலர் காய் கனி யிவைகளையுண்டாக்கியும், விருத்தர்களைப் பிரம்பினால்வருடிக் காளையரா க்கியும், அவர் மனைவியரும் கருவடைந்து அவர்களுக்கிசைய மங்கைப்பருவத்தினராகும் படியாக்கித் திருநீறளித்தும், ஆகருஷணம், அதிரிச்சியம், அஞ்சனம், வசியம், வாதம், வயத்தம்பம், முதலிய விஞ்சைகள் காட்டியும், வேதசாஸ்திரமுணராதவர்களுக்கெல்லாக் கலைகளும் விளங்கும்படி நாவினிற் பூதிசிதறியும், பாண்டியன் தேவிமாரோடும் உலாவும்பூஞ்சோலையிலுள்ளதெங்கினைப்பனையாக்கியும், மற்றுமுள்ள மரங்களையும், பறவைகளையும், விலங்குகளையும் ஒன்றையொன்றாகமாற்றியும், ஆடவரும் மாதராயினேமில்லையே யென்றேங்கும்படி மிக்க வெழில்வாய்ந்தும், நாகலோகம், தெய்வலோக மிவ்விடங்களிலுள்ள பொருள்கள் மதுரையில் வரச்செய்தும், இவ்வாறு சிவபெருமான் பலதிருவிளையாடல்களைச் செய்திருந்தனர், மதுராபுரியிலுள்ளாரெல்லாரும் சித்தயோகிகள்செய்யுந்திருவிளையாடல்களைநோக்கி மனதை யதிற்செலுத்தித் தத்தந்தொழிலை மறந்திருந்தனர்.

இச்செய்தியை, ஏவலாளரால்பாண்டியனறிந்து, அச்சித்தயோகியை ஈண்டு அழைத்துவருகவென்று அடுத்துளாரைவிடுப்ப, அவர்கள்போய் அவராடலை வியப்புடன் பார்த்துக்

கொண்டிருந்தனர். பின்னர், பாண்டியன் அமைச்சரைவிடுப்ப, அவர்கள் சித்தயோகிகளடிபணிந்து, சுவாமீ! அரசனிடம் வருதல்வேண்டுமென்று பிரார்த்திக்க, எமக்கு மன்னனுலாவதில்லை யெனமறுத்தலும், அவர் தொழுதுபோய் பாண்டியனிடத்திற் கூறலும், முன்னவனருள்பெற்று இம்மை மறுமைப்பலனை வெறுத்தயோகியர் இப்பூலோக வேந்தரைமட்டோ, இந்திரன் மாலயன் முதலியதேவர்களையு மதியாரென்று பாண்டியன் விடைகொடுத்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்

## கல்லானைக்கரும்பருத்தியபடலம்.

அபிஷேகபாண்டியன் பின்னர் அச்சமுற்று, நான் அறிவின்மையால் பெரியோரென்றெண்ணாமல் ஈண்டழைத்துவரக் கட்டளையிட்டமை நன்று! நன்று! அரசர்பால் பெற வேண்டியகுறையவர்க்கென்னுளது. நானே போயவரைக்காண்பே னென்று அன்புகூர்ந்து, தைமாதச்சோமவாரத்தில் மதுரேசனை வந்தித்து வலம்வருகையில், சித்தவேடங்கொண்ட சிவபெருமான் ஆலயத்தின்பிராகாரத்தில் வடமேற்றிசையிலெழுந்தருளியிருந்தனர். பாண்டியனுக்கு முன்னேவருகின்ற கஞ்

சுகிமாக்கள், புலித்தோலாசனத்தில் யோகப்
பட்டத்தராய் மாத்திரைக்கோற்றாங்கி யிரு
மாந்திருக்குஞ் சித்தரைநோக்கி, எழுந்துசெ
ல்கவென்றுரைத்தனர். பின்னேவருகின்ற
பாண்டியன் பெரியோரைநோக்கி, நும்மூரே
து? நுந்நாமமென்னை, நுமக்கென்வரும்! நு
மக்குவேண்டியதியாது? மொழியுமென்ன! சி
வபெருமான், நாம் எந்நாட்டிலும் எவ்வூரிலு
ஞ் சஞ்சரிப்போம். ஆனாலும் இப்போது யாமி
ருப்பது காஷ்மீரநாட்டிலுள்ள காசிப்பதியாம்.
பிச்சையே பெருவாழ்வாகவுடைய சங்கரனார்
தமர்நாம், எப்போதும் பலவிஞ்சைகள் நடா
த்தித்திரிகின்ற சித்தர்யாம். காசிமுதலாகவு
ள்ள சைவத்தலங்கள் பலவுந்தொழுதுவருகி
ன்றேம். இம்மதுராநகர் இம்மையிற் சீவன் மு
த்தியையும், மறுமையிற் பரமுத்தியையு நல்
குவதாதலால், ஈங்குள்ளோர்க் கெம்மாடலை
க்காட்டி யவர்கள்வேண்டிய பலசித்திகளையுந்
தருவோம். வேதமுதலாகிய அறுபத்து நா
ன்கு கலைகளிலும் வல்லோம். பொன்னாட்டி
லுள்ள எல்லாப்பொருளுந்தர வல்லசித்தர்
யாம். உன்னாலடையவேண்டிய தெமக்கொ
ன்றுமில்லை, பாண்டியனே யென்று சித்தயோ
கிகள் நகைத்துநிற்ப, பாண்டியன்கேட்டு, இ
வருடைய இறுமாப்பும், வீறும் நானளவிட்ட
றிவேனென்று. சித்தயோகிகளைநோக்கி, எல்

லாம்வல்லசித்தரென்று மதித்துரைத்தீர், இக்கல்லானைக்கிந்தகரும்பை யருத்திறைல், நீரே எல்லாம்வல்லவர். மதுரைப்பெருமானும்நீரே. நீர் வேண்டியதுந் தருவேனென்று பாண்டியன் கூறலும், சித்தயோகிகள், எப்பொருளிலும் எமக்காசையில்லை யாயினும் நீ சொல்லியவாறே கல்லானைகரும்புண்பதை நீபாரென்றுரைத்து, சிறிது கடைக்கணேக்கினர். உடனே கல்யானையானது கண்விழித்து, மும்மதம் பொழியவார்த்து, தும்பிக்கைநீட்டி, அங்குள்ளவன்கையில் பற்றியிருந்தகரும்பைப் பறித்துத்தின்று, மிகவுந் தருக்கிச்சீறி நிற்ப, பின்னுஞ் சித்தயோகிகள் சிறிது கடைக்கணித்தனர். அக்கணத்திலேபாண்டியன் கழுத்திலிருந்த மாலையையும்பறித்தது. உடனே கஞ்சுகிமாக்கள்சீறி யானையைப் புடைத்தற்குக்கோல் கொண்டோச்சலும், சுவாமிகள், யானையைச் சீறிநோக்கினர். அம்மாத்திரத்தில் யானைபாண்டியனது கண்டமாலையை யுண்டுவிட்டது. அதுகண்ட பாண்டியன்சினந்து, கஞ்சுகிமாக்களைநோக்கலும், அவர்கள் சித்தரையடிக்கவந்தனர். சுவாமிகள் அவரைநில்லுங்களென்றுரைத்துக் கையமைத்தலும் அனையாரெல்லாம் சித்திரப்பதுமைபோலசைவற நின்றனர். பின்னர், பாண்டியன் கோபமாறி, உள்ளத்தி லதிசயங்கொண்டு சுவாமிகள் திருவடிகளி

ல் வீழ்ந்து அடியேன் பிழைபொறுத்தருளல் வேண்டுமென்று வேண்டினன். கருணையங் கடலாகிய சிவபெருமான் அவனை தன்புக்கிரங் கி, நீவிரும்பிய வரங்கேளென்ன, பாண்டியன் புத்திரப்பேறு வேண்டினன் அவ்வாறேநல்கி யானைமீதுநோக்கம்வைக்க, அக்கல்லானை து ம்பிக்கைநீட்டி மாலையைநல்கவாங்கிப் பாண் டியனணிந்தனன். பின்னர், அங்குநின்ற சித் தயோகிகளைக்காணாது, யானைபண்டைப்படி கல்லாயிருக்கக்கண்டு, அற்புதமெய்தி, எம் பெருமானே முற்றுமுணர்ந்த நின்றிருவிளை யாடலை யேழையேனறியாமல் அளவிட்டுக் கெட்டேன் என்று அழுதுநின்று பலவாறு துதித்து அரண்மனையெய்தி விக்ரமபாண்டிய னை யீன்று, பன்னாள் செங்கோலோச்சிப்பின் னர், புத்திரனுக்கு முடிசூட்டி சிவபெருமான் திருவடிநீழலடைந்து சுகித்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## யானையெய்தபடலம்.

---

விக்கிரமபாண்டியன் மதுராபுரியில் அரசு செலுத்தி சமண்முதலாகிய புறமதக்களைகளை ந்து சைவப்பயிரை யோங்கிவளரச்செய்து, சொக்கலிங்கப்பெருமான் வீற்றிருந்தருளும்

விமானத்துக்கு வடபாலாலயமெழுப்பி, சுவாமி திருவுருவங்கண்டு பணிசெய்துவாழுநாளில், சமணமதத்துறையினின்றொழுகும் காஞ்சீபுரத்தி லரசுபுரிபவனாகிய சூரியவமிசத்தில் வந்த சோழனொருவன், சிவநேசம்பூண்டொழுகும் பாண்டியனோடு சமர்புரியச்சக்தியிலனாய் வஞ்சனையாலவனை வெல்லநினைத்து, அஞ்சனம், கவுஞ்சம், கோவத்தனம், திரிகூடம், காஞ்சி, சையம், ஏமகூடம், விந்தம், என்னும் அஷ்டபர்வதங்களிலும் வசிக்கின்ற தன்குருக்கள்மாராகிய சமணர்களுக்கு வெவ்வேறு ஓலையெழுதிவிடுத்தனன். அவ்வோலை கண்ட சமணகுருக்கள் எண்ணாயிரவரும் ஒன்றுகூடி காஞ்சிநகரெய்தி, அரண்மனைகுறுகி, சோழனைக்கண்டு அவன்முடிமேல் பீலி வைத்து ஆக்கங்கூறிநிற்ப, வேந்தன் அவர்களைநோக்கி, சுவாமிகளே! ஆபிசாரயாகஞ்செய்து பாண்டியனைக்கொன்றாலுங்கட்கென்னாட்டில் பாதி தருகின்றேன் உடனே செய்யுங்களென்றனன். அவர்களதற்குடன்பட்டுப் போய் பாலாற்றின்கரையின் முக்காததூரத்தில் விசாலமானயாகசாலை அஷ்டகோணங்களாகக்கோலி, விடம்பொதிந்த காஷ்டங்களிட்டு, நஞ்சுடையுயிர்களின் தசையூறிய வேம்பினெண்ணெய் சொரிந்து கொல்லாவிரதியராகிய அச்சமணர் வேள்விசெய்தனர். அவ்வேள்வி

யால், காடுசோலைமுதலிய யாவுந்தீய்ந்து, குளங்கள்முதலிய நீர் நிலைகள் வறப்ப, அந்த யாககுண்டத்தினின்றும் அஞ்சன மலைபோன்ற தோற்றமும், காற்றெழுசெவியும், துதிக்கையில்கௌவிய கொம்பும், ஊற்றெழுந்து வருகிறமதமும், ஊசலாடுந்துதிக்கையுமுடைய ஓர்யானை ஆலகாலவிடம்போல் சீறிவந்து நின்றது.

அதனை அக்கொடியோர்கண்டு, நீபோய் பாண்டியனை மதுரையோடும் அழித்துவருவாயென்றேவினர். அவ்வாறு அச்சமணர்களால் விடுக்கப்பட்டு, திக்குகள் செவிடுபட கர்ச்சித்து கூற்றம்போல் வருகின்றமதயானையை நகரத்தினரா லறிந்தபாண்டியன் மனங்கலங்கி சொக்கலிங்கப்பெருமா னாலயங்குறுகிசந்நிதியில் வணங்கி, எம்பெருமானே! இம்மதயானையையழித்து, எனைக்காத்தருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க, அன்பனே, நாமொருவிற்சேவகனாகி, சத்துருக்கள்விட்ட யானையைத்தொம்சம்செய்கின்றோம். நீ மதுரைக்குக்கீழ்பால் ஒரு அட்டாலைமண்டபஞ்செய்கவென்றோர் அசரீரிவாக்குண்டாயது. பாண்டியனது கேட்டு அவ்வாறே நாற்றூணுட்டிய ஒருமண்டபஞ்சமைத்தனன்.

சொக்கலிங்கப்பெருமான், காளகண்டம், சதுர்ப்புஜம், திரிநேத்திரம், மான்மழுசடாமுடி முதலியனமறைத்து, இரண்டு திருச்செவி

களிலும் சங்கக்குழைகளணிந்து, சிகையில் மயிற்கலாபஞ்சூடி அரையில் சிவப்புக்கச்சை கட்டி, அதனிடை உடைவாள்செருகி, கால்களில் வீரகண்டையணிந்து, முதுகில் அம்புறுத்தூணிதூக்கி, நீண்டவில்லொன்றேந்தி, காமனும்விரும்பும் பசியதிருமேனியுடைய காளைவிற்சேவகனாய்த்தோன்றி, சமணர்களால் விடுக்கப்பட்ட பர்வதாகாரமாகிய மதயானையின்வரவு எதிர்பார்த்துக்கொண்டு, அது ஐந்து கூப்பாடுதூரத்தில் வருகையில், வில்லில்நாண் பூட்டி, அஷ்டதிக்கெஜங்களும் பயப்படுமாறு குணத்தொனிசெய்து, நரசிங்கக்கணை தொட்டுப் பிரயோகஞ்செய்தனர். அக்கணை யானைமத்தகத்திற்பாய்ந்து கிழித்தமாத்திரத்தில், அம்மத்த கெஜமானது மேகத்தைப்போல் அண்டங்கள்செவிடுபட ஆர்ப்பரித்து, தரையில் வீழ்ந்திறந்தது. அவ்வாறு வீழ்ந்திறந்தயானை பூர்வம் சிவபெருமான் தாளாலுதைபட்டுக்கிடந்த யமனைப்போலவும், பாண்டியன் மார்க்கண்டேயரைப்போலவும், சமணர்கள் எமதூதர்கள்போலுமிருந்தனர். இடிவீழ்ந்தமலைபோலும் யானையின்மத்தகத்திலும், வாயிலும் இரத்தவெள்ளம் பெருக்கெடுத்தோடியது. கழுகு, பூதங்கள் அச்சோரியை யுண்ணமொய்த்தன. அதுகண்ட பாண்டியன் மனதில் சந்தோஷமுற்றனன். யானையின்குருதி

யுண்ணும்படியடுத்தகருத்த வுடலுடைய பேய்க்கூட்டங்கள்போல், சோழனுடைய சேனைக்குமுன்வந்த சமணர்களைப் பாண்டியன் கண்டு சீற, அக்குறிப்புணர்ந்த அவனுடைய சேனாவீரர்கள் அவர்களைத்துறத்தி, கையிற் பற்றிய கமண்டலங்களைத் தூளாய்த்தகர்த்து, மயிற்பீலியையும், இடையில் கட்டிய ஈச்சம்பாயையும் கிழித்து, காற்றில்விடுத்து மானம்போக்கினர். அவ்வாறு மானமழிந்தசமணர்கள், தங்கள்மாயமெல்லாமழிந்து, மனந்தளர்ந்து பழிப்புண்டு ஒதுங்கியோடினர். யானையைக்கொன்று அட்டாலைமண்டபத்திலெழுந்தருளியிருந்த விற்சேவகனாகிய சிவபெருமானுடைய இரண்டு ஸ்ரீபாதங்களையும் பாண்டியன் தன்கைகளாற் பற்றிக்கொண்டு, எம்பெருமானே, இவ்விடத்திலேயே எழுந்தருளியிருத்தல்வேண்டுமென்று பிரார்த்திக்க, சிவபெருமா னவ்வேண்டுகோளுக்கிசைந்து, பின்னரு மப்பாண்டியன் வேண்டியவரங்களையெல்லாமளித்தனர். அதுபெற்றுக்கொண்டு பாண்டியன் சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து துதித்து அரண்மனை யெய்தி, இராஜசேகரனென்னும் புதல்வனைப்பெற்று, உலகரசாண்டு வாழ்ந்திருந்தனன். அவ்விடத்தில் வீற்றிருந்த சிங்காயகனையடைந்து உரோமசமுனிவன் தன்பேராலொரு தீர்த்தமுண்டா

க்கிப்பேறடைந்தனன். பிரகலாதனும் தவஞ்செய்து நல்வரம்பெற்றனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## விருத்தகுமாரபாலரானபடலம்.

விக்கிரமபாண்டியன் மநுநீதிவழுவாமல் மதுராபுரியில் அரசுபுரிந்து வருநாளில், அந்நகரத்தில் விருபாக்ஷனென்னும் வேதியனுக்கும் அவன்மனையாள் சுபவிரதையென்பவளுக்கும் நெடுநாள் மகப்பேறில்லாமல் பல தருமங்கள்புரிந்து சந்தமாதர்களை நோக்கித் தவங்கிடந்து அவர்களநுக்கிரகத்தாலொரு பெண்குழந்தையைப்பயந்து, கௌரி என்று பெயரிட்டனர். அப்பெண்வயதைந்தாகுங்காலில், தந்தையைநோக்கி, இக்கொடிய பிறவி நோயையொழிக்கவல்ல ஒருதெய்வமந்திரம் எனக்கு உபதேசித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தலும், அந்தணன்பேருவகையுள்ளவனாய் தன்னருமைமட்புதல்விக்கு தேவிமந்திரத்தையுபதேசித்தனன். அதனை யிடைவிடாமல் நாத்தழும்பேறப்பயின்று வருங்காலத்தில், தந்தையாகியவிருபாக்ஷன் தன்மகட்கேற்றமணவாளன் என்று வருவானென்று சிந்தித்திருந்தனன். அவ்வாறிருக்கையில், பெண்

பன்னிரண்டு வயதடைந்து, மேல் மணப்பருவம் வருவதாயிருக்கையில், ஓர்நாள் அயலூரினின்றும் பிரமசாரியாயொரு வைணவப்பிராமணன் பிச்சைக்குவந்தனன். அவனுக்குத் தன்பெண்ணைக் கொடுக்கச்சம்மதித்து, மனைவி சுற்றத்தார் முதலியவர்களை வினவாது, அவன்கையில் நீர்பெய்து தத்தஞ்செய்தலும், அதனைக் கேள்வியுற்றமனைவியும், சுற்றத்தாரும் மனம்வருந்தி, குலம், கோத்திரம் முதலியவிசாரியாமலே கன்னிகையை மணத்திற்குத் தத்தஞ்செய்தனனே யென்று பின்னர் விசாரித்து, ஒருவாறு குடிகோத்திரமுதலியவற்றி லொத்திருக்கின்றனன். ஆனால், வைணவ சமயத்தனா யிருக்கின்றனன். அதுதான் பெருங்குறை. ஆயினுமினிசெயலாவதொன்றுமில்லையென்று தாயு முறவினருங் கொடுத்தற்கிசைந்து, கௌரியென்னும் பெண்ணை வேதவிதிப்படி யவ்வைணவப்பிராமணனுக்கு மணஞ்செய்வித்து, வரிசைமுதலியன தந்து மணமகனையும் மகளையும் பிரயாணப்படுத்தி யவனூர்க் கனுப்பினர். அவ்வாறு மனையாட்டியோடும் பலசெல்வங்களோடும்வந்த பிராமணனை, வைணவசமயத்தி லொழுகும் துஷ்டர்களாகிய அவனது தாய்தந்தையர் கண்டு, மருமகளுடைய சைவதவவேடத்தையும், சிவசிந்தனையையும் பார்க்கப்பொறுதவர்

களாய் நெஞ்சழிந்து, அவளை வேறொதுக்கி வைத்து நிந்தைசெய்து வந்தனர். ஒருநாள் வேற்றூரிலுள்ள தம்மரபினர்வீட்டுக்கலியாணத்திற்குப்போகவேண்டி, கௌரியைத்தனியேவிட்டு வீடுபூட்டிக்கொண்டு சென்றனர். அப்போது, கௌரியானவள் தனியேயிருந்து, பண்டைய பழக்கத்தால், சிவனடியாரைக்காணப்பெறுமல் இன்று என்கண்மாசடைகின்றதேயென்று வருந்தியிருக்கையில், சிவபெருமான் அவளுடையபரிபாகதசையை நோக்கியருள்செயல்வேண்டி, உடன்முழுதுங் கண்டிகைபூண்டு, கையிலோர் புத்தகந்தாங்கி, வளைந்தமுதுகுங் கனைக்குநெஞ்சும், சரிந்த கோவணவுடையும், தலைநடுக்கும், விபூதியுத்தூளனஞ் செய்தமார்புமுடைய ஒருவயோதிக வேதியனாய்த் தண்ணீன்றி குடைபிடித்துக்கொண்டு,பலநாளுணவின்றி வாடிய பசியினர்போல், தள்ளாடி நடந்துவந்தமாத்திரத்தில், கௌரியெதிர்கொண்டழைந்துவந்து உபசரித்து ஆசனத்திருத்திப்பணிந்து, சுவாமிகள் ஈண்டெழுந்தருளற் கடியேன் என்னமாதவஞ்செய்தேனென்று கூறலும், சிவபெருமான் நாம்பசியாலுன்னிடம் வந்தோமென்றனர். அதுகேட்ட கௌரியானவள், வீடுபூட்டிக்கொண்டு சென்றனரேயென்று மனம் வருந்துகிற்கையில்; சுவாமிகள் ரீகையால்தொட்டமாத்திரத்

தில் அஃது திறக்குமென்றருளிச்செய்ய, அவ்வாறே திறந்து உட்புகுந்து, அடிசில் சமைத்து, எம்பெருமான் ஸ்ரீபாதங்களை விளக்கி, யந்நீரைத்தன் சென்னியில் புரோக்ஷித்துக்கொண்டு உள்ளழைத்துச்சென்று, ஆசனத்திருத்தி, திருவடிகளையருச்சித்து, பரிகலந்திருத்தி, பலநல்ல பதார்த்தங்களோடு அமுதுபடைத்து, இனிய வார்த்தைகள் சொல்லிக்கொண்டு சுவாமிகட்கமுதூட்டா நிற்கையில், அமுதமுண்பவர்போல் மூப்பகன்று, மன்மதனும் நாணத்தக்க வடிவமைந்த காளைப்பருவமுடையாராயினர். அதுகண்ட கௌரியானவள், நடுங்கி, கைகளை நெரித்துக்கொண்டு, வேர்த்துக்கூசி யொருபுறத்தொதுங்கிநிற்கையில், கலியாணத்தின் பொருட்டாக வேற்றூர்போயிருந்த நாயகன் மாமன் மாமியார் முதலியவர்கள்வந்தனர். அக்காலையி லெம்பெருமான், நெற்றியில் விபூதியணிந்து சிறுகுழந்தையாய் கால்பெருவிரல் வாயில்வைத்துச் சுவைத்துக்கொண்டு கண்ணீர்துளும்ப வாய்விட்டழுது அணையாடையிற் கிடந்தனர். அக்குழவியைக்கண்ட வைணவக்கொடியாளாகிய மாமியார் கௌரியைநோக்கி, இம்மகவேதெனக்கேட்க, தேவதத்தனென்னும் பிராமணன் தன்மனையோடு மிங்குவந்து, இக்குழந்தையைச் சிறிதுநேரம் வைத்திருவென்று சொல்

விவிட்டுப்போயினரென்ற மாத்திரத்தில், மிகு ந்த கோபாவேசங்கொண்டு, எலும்பணிந்து, சுடுகாட்டிலாடுஞ் சிவனிடத்தி லன்புபூண்ட தேவதத்தன் மகவிடத்திலன்புடைய நீ எங் கட்காகாய். என்று கௌரியை குழந்தையோ டும் வீட்டைவிட்டுத் துறத்தலும், தாயில்லா ப்பிள்ளையின் முகத்தைநோக்கித் தெருவிடை நின்று மனந்தளர்வாளாகிய கௌரியும், தே விமந்திரத்தை உச்சரித்து நின்றனள். அப் போது, குழந்தையாயிருந்த சிவபெருமான் பார்வதிதேவியோடும் இடபாரூடராய் விசும் பிற்றோன்றி, கௌரியைப் பார்வதியின் வடி வாக்கி, யாவருங்கண்டு தொழ விடைமேலே ற்றிக்கொண்டு, அமரர்கள் புஷ்பமாரிபொழிய ககனமார்க்கத்திற் சென்று மறைந்தருளினர்.

திருச்சிற்றம்பலம்.

---

## மாறியாடினபடலம்.

---

விக்கிரமபாண்டியன், தன்புதல்வனாகிய இராஜசேகரனுக்கு முடிசூட்டி விண்டுலோக முதலியயாவற்றினும் மேற்பட்டுப் பொலி தோங்குஞ் சிவலோகமடைந்தபின்னர், இரா ஜசேகரபாண்டியன் சிவபெருமான் அனவ தமு மானந்தநடம்புரிகின்ற பாதநாலொழி

து, ஏனைய அறுபத்துமூன்று கலைகளும் பயி
ன்று மதுராபுரியில் பொதுக்கடிந்து செங்கோ
லோச்சிவாழுநாளில், திருவானைக்காவிலுள்ள
சிவபெருமானிடத்தில் மிக்க அன்புடையானா
ய், அறுபத்துநான்கு கலைகளும் பயின்றுள்ள
கரிகாற்சோழனாட்டிலிருந்து ஒருபுலவன் பா
ண்டியனிடம்போந்து, அரசே! எம்மிறைவனா
கிய சோழனுக்கு அறுபத்துநான்கு கலைகளு
ந்தெரியும். உனக்கு அவற்றிலொன்றாகிய பர
தநூலொன்றுமாத்திரந் தெரிந்திலது என்று
கூறினன். அதுகேட்டலும், பாண்டியன் மா
னமீக்கொண்டு சிந்தாகுலனாய், வேதாகமமு
டியிலுஞ் சிற்சபையிலும் புரிகின்ற சிவபரஞ்
சோதியினுடைய நாடகத்தை காணுமாடுதற்
குளத்தில் விருப்புற்றது எம்பிரான் திருவரு
ளேயென்று அதுகற்கத்துணிந்து பரதநூலில்
வல்லபுலவரை யழைப்பித்து, அவர்கள் மன
மகிழும்படி, பொருள், ஆடையாபரணங்களை
ளித்து, பலநாள்வருந்திக்கற்று, அதிலுள்ள
மிக்கசிரமத்தை யறிந்து, இவ்வருத்தம் வெள்
ளியம்பலத்தில் தாண்டவஞ்செய்யும் எம்பெ
ருமானுக்கு முண்டேயென்று மனதிற்கொண்
டு, பிரம விஷ்ணுக்களுந்தேடிக் காண்டற்கரி
ய திருப்பதமொன்றையே தூக்கிநெடுநாணின்
று எம்பெருமான் நடம்புரியவும்,அவ்வருத்த
முற்றுமோர்ந்தநான் பார்த்துசும்மாயிருப்பது

தருமமாகுமோவென்று மனம்வருந்தி, அவ்வாடலைநாம் தடுப்பதுதகாதாயினும்பாதம்வருந்துமேயென்று ஆற்றாதசிந்தையனாய் இவ்வாறுசெய்வனெனத்துணிந்து,சிவராத்திரிநாளில் நான்கு யாமங்களிலுஞ் சிவபெருமானுக்குச் சிறந்த பூஜைகள்செய்து, சிவபெருமானுடைய திருக்கூத்தைத்தரிசித்து அகமகிழ்ந்து,கண்ணீர் தாரை தாரையாய் வழிய, கைகளைத் தலைமேற்கூப்பிக்கொண்டு, சுவாமீ! பதித்த திருவடியையெடுத்துவீசி, தூக்கிய ஸ்ரீபாதத்தை நிலத்தின்கணூன்றி யின்று அடியேன் காணும்படி நிருத்தஞ்செய்து என்மனவருத்தத்தை யொழித்தருளல்வேண்டும். அன்றேல்,என்னுயிரைமாய்த்துக் கொள்வேனென்று உடைவாளைநாட்டி, அதன்மேற்பாய நண்ணுமுன்னே, கருணையங்கடலாகிய எம்பெருமான், இடத்தாளையூன்றி, வலத்தாளை மேலெடுத்துவீசி மாறிநிருத்தஞ்செய்தருளினார். பாண்டியன்கண்டு பேரானந்தக்கடலின்மூழ்கி மனோவாக்குக்காயங்களை சிவபெருமானுக்கற்பிதஞ்செய்து,அன்புருவாய்நின்று, பலவாறு சிவபெருமான் புகழையெடுத்துத் துதித்து,எம்பெருமானே! இத்திருநடனத்தை யாவருங் கண்டு களிக்கும்படி, எக்காலத்து மிவ்வாறே நின்று அருள்செயல் வேண்டுமென்று குறையிரந்து திருவடியில் வீழ்ந்து பணிந்தனன்.

அவ்வாறே அடியார்க்கெளியனுகிய சிவபெருமானன்றுதொட்டின்றளவும் அந்நிலையிலேயேயிருந்தருள்செய்கின்றனர்.

திருச்சிற்றம்பலம்.

## பழியஞ்சினபடலம்.

இராஜசேகரபாண்டியன் மதுராபுரியில் சிலநாளரசுசெலுத்திவந்தபின்னர், தன்புத்திரனுகிய குலோத்துங்கனுக்கு முடிசூட்டி உலகவாழ்வைத்துறந்து சிவபெருமான் திருவடிநீழலடைந்தனன். குலோத்துங்கபாண்டியன் தந்தையால் தரப்பெற்ற செங்கோலை மனுநீதிவழுவாமல் நடாத்தி, சிவபெருமானடிக்கு மிக்க அன்புடையானுய் பதினுயிரம் பெண்களை மணந்து, ஒவ்வொருத்திக் கவ்வாறு பிள்ளைகளாக அறுபதினுயிரம்பெயரைப் பயந்தனன். அனந்தகுணனென்னு மூத்தபிள்ளை முதலாகிய அவ்வறுபதினுயிரவரும், பலகலைகளும் பயின்று தேர்ச்சியடைந்தமை கண்டு குலோத்துங்கபாண்டியன் மிக்கமனமகிழ்ச்சியடைந்து வாழுநாளில், வயல்கள்சூழ்ந்ததிருப்புத்தூரிலிருந்து மொருபிராமணன், தன்மனையாளோடும், கைக்குழந்தையோடுங் காட்டுவழியாக மாமன்வீட்டுக்கு மதுரையம்பதி நோக்கி வாராநிற்கையில், தாகவிடாய்கொ

ண்ட தன்னில்லாளுக்கு ஜலங்கொண்டுவரும்
பொருட்டு, மனைவியையுங் குழந்தையையும்
அங்குள்ள ஓர் பெரிய ஆலவிருக்ஷ நீழலிலிரு
த்தி, தான்போய் ஜலங்கொண்டு திரும்பிவரு
முன், நெடுநாளைக்குமுன் அம்மரத்தில்தைத்
துக்கொண்டிருந்த ஓரம்பானது காற்றால்வீழ்
ந்து, கீழிருந்த பிராமணமாதினுடைய வயிற்
றிலுருவியுயிர்வதைத்தது. அதுகாலையிலொ
ருவேடன் வில்லை அம்பேறிட்டவண்ணமா
ய் கையிலேந்தி அம்மரநீழலில் ஒருபக்கம் இ
ளைப்பாற வந்திருந்தனன். நீர்பொருட்டாகப்
போய்வந்த அந்தணன் உயிர்துறந்து இரத்த
வெள்ளத்திலாழ்ந்திருக்கு மனைவியையும் அ
ருகேகிடக்குங் குழவியையுங் கண்ணுற்றவனா
ய் பலவாறு சொல்லிப்புலம்பி, யாவரிப்பெ
ண்பழி விளைத்தவர்களென்று சுற்றிநோக்க
அம்மரத்தினோர்பால், அப்புவில்லேந்தி எதிர்
ற்கும் வேடனைக்கண்டு, இவனே நம்மில்லா
ளைக்கொன்றவனென்று எண்ணி, அடா வே
டா! என்னுயிர்போலு மனையாளை நீயேவதை
த்தனையென்று வாய்விட்டாற்றி மாண்ட ம
னைவியைத் தன்முதுகிற் சுமந்துகொண்டு, கு
ழந்தையைத் தன்சுற்றத்தாரிடஞ் செலுத்தி
விட்டு, அவ்வேடனைப்பற்றி யிழுத்துக்கொண்
டு, மதுரையம்பதியடைந்து பாண்டியன் ச
ரண்மனையெய்தி, வேடனையும் தன் உயிர்து

ந்த இல்லாளுடலையும் பாண்டியன்முன்னிட்டு தன்குறையை முறையிட்டனன். அதுகேட்டபாண்டியன் மனந்தளர்ந்து, மறவனை நோக்கி நீயேனிக்கொடுஞ்செயல் புரிந்தனையென்று வினவலும், அவ்வேடன், எம்மரசே! அடியேன் இளைப்பாறும் பொருட்டு இன்று அம்மரநிழலி லொருபக்கம் வந்திருந்தேனேயல்லாமல், யானுண்மையாய்க் கொலைபுரிந்தேனல்லன், கொன்றுரைக்கண்டேனுமல்லன் என்றுரைசெய்யலும், சூழ்ந்திருந்தமந்திரிகள் இக்கொலைசெய்தவன் இல்லையென்னுமல் உண்டென்பனோ? ஆகையால் இவனைத்தண்டித்தாலல்லாமல் உண்மையுரையானென்று புகன்றனர். பாண்டியனு மவ்வாறே செய்மினென்றேவினன். தண்டவீரர்கள் பாண்டியன்கட்டளையிட்டவாறே வருத்திக்கேட்டலும் முன்சொன்னவாறே சொன்னான். பாண்டியனின்னுந் தீரவிசாரியுங்களென்று. ஆஞ்ஞையிடலும், தண்டவீரர்கள் பின்னுமதிகமாய் உறுத்தனர். அவ்வாறு வருத்தியும் முன்கூறிய உண்மையிலேயே நிலைநின்றனன்.

தண்டவீரர்கள்பின்னும் இவ்வேடனை அரசன் ஆஞ்ஞைப்படி வருத்தலும், அவனவ்வாறே சொற்பிறழாமலிருத்தலைப் பாண்டியன் கண்டு, இவ்வேடன்சொல்லோ வொரேவண்ணமா யிருக்கின்றது. கொன்றகுறிப்புசிறிதும்

முகத்திற்றோன்றவில்லை. இம்மாதைவதைத்தது காட்டிலுள்ள எந்தமிருகமோ பறவையோ? இவன் என்னபயனைக்கருதி யிவளைக் கொலைபுரியத் துணிந்தனன். கானகத்திலுள்ள மிருகத்தை வேட்டைசெய்வோரெய்த அம்பு இலக்கிற்றவறி யிவண்மீதுருவி வதைத்ததோ? என்று பாண்டியன் பலவாறு யோசித்துத்தெருதவனாய் அமைச்சர்களை நோக்கி, நீதிசாஸ்திரங்களை யாராய்ந்து தக்கசூழ்ச்சி சொல்லுங்களென்று பணித்தலும், அவர்களவ்வாறே பார்த்து, இதுசாஸ்திரங்களாற் கண்டுதெளிவதற்கமையாது தெய்வத்தால் தெளிதல்வேண்டுமென்று மொழிந்தனர். பின்னர்பாண்டியன் அந்தணனைநோக்கி நானிதைத்தீரயோசித்துனது மனக்கவலையொழிக்கின்றேன். நீபோய் உன்மனையாள் ஈமக்கடன்களைமுடித்து வருதியென்றனுப்பிவிட்டு, வேடனைச்சிறையிலடைத்து, ஈற்றுக்கடனிறைவேற்றிவந்த அந்தணனைத் தன்னரண்மனையில் நிறுத்திவிட்டு, பாண்டியன் தன்குலதெய்வமாய் விளங்கும் சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து, திருவடியிற்பணிந்து, எம்பெருமானே! இவ்வேடனே யிப்பார்ப்பனமாதைக் கொலைபுரிந்தனனோ? அல்லது வேறுவகையால் மாய்ந்தனளோ? இது நீதிநூல்கள் பலவற்றுளுமளவிட்டறியக்கூடாததாயிரு

கின்றது. இதனை யடியேனுக்குக் கிருபாவி சேஷத்தால் தெளிவித்தல் வேண்டுமென்று பிரார்த்தித்தலும், கருணையங்கடலாகிய சிவ பெருமான் ஓ அன்பனே! இந்நகர்க்கு வெ ளிப்புறத்தோர்பக்கம் வணிகவீதியி லொரும னையின்கண் விவாகமொன்று நடக்கப்போகி றது. அங்கு நீவருவாயாயின் நின்னுள்ளத்திரு சங்கையைத் தேற்றுகின்றோ மென்று அசரீ ரிவாக்கொன் றுண்டாயிற்று. அதுசெவி கே ட்டபாண்டியன் மிக்கமகிழ்ச்சியடைந்து,சிவ பெருமான் திருவருளை வியந்துபோற்றி, யா ண்மனையடைந்து, தான் மாறுவேடம்பூண்டு, அந்தணனையு மழைத்துக்கொண்டு இரவில்க லியாண வீடடைந்து, ஒருபுறத்திலிருந்தன ன். அப்போது, சிவபெருமானருளால், அவர் கள் கேட்கும்வண்ணம், அம்மணமகன் ஆவி கவரும்பொருட்டு மறலியால் விடுக்கப்பட்ட தூதர்களில் ஒருவன் மற்றொருவனை நோக்கி, இம்மணமகனுயிர் கவர்ந்துவரும்படி கூற்றுவ ன் கட்டளையின்படிவந்த நாம் என்செய்வோ ம். உடலிற்பிணியொன்று மில்லையே, எந்தக் காரணத்தாலிவனுயிர் கவர்வதென, மற்றவன் ஆலமரத்திலேறுண்ட கணையைக்காற்றினல் வீழ்த்தி யெவ்வாறு அம்மரநீழலிலிருந்த பார் ப்பினி யுயிரைக்கவர்ந்தோமோ, அதுபோல், பலவாத்தியங்களாரவாரத்தினுல் அங்கு கட்

டியுள்ள பசுவைத்தாம்பறுத்து வெருளும்படி விடுத்து இவனாவி கவர்வோமென்றனன். அம்மொழிகேட்ட பாண்டியன் வேதியனைநோக்கி, விளைந்தபடி கேட்டனையோ? வெனப்புகலனும், இம்மணமகனவ்வாறிறந்தால் என்னில்லாளிறந்தது மொப்புக்கொள்வேனென்றனன். ஈதிவ்வாறிருப்ப, கலியாணத்தில் பலஜனங்களுங்கூடி மங்கலவாத்தியங்கள் முழங்கத்தொடங்கியபோது, அவ்வோசையினால் வெருண்டு, பசுவொன்று கட்டிய தாம்பறுத்துக்கொண்டோடி மணமகனைமுட்டி யவனுயிர்வாங்கியது. மணமகன் பிணமகனாகவும், மணக்கோலம் பிணக்கோலமாகவும், மணப்பறை பிணப்பறையாகவும் அந்தணன்கண்டு, தன்மனைவி மரணத்தினால் மிகத்துயரெய்தி பாண்டியனோடு அரண்மனைவந்து சேர்ந்தனன். பின்னர், பாண்டியன் வேதியனுக்கு மறுமண முடித்துக்கொள்ளும்படி வேண்டியபொருள் கொடுத்தனுப்பிவிட்டு, வேடனைநோக்கி, தெரியாமல் யான்செய்த கொடுந்தண்டனையைப் பொறுத்திடுவென்று வேண்டும் நிதிதந்தவனிடத்துக் கேகவனுப்பி சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து பணிந்தெழுந்து, ஏழையேன்பொருட்டு எம்பெருமானே நீர்பழியஞ்சும் நாதராயிருந்தீரே, இதற்கு நானென்ன கைம்மாறு செய்ய வல்லேனெனப் ப

வாறு அன்பின்மிகையால் துதித்து, சிறந்த பூஜைகள் நடப்பித்து, பொதுக்கடிந்து செங் கோலோச்சி வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## மாபாதகம்தீர்த்தபடலம்.

குலோத்துங்கபாண்டியன் மதுராபுரியில் பொதுக்கடிந்து செங்கோலோச்சிவருநாளில், அவந்திநகரத்திலுள்ள ஒருபிராமணனுடைய மனையாள் மிக்க அழகுவாய்ந்தனளா யிருந்த னள். அவள்வயிற்றிற்பிறந்த புத்திரன்யௌ வனதசையடைந்தவனாய் காமப்பேய்பிடித்து தன்னைவருந்திப்பெற்ற அன்னையையே புணர இச்சித்தலும், அக்கொடியாளும் நாணமுத லியதுறந்து, அப்பாதகத்துக்கிசைந்து மருவி வந்தனள். இத்தீச்செயலைத் தகப்பன் குறிப் பாற்கண்டறிந்து, அயலார்செவிக்கெட்டாவ ண்ணமுள்ளத் தடக்கிவந்தனன். ஒருநாள் த ந்தையானவன் வெளிப்படையாகக்கண்டு, சி ல நீதிமொழிபுகலலும், புதல்வனாயுதித்த அப் பாதகன் மிகவுஞ் சீற்றங்கொண்டு, கொல்வ னென்று எதிர்த்தெழுந்த மாத்திரத்தில்,அன் னையானவளிடையே வந்துநின்று, தாயினிட த்திலின்பமனுபவித்தனை, தந்தையையுங்கொ ன்றால் ஏதுகதியடைவாயென்றுரைத்து வில

க்கலும், காமுகர்க்கு தாய்தந்தை யிவர்களா லென்னபயன்? அருள் அறமென்னிருக்கின்ற தெனக் கடிந்துரைத்து, மண்வெட்டி கையிற்கொண்டு, தன்னைப்பெற்ற தந்தையென்று சிறிதுமெண்ணாமல், வன்னெஞ்சு கொண்டு துண்டமாக்கினன். இவ்வாறு தந்தையைக் கொலைபுரிந்து இரவிலேயே ஈமக்கடனைமுடித்து, வேண்டிய பொருளெடுத்துக்கொண்டு, தாயுடன் மலைவழியாகப்போகாநிற்கையில், மறவர்கள்வந்துசூழ்ந்துகொண்டு கையிலுள்ள பொருளையும் மாதையுங்கவர்ந்தேகினர். தூரதேசத்திற்போய்ச் செவ்வையாக வாழ்ந்திருக்கலாமென்று தானொன்றெண்ணத் தெய்வமொன்றெண்ணியதைப்பார்த்து மனம்வருந்தி தனியனாய்ச்செல்லுகையில், தன்மகனுக்குத் துணையாய்வருபவன்போல் தகப்பனாவன் மஹாபாதகவுருவமாய்வந்து பற்றினன். தன்னைவிடாது நிழல்போலத்தொடர்ந்து பயமுறுத்திவருத்துகின்ற மஹாபாதகவுருவால் நடுநடுங்கி, புண்ணியதீர்த்தம்,சிவஸ்தலம்,பெரியோரிடம் போகக் காலெழாமலும், சிவபெருமான் புகழைக்கேட்க வேலாமலும் புரிவதுறுல் இனிச்செய்வதென்னென்று ஒன்றுந்தோன்றாமல் உலகெலாந்திரிந்தலைந்து, தன்பாதகந்தீருநாள் குறுகினமையால், மதுரையம்பதியையடைந்தனன். அப்போது, சொக்கலி

ங்கப்பெருமானும், அங்கயற்கண் ணம்மை யாரும் வேடனும் வேடச்சியுமாய் திருவேட ங்கொண்டு, கோபுரவாயிலினிடத்தில் நாய்க் கூட்டங்கள் புடைசூழச் சூதுபோராட்டஞ் செய்துகொண்டிருந்தனர். அவ்வாறிருக்கை யில், மிக்கதுயருடையானாய் வருகின்ற மாபா தகன் வரவுநோக்கி உமாதேவியைப்பார்த்து, பெண்ணே, இப்பாவியைக்கண்டனையோ? கா மநோயா லலைப்புண்டவர்மனஞ் செல்லத்தக் கவிடமறிந்து செல்லாது. குணம், குலம், ஒழுக்கம், கொலை, பழிபாவமும்பாராது. கள் ளுண்டல், காமம் இவை யிரண்டும் மனத்தை யவசமாக்கும், கள் உண்டபோதுமாத்திர மு ணர்வையழிக்கும், காமமோ, எண்ணினும், கேட்கினும் உணர்வையழிக்கும். ஆதலால், க ள்ளினுங் காமமேகொடிது. காமமேகொலைக ட்கும், களவுக்கும், கள்ளுண்டற்குங் காரண மாம். நரகபூமியைக் காணியாக்ஷியாகக் கொ டுப்பதுங்காமமே. அதனாலே மிகவலைப்புண்ட பாதகனிவனென்றுகூறி, அவன்முகநோக்கி, அந்தணனாகிய நீயித்தகைய பெருந்துயருழந் துவருந்துவதென்னையென்று வினாவினர். சிவ பெருமான்திருவருணோக்கஞ் சிறிதுபட்டமை யால், சிறிதுபாவந்தணிந்து, உணர்வுவந்து, நிகழ்ந்தனவெல்லாமெடுத்தோதலும், சிவபெ ருமான் கருணைகூர்ந்து, இப்பழி இவ்விடத்த

ன்றியெங்குந்தீராது. நின்னுமஞ்சொன்னோர் வருக்கமும் நரகில்வீழுந்தக்கதாக நீசெய்த பாதகம்யாம் கிருபாநோக்கத்தால் தீரும்படி யோருபாயஞ்சொல்லுகிறோம். பிச்சையெடுத்தொருபொழுதுண்டு சிவனடியார் திருப்பணிசெய்தல்வேண்டும். சூரியோதயத்துக்கு முன்னெழுந்து, அறுகம்புல் கொய்து பசுக்களுக்கருத்தி, முப்போதுங் கோயிற்புறத்திலுள்ள தொட்டித்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, சொக்கலிங்கப்பெருமானை நூற்றெட்டுதரம் பிரதக்ஷிணஞ்செய்தல்வேண்டும். இத்தவமார்க்கத்தில் நின்றால் இப்பழிதீருமென்று வேடுவத்திருவேடம்பூண்டுவந்த சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளலும், வேடச்சியாயருகினின்ற தேவியார் சிவபிரானை வினவுகின்றனள். சுவாமீ! இக்கொடியோன்செய்தபாதகத்துக்கு இருபத்தெட்டுகோடி நரகத்தில் அளவில்காலம் வீழ்ந்தானேனும் உய்யுமார்க்கமடையான். இத்தகையோனுக்கு நீருய்வழிகாட்டியதென்னென, பெண்ணே! மஹாபாதகஞ்செய்தவனாய், எங்குந்தீராமல் வேறோராதரவுமின்றி பாழாய்க் கெடுபவனைக் காப்பதன்றோ கிருபைக்கழகாகும் என்று மறுமொழிகூறினர். அதுகேட்டதேவியார். எம்பெருமானே! நீரெவ்வாறுசெய்யினும் எல்லாம் உம்முடைய திருவருள் விளையாட்டன்றோ

என்று அகமகிழ்ச்சியோடு விளம்பி யிருவரு மறைந்து கோயிற்புகுந்தனர். அதுகண்ட பாதகனாகியவேதியன் மிக்கவற்புதமடைந்து, சிவபெருமான் பணித்தவாறேவிரதம்பூண்டொழுகி மூன்றுமாதத்தில் தன்பாதகங்கழிந்து பழைய பார்ப்பனவடிவம் பெற்றனன். பின்னர்சிவபெருமான் ஸ்ரீபாதங்களில் பத்தியால் பற்பல வடசொல் மாலைகள்சாத்தி, சிவபெருமான் திருவடிநீழலடைந்தனன். அன்னையைப்புணர்ந்தப்பனைக்கொன்ற பாதகத்தையொழித்து வீடளித்ததென்றால், நீரிழிநோய், குட்டம், பெருவயிறு, ஈளை, வெப்பு முதலிய நோய்களைத் தீர்க்குந்தீர்த்தமென்றுரைப்பது மேன்மையாமோ? இச்செய்தியறிந்து பாண்டியன் அமைச்சர், மதுரைநகரார், ஏனைய ஊரிலுள்ளார், தேவலோகத்தார் யாவரும் வியப்புற்று, சொக்கலிங்கப்பெருமான் திருவருளைப்போற்றி யானந்தித்தனர்.

திருச்சிற்றம்பலம்.

---

## அங்கம்வெட்டினபடலம்.

குலோத்துங்கபாண்டியன் மதுராபுரியில் அரசுபுரிந்துவருநாளில், மறுதேயத்திலிருந்து ஒருவயோதிகன் மதுராபுரியில்வந்து குடியேறி வாள்வித்தையைபயிற்றிக்கொண்டு வாழ்ந்திருந்

தனன். அவன் சொக்கலிங்கப்பெருமானிடத்
தில் மிக்க அன்புள்ளானாய் அத்தொழில்பயி
ற்றிவருங்காலத்தில், அவனிடத்தில் வாள்வித்
தைகற்றுவந்த பலருள் சித்தனென்பானொரு
வன், அதில்மிக்க தேர்ச்சியடைந்து, செருக்
கடைந்தவனாய், தன்னாசிரியனுக்கு மாறாகத்
தானுமோர் வித்தைக்கூடமமைத்து, பலருந்
தன்னிடத்தில் வந்துகற்க, தன்னாசிரியனினு
மிக்க ஊதியமுடையவனாய்வாழ்ந்து வந்தன
ன். அம்மட்டிலும் திருப்தியடையாமல், இரு
வர் விருத்தியையும் தானொருவனேயடையக்
கருதி, ஆசிரியன்பால் பயின்றுவந்த யாவருந்
தன்னிடத்தில் வரும்படி நாளும் தீங்கேபுரிந்
துவந்தனன். அஃதல்லாமலும், மிக்கபொ
றுமையுடையனாகிய தன்னாசிரியன் இல்லாக்
காலத்தில், அவன்வீட்டிற்சென்று குருபத்தி
னியைத் தன்னுடன்சேரும்படி பல்காலும்
பலவந்தஞ்செய்தும், அக்கற்பின்மிக்காள் இ
வன் துரபிப்பிராயத்தைக்கண்டு, லக்ஷியஞ்
செய்யாமல் வாளாவிருந்தமையால், ஒருநாள்
சென்று வலிந்து அவளதுகைப்பற்றி யிழுத்த
லும், மனஞ்சகியாளாயஞ்சி யவனைவெளியே
தள்ளிவிட்டுக் கதவைத்தாழிட்டுத் தன்கற்
பைப்பாதுகாத்துக் கொண்டனள். அக்கொடி
யோனும், காமத்தீதன்னை வாட்டத்தன்னிரு
ப்பிடஞ்சென்றனன்.

அக்கற்புடையாள் இச்செய்கையைத் தன்நாயகனுக்கு முணர்த்தாமல், சர்வபரிபூரணனாகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை நினைந்து மனநொந்திருந்தனள். சிவபெருமானும், அக்கொடியோனைத் தண்டிக்கத் திருவுளங்கொண்டு, அவ்வாசிரியனைப்போல் வேடம்பூண்டு சித்தனைக்குறுகி, காளைப்பருவமுடைய் நீயும், வயோதிகனாகிய நானும் வாள்யுத்தம்புரிந்து நம்வலியை யளந்துகாண்போம். நாளை இம்மதுராபுரிக்குப்புறத்திலோர்பக்கம் நீவருதல்வேண்டுமென்று ஆசிரியவேடம் பூண்டுவந்த சிவபெருமான் கூறலும், அப்பாதகன தற்கிசைந்து மறுநாள் யுத்தசன்னத்தனாய், சிவபெருமான் கூறிய செருக்களத்தில் வந்திருந்தனன். சொக்கலிங்கப்பெருமானும் தாளில் வீரகண்டையணிந்து, அரையில்கச்சசைத்து, வெண்ணீறுசாத்தி, வாளும்பலகையுந்தாங்கி யவனுக்கெதிரே வந்துநின்றனன். சிங்கமும் நரியும் எதிரிட்டு அமர்செய்வதுபோல் இருவரும் வாளமர்புரிகையில், யுத்தங்காண வந்திருக்கும் பலருங்கேட்கும் வண்ணம், குருபத்தினியை நினைத்த நெஞ்சையும், அடாதனவுரைத்த நாவையும், தொட்டிழுத்த கையையும், பார்த்தகண்ணையும் நீகாத்துக்கொள்ளென்று சொல்லிச்சொல்லி யவற்றுக்கெல்லா முறையே கண்டஞ்செய்து, கடைசியிலவன் சிரத்தை

யுத்தணிந்து திருவுருக்கரந்தனர். அப்போது, அங்கு நின்றிருந்தவர்கள் ஆசிரியனைக்காணு தவர்களாயவனில்லத்தையடைந்து அவன் மனைவியை நின்னுயகனெங்கென்று வினவலும், அவள் கோயிலுக்குச்சென்றானென்று கூறிக் கொண்டிருக்கையில், ஆலயத்தினின்றும் வந்தகுரவனைக்கண்டு, நீயுத்தக்களத்தில் சித்தனுடுபோர்புரிந்து அங்கம்வெட்டினையே, பின்னருன்னை யங்குகாணுமல் யாமிங்குவந்தனமென்றனர். அதுகேட்ட ஆசிரியன், வியப்படைந்து, நான் இத்தனங்கம் வெட்டினையில்லை, வேறுயாவர்செய்தனரோ. இஃது சொக்கலிங்கப்பெருமான் திருவுளச்செயலோ வென்று விம்மிதமடைந்திருந்தனன். அக்காலையில், அவன்மனைவி இத்தன்தன்னைப் பலகாலும் கிட்டிக்கேட்டதும், நேற்று வலித்துகைப்பற்றியிழுக்கத்தான் வெளியேதள்ளிக்கதவைத்தாழிட்டதும் சாற்றினள். அதுகேட்ட வீரர்கள் யுத்தக்களத்தில் அவ்வாறேசொல்லிதண்டம்புரிந்தமையால் இஃதுசிவபெருமான் திருவிளையாட்டேயென்று துணிந்தனர். ஆசிரியன் தன் மனைவியோடு சொக்கலிங்கப்பெருமான் ஆலயமடைந்து வணங்கிப் பலவாறுதுதித்தனன். பாண்டியனும் நகருளாரும் ஆலயத்தெய்தி திருவடியிற்றுழ்ந்து அன்பன்பொருட்டாக வந்த சிவபெருமானுடைய திருவருளை வியந்து

துதித்தனர். பின்னர், குலோத்துங்கபாண்டியன் வாள்வித்தைபயிற்றுங் குரவனையும், அவன்மனைவி மாணிக்கமாலையையும் யானைமேலேற்றி நகரைவலஞ்செய்வித்து, தன்புதல்வனான அனந்தகுண பாண்டியனுக்கு முடிசூட்டி சிவபெருமான் திருவடிநீழலடைந்து வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## நாகமெய்தபடலம்.

---

அனந்தகுணபாண்டியன் மதுராபுரியில் செங்கோலோச்சி சிவபெருமான் திருவடிகளில்மிக்க அன்புடையானாய்தன்னுடுமுழுமையும் பூதிசாதனவழியில் நிறுத்திச் சிவசமயமோங்கித்தழைக்கும்படி விருத்திசெய்து வாழுநாளில், அதனைக்கண்டு மனம்பொறாதவர்களாய், கொடியசமணர்கள் எண்ணாயிரவரும் மானமேற்கொண்டு பாண்டியனைக் கொலைபுரியத்துணிவுற்று ஓர் யாகஞ்செய்தனர். அந்தயாககுண்டத்திலிருந்து, பர்வதாகாரமான கோரரூபத்தையுடைய ஒரு அசுரன்தோன்றி, அத்தீயசமணர்களைநோக்கி, எனக்குப்பசியதிகமாயிருத்தலால், நீவிர் எனக்கு விதிக்கும்பணியை விரைவில் கட்டளையிடவேண்

டுமென்று கேட்டலும், நீபோய் பாண்டிய னோடு மதுராபுரியை விழுங்கிவருகவென்று விடுத்தனர். நாகவடிவங்கொண்டுவந்த அந்த அசுரன், மண்விண்ணளாவியவுடலும், விடமூறிச் சொரிகின்றபல்லும், வடவாக்கினிபோலெரியுங்கண்ணும், மலைக்குகைபோன்றவாயுமுடையானாய், உலகத்தவரும், ஆதிசேடனும், சூரியசந்திரர்களும், இராகுகேதுக்களும், திக்கஜங்களும், எமனும், எனையாவருங்கண்டு நடுநடுங்க நகர்நோக்கி வரும்போது கண்ட நகரத்தார் பயந்து பாண்டியனிடம் விரைந்தோடிப்பணிந்தெழுந்து, அரசே! நமது நகருக்கு மேற்புறத்தில் ஒரு பெரும்பாம்பு உலகங்களையெடுத்து ஒருவாயிட்டருந்துமாறு வாய்திறந்துகொண்டு வருகின்றது என்று விண்ணப்பஞ்செய்தனர். அதுகேட்டபாண்டியன் மனமஞ்சானாய் இது சமணர்களால் விடுக்கப்பட்டு வந்ததென்றறிந்து, நமக்குத்துணை சொக்கலிங்கப்பெருமானிருக்கின்றனனென்று துணிந்து ஆலயமடைந்து, திருவடிகளில்வணங்கி எம்பெருமானே! அடியேனை யழிக்கக்கருதிச் சமணர்கள் ஏவிய இப்பெரும்பாம்பைமாய்த்து என்னைக்காத்தருளல் வேண்டுமென்று குறையிரந்து விடைபெற்றுத்திரும்பி, கையில்வில்லேந்தி மதுரையம்பதியின் மேற்புறத்தில்வந்து அந்தநாகத்தைக் கண்ணுற்றனன். உடனே

அக்கொடியோன் பிலம்போன்ற வாய்திறந்து நகரத்தை யொருங்கே விழுங்கும்படி சீறியெழுந்தனன்.

அதுகண்டபாண்டியன், கையில் வில்லெடுத்து நாணேறிட்டு அக்கினியாஸ்திரங்களைத் தொடுத்துவிடுக்க, அவற்றையெல்லாம், அத்தானவன் பொடிபடக்கறித் துமிழ்ந்தனன். பாண்டியன் மனஞ்சலியாதவனாய் சிவபெருமான் திருவடிகளை நினைத்து, அர்த்தசந்திரபாண மொன்றுவிடுத்து உடலைத்துணித்தமாத்திரத்தில், அவ்வசுரன் இடிபோல்கர்ச்சித்து, இரத்தவெள்ளம்பாய நிலத்திற்புரண்டுயிர்துறப்பவன் பூர்வம் பாற்கடலிற் பிறந்த ஆலகாலவிஷம்போன்ற கொடிய விடத்தைக் கக்கினான்.

அவ்விடம் மதுராநகரெங்கும் பெருவெள்ளம்போற் பரவிவருதலும் ஊரிலுள்ளாரெல்லாம் பொறிபுலன்கள் தடுமாறி வாய்குழறி, நாவுலர்ந்து, கபமேலிட்டு, உணர்வழிந்து, மயங்கி மூச்சொடுங்கி, உயிர் ஊசலாட உறக்கமுற்றவர்போல் வாடிக்கிடந்தனர். அதுகண்டபாண்டியன் மிகவும் பயந்து, ஸ்ரீசொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து, பெருமானே! பூர்வம் இந்நகர்க்குப் பகைவர்களால் வந்த பலவிடையூறுகளையு மகற்றிக் காத்தனையே,

அதுபோலின்று மிக்கொடியவிஷத்தால் வருந்தும் அபாத்தையொழித்து ரக்ஷித்தருளவேண்டுமென்று வேண்டினன். கருணையங்கடலாகிய சிவபெருமான் தமது ஜடாமுடியிலுள்ள பிறைக்கொழுந்தின் அமுதத்தில் சிலதுளிசொரிந்தனர். அது பாலிற்பிறைபோல் கலந்து மதுராபுரியைப் புனிதஞ்செய்தது. ஆதவன்முன் இருட்படாம்போலும், சிவபெருமான் திருவருண்முன் ஆணவமலவலிபோலும், அவ்வமுதத்தால் விடமொழிந்து யவருந்துயர்நீங்கி யானந்தமடைந்திருந்தனர். பாண்டியன் சிவபெருமான் திருவருளைப்போற்றி, திருவடிகளில் நீங்காத மெய்யன்புபூண்டு புவியாண்டு வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## மாயப்பசுவைவதைத்தபடலம்.

மதுராபுரியில் அனந்தகுணபாண்டியன் நாகத்தைத் தணித்தபிறகு, பின்னேவந்த சமணர்கள், நாணமடைந்தோடி ஒன்றுசேர்ந்து நாம்முன்புவிடுத்த யானைபோல் இப்பாம்பையும் தொலைத்தனனாகையால், இனிமேல் செய்யுந்தொழிற்சியாதென்று யோசித்தவர்களாய்ப் பசுவைக்கொல்ல வஞ்சுவார்களாதலால், அதனையேசெய்வோமென்றுதுணிந்து பாவகாரிகளா

கிய அச்சமணக்கொடியோர் பண்டுபோல் ஒ
ருயாகம்வளர்த்தனர். அந்தயாக குண்டத்தி
னின்றும் மாயப்பசுவுருவத்தோடு ஒரு அசுர
ன்றோற்றினன். அவனைநோக்கி நீ மதுரைய
ம்பதியோடு பாண்டியனையழித்து வருவாயெ
ன்று விடுத்தனர். எமனைப்போல் பர்வதாகா
ரமாய் கண்டோர்நடுங்கும்படி மதுரையம்பதி
யைநோக்கி அம்மாயப்பசுவருவதை யறிந்து,
பாண்டியனும் நகருளாரும், சொக்கலிங்கப்
பெருமான் ஆலயமடைந்துபணிந்து, தங்கள்
குறையை முறையிடலும், கருணையங்கடலா
கிய சிவபெருமான் கிருபைகூர்ந்து, நந்திதே
வரையழைத்து நீபோய் அம்மாயப்பசுவை
வென்றுவருகவென்றுகட்டளையிட்டருளினர்.
விடைக்கடவுள் வெள்ளிமலைபோலுந் திருவுரு
வத்தோடு அம்மாயப்பசுவைச்சமீபித்து, கிழ
க்கிலுள்ளது மேற்காகவும், தெற்கிலுள்ளது
வடக்காகவும், வடக்கிலுள்ளது தெற்காகவும்,
கொம்பிற்கோத்துத்தள்ளி திசைப்புறங்களில்
வீசி, மலைக்குவட்டிலும், மரங்கள்மேலும், க
டலிலும் எறிந்துவிளையாடி, சமணப்பேயர்க
ளெண்ணியவாறே போர்புரிந்துகொல்லாமல்,
தன் அழகினைக்காட்டலும் கண்டுகாமுற்று,
மன்மதன்கணையேறுண்டு, ஆவியோடும் வீரி
யம்விடுத்துவீழ்ந்து மலையுருவாயது. அதுக
ண்டு பாண்டியனும் நகருளாரும் பேரானந்த

மெய்தினர். உலகத்தார்க்குச்சாக்ஷியாக நந்தியெம்பெருமான் றன்னுருவை யிடபக்குன்றாக அங்கிருத்தி, குங்குமரூபத்தோடுஞ்சென்று சொக்கலிங்கப் பெருமானை வணங்கலும், அதன்சாக்ஷி, பண்டையபடிவந்தோடிங்கிருக்கவென்று நிறுத்தினர். அப்போதுபாண்டியனும், மதுரையம்பதியாரும் சந்நிதியடைந்து நந்தியெம்பெருமான் றிருவடிகளை வணங்கிப் போயினர். சிவபெருமான் விடைத்தேவருடைய பராக்கிரமத்தை நோக்கி யதிசயித்து தேவியோடுங் களிகூர்ந்திருந்தனர். அந்த இடபமலைமேல் இலங்கைக்குப்போகின்ற ஸ்ரீராமன் வானரசேனைகள் புடைசூழ, இலக்குமணன், அநுமான், சுக்கிரீவன்முதலானவரோடு அங்குவந்திருந்தனன். அப்போதறிந்து, அகத்தியர்க்கெய்தி, இராமனுக்காசிகூறி, ஆலாஸ்ய மான்மியத்தையருளிச் செய்யக்கேட்டு, அன்புகூர்ந்து, குறுமுனிவரோடுஞ்சென்று பொற்றாமரையின் மூழ்கி, சொக்கலிங்கப்பெருமானை வணங்கி, சிவாகமவிதிப்படி யருச்சித்தேத்தி, களித்த அன்போடு சிரமேல்கரங்கள் கூப்பி, பலவாறுதுதித்து, எம்பெருமானே! அடியேனெண்ணியகருமம் முடியுமாறு அருள்செய்யவேண்டுமென்று வேண்டலும், தயாபயோததியாகிய சிவபெருமான், அன்பனே! இதற்குத் தென்கீழ்த்திசையிற் சென்று, கடலில்

சேதுகட்டி, இராவணன்பத்து சிரங்களேயுஞ் சாய்த்து, சீதையை சிறைநீக்கி, மீண்டுமின் னயோத்தியடைந்து, பலநாளரசுபுரிந்து பின் னர்வைகுண்டமடைக என்று அசரீரியாக மொழிந்தருளலும், அதுகேட்டு இராமன்மகி ழ்கூர்ந்து, சிவபெருமானிடம் விடைபெற்றே கி கட்டளேப்படி இலங்கையடைந்து, இராவ ணனுடைய ஆவிமாய்த்து, அங்ககரைவிபீட ணற்களித்து, இராமேஸ்வரங்கண்டு, சிவனே யருச்சித்துக்கருணேபெற்று, பழியொழிந்து, சொக்கலிங்கப்பெருமானே மீளவுமதுரையில் வந்துபோற்றி, கற்பின்மிக்க சீதாபிராட்டியோ டும் அயோத்தியடைந்து வாழ்ந்திருந்தனன். அநந்தகுணபாண்டியன், குலபூஷணனேப்பெ ற்று, அவனிடம் அரசுரிமையைத்தந்து, சிவ லோகமடைந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## மெய்க்காட்டிட்டபடலம்.

---

குலபூஷணபாண்டியனிடத்தில், மதுராபு ரியில், அனந்தகுணபாண்டியன் செங்கோலர சுரிமைபெற்று மண்ணுண்டுவருநாளில், அவ னிடத்தில் சேனுபதித்தலேமைபூண்டுள்ள சா மந்தனென்பவன் சிவபெருமானிடத்தில்மிக்க

அஃதுணர்ந்த சாமந்தன், பாண்டியன்சபையடைந்து காரியம் செய்வோரை யழைத்து பிறநாட்டிலுள்ள வீரர்களை பொருள்கொடுத்தழைப்பான் போல் பலவேறு தேயத்தவர்களுக்கும் ஓலைநீட்டிவிடுத்தும், ஆறுமாதம்வரையில் சேனைவீரர்கள் வாராதிருப்பதைகண்டு, பாண்டியன் சாமந்தனை நோக்கி, நாளைசூரியோதயத்திற்கு முன்னர் நீ சேனையாவையும் வரவழைத்திடல் வேண்டுமென்று கட்டளையிடலும், அதற்கிசைந்து சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து வணங்கி, சுவாமீ! பாண்டியனீந்த பொருளெலாங் கொண்டு என்னை யடிமைகொண்டனையே, இனி யடியேன் சேனையைச்சம்பாதிக்கும்வகையாது? என்று விண்ணப்பித்து நிற்றலும், அடியார்குறைதீர்த்தாள்வதே விரதமாகப்பூண்ட எம்பெருமான், அசரீரியாய் அன்பனே! நாளை திரண்டசேனாசமூகத்தோடும் யாம்வருவோம், நீதுயரொழிந்து இராஜசபைபோய்ச் சேருகவென்று திருவாய்மலர்ந்தருளினர்.

அம்மொழியைக்கேட்ட சாமந்தன் ஆனந்தவசத்தனாய், சிவபெருமான் திருவருளைப்போற்றி, மறுநாட்காலையில் சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து, திருவடிகளில் வணங்கித்துதித்து, பாண்டியனரண்மனையை நண்ணும்போது, சிவபெருமான் சங்குகன்

னன் முதலான பிரமகணத் தலைவர்களும், நந்திகணத்தலைவர் முதலாயினோரும், சேனாவீரர்களாய் புடைசூழ்ந்துவர, தருமவிடையையே பரியாகக்கொண்டு சேனைத்தலைவராய், பலவாத்தியங்கள் கடல்போலொலிக்க வந்து சேர்ந்தனர். சேனையின் வரவுநோக்கி சாமந்தன் களிகூர்ந்து, பாண்டியன் திருமுன்னெய்திக்கூறலும், பாண்டியன் சந்தோஷித்து, அரண்மனையின்கடைவாயிலிலிட்ட சிங்காதனத்திலிருந்து, சேனையின் மிகுதியைப் பார்த்து, இவர்களெல்லா மெத்தேயத்திலிருந்து வந்தவர்களென்று வினவலும், சாமந்தன் கையிற்பொற்பிரம்புநீட்டி, இன்னவின்னதேயத்தார்களென்று முறையே சுட்டிக்காட்டி, அரசே! இவ்வளவு தூரதேயத்துள்ளாரை எவ்வாறு நீ கொண்டுவந்தனையென்று வினவல் வேண்டுவதில்லை. பின்னரும்பொருளை வரையாது போக்கினமையால், வந்தனர்களென்றுரைத்தனன். அப்பெருஞ்சேனையுள் தூரத்தில் வலியபரிமாவேறிப் பின்னிற்கின்ற சேனைத்தலைவராகிய சிவபெருமானை நோக்கி, இவர்யாவரென்ன, சாமந்தன் பாண்டியரேறே இத்தகைய பெருஞ்சேனைவெள்ளத்தில் யாவரென்றறிவதென்று விடைகூறலும், அவரையிங்கழைக்கவென்று கட்டளையிட்டனன்.

அதுகேட்டு, அரசன்வழிச்செல்வார்போல் சிவபெருமான், பாண்டியன் முன்னரணைதலும், களிகூர்ந்து, பொன்னுடை, பூஷணங்கள் முதலியன பரிசளிக்க, அவற்றைத் தனதன்பர்பொருட்டால் வாங்கித்தரித்து, தம்மவர்கட்குமளித்து, தம்பரியைத்தூண்டி, ஐங்கதிநடத்திக்காட்டி சேனைசமூகத்தெய்தியிருந்தனர். அப்போது, சேதிராயனென்பான் வேட்டைக்குச்சென்று புலிக்கிரையாயினனென்று ஒரு ஒற்றன் விரைந்துவந்து பாண்டியனிடஞ்சொற்றனன். அதுகேட்டபாண்டியன் மிக்கவுவகையடைந்து, சேனைத்தலைவனாகிய சாமந்தனுக்கு அளவற்றவரிசைகளளித்து, இச்சேனைகளைத்தத்தம்பதிக்குச் செலுத்துவான்போன்று நிற்ப, சிவபெருமான் சேனைவீரரோடு மறைந்தனர். அதுகண்டபாண்டியன் வியப்புற்று, உள்ளத்தில் சந்தேகங்கொண்டு, இஃது நமதுசொக்கலிங்கப்பெருமான் திருவிளையாடலேயென்றுதுணிந்து, கண்ணீர்த்ததும்ப, உடலம் புளகிக்கப் பரவசனாய்த்துதித்துநின்று, தனக்குயிர்த்துணையாய்வந்த சாமந்தனைநோக்கி, கூடலெம்பெருமான் உனக்கெளிவந்தமையால், எனக்கு அவர் நீயேயென்று, அவனுக்கு வேண்டுவனநல்கி, மண்ணாண்டுவாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

ருமான் சித்தவேடராய் அவன்கனவிலடைந்து, அன்பனே! உண்பாலோர் குறையுளது. அஃதென்னையெனின், நின்னாட்டில், வேள்விக்கருமங்கள் குறைந்துள்ளன. வேதமே நம்பீடிகை, பாதுகை, வாகனம், நூபுரம், கோவணம், விழி, மொழியாகவும், நமதாஞ்ஞா சத்திவடிவாம், விதிவிலக்குள்ளதாய், பல்லுயிர்க்குஞானமும், போகமுநல்கி, மலப்பிணிபோக்கி, முடிவில் நம்பேரானந்தவீட்டையளிப்பது ஆதலின், நமது செங்கோலதுவேயாகும். அம்மறைக்கு அதிகாரிகளாயுள்ளார்யாவரெனின், அந்நூல்வழியால், உலகின்கண் கலிநோய் தீருமாறு வேள்வித்தீவளர்த்து, எம்மிடத்துமெய்யன்புசெலுத்துமந்தணராகும். இவ்வேதியர்கள் புரியும் வேள்வி மழைக்கேதுவாம். இவர்களை, நீ யிகழ்ந்தமையால், உன்னாட்டின்மாரி மறுத்தது. ஆகையால், இவர்களை, எம்மைப்போலக் கண்டொழுகி, நாளும் அறங்களை விருத்திசெய்து, கருமச்செங்கோலோச்சி வாழ்ந்திருவென்றுதிருவாய்மலர்ந்தருளி, பாண்டியனுக்கோர் உலவாக்கிழியளித்து, இக்கிழியில், எவ்வளவுபொன்னெடுப்பினும், நாம்தந்த அளவிற்குறைவுபடாது. எடுக்குந்தோறும் பெருகிக்கொண்டேயிருக்கும். இப்பொற்கிழிகொண்டு, நின்னாட்டிற்குள்ள வறுமையொழித்து வாழ்கவென்று மொழிந்து பாண்டியனுக்குத்

திருநீறுசாத்தி, சித்தமேடையாய்வந்த சிவபெருமான் திருவுருமறைந்தனர். பாண்டியன் தான் கண்டனவு கனவாகக்கண்டுமகிழ்ந்து, சொக்கலிங்கப்பெருமான்ஸ்ரீபாதங்களைப்போல் அப்பொற்கிழியைச் சிரமேற்றாங்கி, ஆனந்தபரவசனாய், ஒருமுகூர்த்தங்கூத்தாடி, அமைச்சர் படைத்தலைவர்முதலியோர்க்குங்காட்டி, அக்கிழியைச் சிங்காதனத்தேற்றி, வாத்தியங்கள் கடல்போலொலிக்க, சந்தனம்மாலை முதலியவைகளிந்து தூபதீபங்காட்டிப்பூசித்து, வணங்கி, முடியவிழ்த்து, கிழியெடுத்து, முத்தியானர்க்கும், யாகங்கட்கும், பாவர்க்கும், எடுத்தெடுத்து வழங்குந்தோறும், கொடுக்குந்தோறுங்குறையாத மோக்ஷானந்தம்போல்பெருக்குற்றது. அப்பொன்னை, சொக்கலிங்கப்பெருமான் எழுந்தருளியிருக்கும்விமானத்துள்ளும் புறம்பும் தகடுவேய்ந்து அங்கயற்கண்ணியார் ஆலயம், அறுகாற்பீடம், கோபுரவாயில் முதலியனவு மழகுபெறவேய்ந்து, பலதருமங்களையும் வளர்த்துவருகாலில், மேகங்கள் மழைபொழிந்து பலவளங்களும் நிரம்பி, பாண்டிநன்னாடு அளகாபுரிபோல்செல்வந்தழைத்தோங்கியிருந்தன.

திருச்சிற்றம்பலம்.

---

## வளையல்விற்றபடலம்.

குலபூஷணபாண்டியன், மதுராபுரியில் அரசுசெலுத்திவருநாளில், பூர்வம் தாருகாவனத்து ரிஷிபத்தினிகளுடைய கற்புச்செருக்கையடக்கும்பொருட்டு, சிவபெருமான் பிக்ஷாடனமூர்த்தியாய் அவர்களிடம் செல்லுதலும், பிக்ஷையிடவந்த அவ்விருடிபத்தினிகள் மன்மதன்தவவேடமெடுத்து வந்ததுபோலு மவர்வடிவின்பொலிவைக்கண்டுகாமுற்று, அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களுமொழிந்து, கலைகளும் வளைகளுஞ் சோர, பலவாறுவேண்டி அவரைக்கிட்டித்தழுவவருதலும், அவரிடந்தாராமல் அகன்றேகக்கண்டு, காமபீடிதர்களாய், சிவபெருமானைநோக்கி, நீர் எம்மைத்தழுவச்சம்மதியீரேல், எங்கள் கொழுநர்கள் வருமுன்னர் சோர்ந்தகலைகளையும், வளைகளையு மெடுத்தணியுமென்ன, அவ்வாறே நாளையிடுவோமென்று போயினர். பின்னர், முனிவர்கள்வந்து தம்பன்னியர் நிலையைக்கண்டு கோபங்கொண்டு, இவ்வாறு தமது பத்தினிகள் கற்பைக்கவர்ந்துபோன கள்வன் கூடற்பதியிலுள்ள சிவபெருமானேயென்று திரிகாலஞானத்தால் கண்டுதெளிந்து, கற்புவேறுபட்ட தம்மனைவியரைநோக்கி, நீங்கள் மதுரையம்பதியில் வணிகர்கன்னியர்களாய்ப் பிறக்கக்கடவீரென்று சாபமிட்டனர். அதுகேட்டவர்கள் துணுக்குற்று

மனந்தளர்ந்து, இச்சாபமெங்கட்கெப்போதக லுமென்று பணிந்துகேட்டலும், அம்முனிவர் மனமிரங்கி, கூடற்பெருமானாகிய சோமசுந்தரக்கடவுள்வந்துநும்மைக் கைதீண்டும்போது இஃதொழியுமென்று மொழிந்தனர். அவ்வாறே அவர்கள் மதுரையில் வணிகர் மகளிராய்ப்பிறந்து பருவமடைந்திருக்குங் காலத்தில், கருணையங்கடலாகிய சொக்கலிங்கப்பெருமான், வளையல்வணிகராய்த்திருவேடம்பூண்டு, அந்நகர்வீதியில் விலைபகர்ந்துவரக்கண்ட வணிகர்மகளிர்வீதியிற்போய் வணிகர்பெருமானைச் சூழ்ந்துகொண்டு, எங்கள் செங்கைக்கேற்ற வளையிடுமென்று, கைகளை நீட்டினர். சிவபெருமான் அங்கயற்கண்ணம்மையார் செந்தளிர்க்கரம்பற்றியகையால், அவ்வணிகமகளிர் கரங்களைப்பற்றி வளையலோடு மையலுமேற்றினார். இட்டவளையையுடைத்துவந்து மீட்டு மெங்கட்கிடுமென்று கை நீட்டுவாரும், மன்மதபாணத்தால் அலைப்புண்டவர்களாய் முன்னிட்டவளைகள் கழல, பின்னும்வந்து முன்னிட்டவை பெரியவாதலால், வேறு சிறியனவா யிடுமென்பாரும், அவையுங்கழன்றுபோக, நீரிட்டவளையொடு கலைகளும் வீழ்கின்றனவே இது என்னை? இவ்வளைபோல்வன யாமுன்னொருபோதுங் கண்டிலேம். இவ்வளையெங்குள்ளன? எம்முடலம் பூரி

க்கச்செய்கின்றனவே. நாளையும் வளையிடவா ருமென்பாரும், இவ்வளைக்கு விலைபெற்றுக் கொண்டு போமென்பாருமாய்ப் பலவாறு அவ்வணிகர்மகளிர் கூறலும், நாளைவிலைபெறுவோமென் றவ்விடம் நீங்கி மின்போலு மறைந்து இந்திரவிமானத்தில் இலிங்கவுருவாயெழுந்தருளியிருந்தனர். பின்னர், அவ்வணிகமகளிர் வளைபகர்ந்த வணிகர்பெருமான் சொக்கலிங்கப்பெருமானுமென்று வியந்து களிகூர்ந்திருந்தனர். சிவபெருமான் தமதருமைத்திருக்கரங்களால் தொட்டு வளையிட்ட தன்மையால், அவ்வணிகப்பெண்கள் கருவடைந்து அனேகப்புதல்வரைப்பயந்தனர். அப்புத்திரர்கள் அளவிறந்த ஆற்றலும், வீரமும், பெருமிதமும், புகழும் படைத்து வாழ்ந்திருந்தனர். அவ்வணிகமாதர் உலகவாழ்வைத்துறந்து சிவபெருமான் திருவடிநீழலடைந்தனர்.

திருச்சிற்றம்பலம்

---

## அட்டமாசித்தியுபதேசித்தபடலம்.

குலபூஷணபாண்டியன், மதுராபுரியில் செங்கோல் செலுத்திவருநாளில், ஸ்ரீகைலாயத்தில் கல்லாலவிருக்ஷ நீழலில், சிவபெருமான், மரகதக்கொடியாகிய உமாதேவியார் வாமபாகத்திருந்து வெற்றிலைச்சுருள் மடித்துக்கொ

டுக்க, உல்லாசமாய் போகமூர்த்தியா யெழுந்தருளியிருந்து, நந்தி பிருங்கிமுதலிய கணத்தலைவர்களும், ஜனகாதி முனிவர்களும், கேட்டானந்திக்கச் சிவகதைகளைத்திருவாய்மலர்ந்தருளுகையில், சுப்பிரமணியக்கடவுளுக்கு முலைகொடுத்த இயக்கமாதர்கள் அறுவரும் பூதிகண்டிகைமுதலிய சிவசாதனம்பூண்ட திருவேடத்துடன்வந்து, எம்பெருமானுடைய திருவடிகளைவணங்கி, சுவாமி! அடியேங்கட்கு அட்டமாசித்தி யுபதேசித்தருளல்வேண்டுமென்றிரந்துகேட்ப, சிவபெருமான், தமது மடித்தலத்தி லிருக்கும் உலகமாதாவாகிய பார்வதிதேவியாரைக் கையாற்சுட்டிக்காட்டிச்சொல்லுகின்றனர். இத்தேவியார்தன்னுடைய சர்வவியாபகத்தால் பராசத்தியாயும்,மஹேசையாயும், அணிமாமுதலிய எட்டு சித்திகளும், தன்னைப்பணிந்து குற்றேவல்செய்யுந்தோழியராகச் சூழ்ந்திருக்கச் சேவகஞ்செய்துவாழ்கின்றனள். இவளை, நீர்சிந்தித்தால், பண்டைய வினையொழிந்து, சித்திகள் எட்டுந்தருமென்று சிவபெருமான் கிருபைகூர்ந்து அட்டமாசித்திகளை யுபதேசித்தருளினர். அவர்கள் முன்னைத்தீவினை வலத்தால், எம்பெருமான்சொல்லியவாறு தேவியாரைச் சிந்தியாதுமறந்தனர். முக்கணெம்பெருமான் அக்குறை நோக்கி, அவர்களைச்சினந்து, நீவிர்பட்டமங்

கை யென்னு மூரிலுள்ள வடவிருக்ஷத்தடியில், கருங்கற்பாறையாகக் கடவீரெனச்சாபமிடலும், அவர்கள் அஞ்சித்திருவடிகளிற்பணிந்து, இச்சாபமொழிவது எப்போதென்றுகேட்டலும், நீவிர், கருங்கல்லாய்க்கிடப்பீராயின், ஆயிரம்வருடங் கழிந்தபின்னர், நாம், மதுரையம்பதியினின்றும்போய், நுஞ்சாபமொழித்து, பண்டயவுருவந்தந்து, சித்திகளெட்டுங் காட்டுகின்றோமென்று திருவாய்மலர்ந்தனர். அவ்வாறே யவர்கள் கருங்கல்லாய்க் கிடக்குநாளில், ஆயிரவருடம் சென்றபின்னர், கிருபாசமுத்திரமாகிய சிவபெருமான், அருட்குருவாய் அங்கடைந்து, கடைக்கணித்தமாத்திரத்தில், அவர்கள் கல்லுருமாறி, பழையவடிவம்பெற்று எழுந்து எம்பெருமானை வணங்கலும், அவர் அம்மாதர்கள் சென்னிமேல்கை வைத்து, உபதேசிப்பாராயினர். அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் எனச்சித்திகள் எட்டாம். இவற்றுள், அணிமாவாவது, மிகச்சிறிய உயிர்கடோறுந் தான்பரமகாஷ்டையணுவாய்ப்புகுந்து வாழ்தலாம். மகிமா வென்பது, பிருதுவிமுதல் நாதமீறாகச் சொல்லப்பட்ட முப்பத்தாறுதத்துவங்களினுள்ளும் புறம்பும் நீங்காமல் நிறைந்திருத்தலாம். லகிமா, மேருபாரம்போலிருக்கும் யோகியை எடுத்

தால் துரும்பைப்போல் இலகுவாயிருத்தலாம். துரும்பைப்போலிருக்கும் யோகியை யெடுத்தால் மேருபாரம்போலிருப்பது கரிமாவாம். பாதாளத்திலிருப்போன் பிரமலோகமடைதலும், மீட்டும் பாதலஞ்செல்லலும் பிராத்தியாகும். பரகாயப்பிரவேசஞ்செய்தல், ஆகாயகமனம் புரிதல், இச்சித்தசர்வபோகங்களும் தானிருந்த விடத்தில் கிடைக்கப்பெறுதல் பிராகாமியமாம். சூரியவொளியால், உலகிலுள்ளபொருள்களைக் காணுதல்போல், தன்தேகத்தொளியால் மண்ணிலுள்ள பொருள்களையும், விண்ணிலுள்ள பொருள்களையும், திரிகாலநிலைகளையுமறிதல், இதனையும் பிராகாமியமென்று வேதங்கள் கூறும். ஈஸ்வரனைப்போல், தன்னிச்சையால் முத்தொழிலும்புரிந்து, சூரியன்முதலிய கோள்கள் பணிகேட்ப விளங்குவது ஈசத்துவமாகும்.

அசுரர், பறவை, மிருகம், பூதம், மனிதர், இந்திரன்முதலிய அட்டதிக்குப்பாலகர்கள் இவர்களைத்தன்வசப்படுத்தல்வசித்துவமாம். எம்மையுள்ளபடி யுணர்ந்த யோகியர்கள் இவற்றை விரும்பாரெனினும், அவர்பெருமையை உலகத்தாருக்கு உணர்த்தும்பொருட்டு அவை நிழல்போலவனையடைந்து பிரகாசியாநிற்கும், என்று சித்திகளெட்டினையும் சிவபெருமான் அவ்வியக்தமாதர் அறுவர்க்கும் தெள்

ளிதி னுபதேசித் தருளினர். மஹாதேவன் உபதேசித்த அந்தசித்தியை உமாதேவியார் பாவனைபலத்தால் நன்குபயின்று, ககனமார்க்கமாய்ச்சென்று, அந்தயக்ஷஸ்திரீகள் அறுவரும் கைலையையடைந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

---

## விடையிலச்சினையிட்டபடலம்.

குலபூஷணபாண்டியன், மதுராபுரியில் அரசுபுரிந்துவருநாளில், ஸ்ரீஏகாம்பரநாதர் எழுந்தருளியிருக்கும் காஞ்சீபுரத்தைமூடியிருந்த காட்டைவெட்டி நகர்கண்ட காடுவெட்டிய சோழனெனவன், வேதாகமபுராணங்களில், துணிந்த பரம்பொருள் சிவபெருமானேயெனத் தேர்ந்து, விபூதி கண்டிகையே பூஷணமாகக் கொண்டு, எக்காலுஞ்சிவபுராண சிரவணஞ் செய்துகொண்டு, கண்ணுதற்பெருமான் திருவடிகளில் மிக்க அன்புள்ளானாய், அங்கயற்கண்ணி சமேதனாகிய சொக்கலிங்கப்பெருமான் திருவிளையாடலைச் செவிமடுத்து, மதுரையம்பதிக்குச்சென்று அவரது ஸ்ரீபாதங்களை வணங்கல்வேண்டுமென்னு மாசைமிகுதியால் நான் என்றுபோய்ப் பணிவேனென்று பரிவுகூர்ந்து சொக்கலிங்கப்பெருமானையுள்ளத்தில் தியானித்துக்கொண்டுஇரவில்துயிலும்போது,

எம்பெருமான், அவன் கனவின்கண் ஒரு சித்தராயடைந்து, அன்பனே! நீயொன்று மஞ்சல்வேண்டாம். மாறுவேடம்பூண்டு இரவில் தனித்துவந்து தொழுது செல்லுகவென்று திருவாய்மலர்ந்தேகினார். சோழன் அது கேட்டு விழித்தெழுந்து மிக்க அற்புதமடைந்து, அமைச்சர்சேனைகள் முதலியயாவருமின்றி தனியேபுறப்பட்டு, காடுமலைமுதலிய யாவுங்கடந்து வைகைத்துறையடைந்தனன். அப்போது வையையாறானது பெருக்கெடுத்து வருதலைக்கண்டு, சோழன் மனம்வருத்தமடைந்து, சொக்கலிங்கப்பெருமானைத்தொழுதற்கு இஃது பெருமிடையூறாகவந்து வாய்த்ததே. பாண்டியனேயன்றி வையையும் நமக்குப்பகையாயிருக்கிறதே. இரவுபோய் பகல்வந்துவிட்டால் பாண்டியன் நமக்குத்தீங்குவிளைப்பனேயென்று வருந்தும்போது, சிவபெருமான் கனவில்வந்ததுபோல், அவன்நனவிலும்வந்து வெள்ளம் வற்றும்படி நோக்கி, ஆற்றைக்கடப்பித்து, நகரின் வடக்குவாயில் திறந்து, காவல்களையும் வீதிகளையும் கடந்துபோய், சோழனைப்பொற்றாமரைத் தீர்த்தத்தில் மூழ்குவித்து, தம்மாலயத்தி லழைத்துக்கொண்டுபோய், தம்மையும், அங்கயற்கண்ணம்மையையும் பணிவித்து, ஆனந்தக்கடலிலழுத்தினார். அது காலையில் சோழன், சொக்க

ஸ

லிங்கப்பெருமானைப் பலவகையாகத்துதித்து நிற்கையில், எம்பெருமான், அவனுக்குவேண்டியவரங்கணல்கி, அன்பனே! நீவந்ததை பாண்டியனறிந்தாலுனக்குத் தீங்குபுரிவன் என்றுரைத்து, அவனை உத்தரவாயிலாக அழைத்துக்கொண்டுபோய் வைகையாற்றின் வடகரையளவுஞ்சென்று, அவன்நெற்றியில் திருநீற்றுக்காப்பிட்டு, ஈதுனக்குத்துணையாகவருகவென்று அவனைவிடுத்துத்திருப்பி,நகரவாயிற்கதவடைத்து, அதில் விடைக்குறியிட்டு ஆலயமடைந்தனர். பின்னர், சூரியோதயமாதலும், வாயில்திறப்போர்வந்து விடைக்குறியைக்கண்டு ஐயமெய்தி, மற்றை மூன்றுவாயிலும் தாங்கள் நேற்றிட்ட மீனக்குறியிருக்கவும், வடக்குவாயின்மாத்திரம் மாறுபட்டிருப்பதைக்கண்டு, இதென்னை யதிசயமென்று பாண்டியன்முன்னெய்தி யிதனைக்கூறலும், பாண்டியன்வந்துநோக்கி, அதிசயித்து, செய்தவரின்னாரெனத்தேர்கிலானாய், அரண்மனையடைந்து, உணவொழித்து, தரையில்படுத்து நித்திரைசெய்யும்போது, சிவபெருமான், அவன்கனவிலடைந்து, அன்பனே! நம்மிடத்து மெய்யன்புள்ளகாடுவெட்டியசோழன் நம்மையிங்குவந்து தரிசிக்க விரும்பினனாதலால், நாம் வடக்குவாயில் திறந்தவனையழைத்துக்கொண்டுவந்து பணிவித்து, மீளவிடுத்து தாழிட்டு நமது

விடையாற் பொறித்தோமென்று ஐயமொழித் துப்போயினர். அதுகேட்ட பாண்டியன், விம் மிதமடைந்து, அன்பாளர்க்கு எளிவந்தமை போற்றி, சிவபெருமான் றிருவிளையாடலையா வர்க்குந் தெரிவித்துத் தானும்பேரின்பவெள் ளத்தழுந்தினன். பின்னர், தன்னரசுரிமை யைத் தன்புதல்வனாகிய இராஜேந்திரபாண்டி யனுக்களித்து, சிவபெருமான் றிருவடிநீழ லடைந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## தண்ணீர்ப்பந்தல்வைத்தபடலம்.

இராஜேந்திர பாண்டியன், மதுராபுரியில் அரசுபுரிந்துவருநாளில், காடுவெட்டியசோழ னானவன் கூடலெம்பெருமானாகிய சொக்க லிங்கக்கடவுளை வெளிப்படையாகப்போய்த் தரிசிக்கக்கருதிப் பாண்டியனுடைய நட்புபெ றுமாறு, அளவிறந்தபொருள், ஆடை, ஆபர ணமுதலியனவாகிய வரிசையாகவிடுப்ப, அவற்றைப் பெற்று, தானுஞ்சோழனுக்குப் பாராட்டற் கெண்ணிப் பலவேறுவரிசைகள் செலுத்தி னன். அதுகண்ட சோழன் உவப்படைந்து, தன்னருமைப்புதல்வியைப் பாண்டியனுக்கு மணஞ்செய்விக்க இசைந்திருந்தனன். அது கேட்டு, அப்பாண்டியனுக்குத் தம்பியாகவந்த

பழிபஞ்சா வஞ்சகனாகிய ஆரச்சிங்கமென்பவன் சோழன் குலமகளைத் தான்போய்க் கொள்ளநினைத்து, காஞ்சிப்பதியைக்குறுகுமளவில், சோழன்சேனையோடுஞ் சென்று எதிர்கொண்டழைத்து வந்து, தமயனுக்கென்று குறித்திருந்தபெண்ணை யவனுக்கு மணம்புரிந்து, அந்த புதியமருமகனுக்கு அரசுநிலை வேண்டி, இராஜேந்திரபாண்டியனை பிடிக்கக்கருதி, நால்வகைச்சேனைகள் புடைசூழப் பாண்டியன்மேல் அமர்க்கெழுந்து வந்தனன். சோழனுடையசேனை மதுரைக்கு இரண்டுயோஜனை தூரத்தில் வருமுன்னரே, பாண்டியன் ஒற்றராலுணர்ந்து, சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து, சுவாமீ! அன்று நடுராத்திரியில் வந்தும்மைப்பணிந்து தனியனாய்ச்சென்ற உமதன்பனாகியசோழன், என்னுடன் நட்புகலந்து, இன்றுமனதில் வேறொன்று எண்ணிவருகின்றனன். தருமத்துக்குட்பட்டு அவனுக்குத் துணைபுரிந்தீர், இன்றவன்செய்யும் அதர்மத்துக்குமுட்பட்டுகொடுமைசெய்யலாமோ? என்றுகூறி குறையிரத்தலும், சொக்கலிங்கப் பெருமான் திருவருளால் அசரீரிவாக்கொன்று அன்பனே! நீ நாளை பகைவனோடெதிர்த்து போர்செய்க வெற்றிநின்பக்கலுண்டாகும்படிச் செய்கின்றோமென்று எழுந்தது. அது கேட்டு பாண்டியன் களிகூர்ந்து, சிவபெருமா

அன்பனே! நீ நீதிபாளனுகையால், உன்மன த்துக்கிசைந்தவாறு செய்கவென்று, அசரீரி வாக்குண்டாக, அதுகேட்டு பாண்டியன், சோழனுக்குச் சிலயானைகுதிரை யாபரணமுதலி யன கொடுத்தனுப்பிவிட்டு, தன்தம்பி செருக்கொழியும்படி, அவன் நிதியைக்கவர்ந்து ஒட்டிவிட்டு, எல்லாவுயிர்க்குந் தாய்போலிருந்து அரசாண்டு வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## இரசவாதஞ்செய்தபடலம்.

---

இராஜேந்திரபாண்டியன், மதுராபுரியில் அரசுபுரிந்துவருநாளில், வைகைநதித்துறையிலுள்ளதும், தேவேந்திரன், சூரியன் முதலிய பலதேவர்களால் பூஜிக்கப்பட்டதுமாகிய திருப்பூவணத்துக்கோயிலுக்குரிய உருத்திரக்கணிகையாகிய பொன்னனையாளென்பவள். மிக்க அழகுவாய்ந்து, ஆடல்பாடல்களில் சிறந்து, அறநெறியிலொழுகி, சிவபெருமானிடத்தில் மிக்க மெய்யன்புடையாளாய், தன்தோழியரோடு, விடியுமுனெழுந்து, நீரின்மூழ்கி, திருப்பூவணநாதர் ஸ்ரீபாதங்களையருச்சித்துப் பணிந்து, நிருத்தஞ்செய்து மனையடைந்து, அடியார்களைச் சிவனெனப்பாவிக்குங் கருத்தளாய், அவர்களடியைப்பூசித்து, அவர்களுள்ளங்

களிக்குமாறு அறுசுவையோடுங்கூடிய அமுதுபடைத்துப் பின்னர், தானருந்தும் நியமமுடையளாய் வாழ்ந்து வந்தனள். இவ்வாறொருநாளில், அவளன்பையுலகத்தார்க்குத் தெரிவிக்கும்பொருட்டு, பூவணநாதர் தன்திருவுருக்காணுமாசையைப் பொன்னனையாட்குக் கொடுத்தருளலும், அவள் எம்பெருமான் திருவுருவைக் கருக்கட்டிவைத்து, நாடோறுந் தனக்குக்கிடைக்கும் பொருளெல்லாம் அடியார்பூசைக்கேயன்றி மீதியில்லாமையால்,எம்பெருமான் திருவுருக்காண்பதெப்படியென்று, தீராத சிந்தாகுலமுடையளாயிருப்ப, அங்கு சிவபெருமானறிந்து, ஒரு சித்தவேடராய் அவள்மனையெய்தி, அங்கு அமுதுசெய்வாரோடுமுள்ளடையாமல், புறங்கடையிலொருபுறமிருந்தனர். அடியவர்களெல்லாமமுது செய்தகன்ற பின்னர், தோழியர் வெளியே போய், அங்கெழுந்தருளியிருந்த சித்தபுருடரைநோக்கி, அமுதுசெய்தற் குள்ளெழுந்தருள்கவென்றழைத்தலும், எம்பெருமான் அவர்களைநோக்கி, உம்முடைய தலைவியை யிங்கழையுமென்றருளினார்.

அவர்கள் உள்சென்று தங்கள் தலைவியிடமதனையோதலும், அவள் எம்பெருமானிடம் வந்து, உபசாரமொழிகவின்று, அருக்கியம், ஆசனமுதலியவளித்து, திருவடிகளில் வண

ங்கி, தேவரீர் இங்கெழுந்தருளுவதற்கு நானென்ன தவஞ்செய்தேன் என்று மொழிந்து, அஞ்சலியஸ்தயாய்நிற்க, சித்தர் அவள்மேல் கிருபாநோக்கம் வைத்தனர். அம்மாத்திரத்தில், அருள்வலைப் பட்டவளாய், எம்பெருமானை நோக்கி, சுவாமீ! உள்ளே யெழுந்தருளுக உமது திருவுள்ளத்திற் கிசைந்தபணிசெய்யவல்லேன் என்றுகூறலும், சித்தர் அவளைநோக்கி, மாதே! நீயேன் மிகவும் இளைத்திருக்கின்றனையென்று வினவலும், பொன்னனையாள் எம்பெருமானைப்பணிந்து சுவாமீ! அடியேனுக்கு வேறு யாதொருமெலிவுமில்லை. எங்கள் பூவணநாதர் திருவுருக்காண்பதற்குக்காதல் கொண்டு, எனக்குநாடோறும் வரும் பொருளெல்லாம் அடியார்பூஜைக்கே செலவாகின்றமையால், என்னெண்ணமுடிவேறவில்லையென்று பணிவுடன் பகர்ந்தனள். சித்தர், அதுகேட்டு நங்காய்! உலகவாழ்வெல்லா மழிவுள்ளதென்றும், அறமொன்றுமே நிலையுள்ளதென்றும், அதிலும்சிவபுண்ணியமுயர்ந்ததென்றும், சிவபூஜையதனிலுமிக்கதென்றும், அதனிலுமிக்குயர்ந்தது அடியார்பூஜையே யென்றுந்துணிந்துசெய்து வருகின்றமையால், இம்மைமறுமைப் பயன்களையெய்தினாய், சுவர்ணத்தால் சிவபெருமான் திருவுருக்காண்பதற்கு, உன்மனையிலுள்ள பித்தளை ஈயமுதலிய உலோக

ங்கள் யாவுங்கொண்டுவருவாயென, அவ்வா
றே கொண்டுவந்து சித்தர்முன் வைத்தன
ள். சித்தயோகியர் அவற்றின்மீது திருநீற்றை
த்தெளித்துப்பாவனைசெய்து, இதைநீஇராத்தி
ரிநெருப்பிலிட்டு எடுத்தால் சுவர்ணமாம், அ
துகொண்டு நாயகன் திருவுருக்காண்க வென்
றுரைத்தனர். பொன்னனையாளதுகேட்டு, எம்
பெருமானைநோக்கி, தேவரீர் இராத்திரிக்கிங்
கமுதருந்தி இக்காரியமுடித்து, பொழுதுவிடி
யுமுன்போமெனப்புகலலும், அதற்கிசையாம
ல், நாம்மதுரையிலுள்ள சித்தரென்று மறைந்
தனர். மறைந்தபின் சித்தராய்வந்தார் வெள்
ளியம்பலத்தில் திருக்கூத்தாடிய பரஞ்சோதி
யென்றறிந்து, மறைந்தனரெனச் சிறிதயர்ச்
சியும், கவலைநீக்கினரெனவுமோர் பெருமகி
ழ்ச்சியுமுடையளாய், சித்தர்கூறியவாறு உ
லோகங்களைத் தீயிலிட்டுப் பொன்னாகக்கண்
டு, எம்பெருமான் திருவுருக்கண்டனள். பின்
னர், சுவாமிதிருமேனியழகைக்கண்டு, அழகி
யபிரானேயென்று அள்ளிமுத்தமிட்டு, பிர
திட்டைசெய்து, உற்சவாதிகள் நடாத்திவந்
து, சிலநாள் கழிந்தபின் மோக்ஷமடைந்தன
ள். அவள், அந்தநாயகன் கபோலத்திட்டகை
நகக்குறியும், அழகியபிரானேயென்று சொ
ன்ன காரணப்பெயருங்கொண்டு, பொன்மே

ணி வேறுபட்டு, கலியுகத்துக்குத் தக்கவாறு பொருந்தியவுருவாய் விளங்குகின்றது.

திருச்சிற்றம்பலம்.

---

## சோழனைமடுவில்வீட்டியபடலம்.

இராஜேந்திரபாண்டியன், மதுராபுரியில் சிலநாள் கழிந்தபின்னர், சிவலோகவாழ்வடைந்தனன். பிறகு, அவன்புதல்வன், இராஜேசனும், அவன்புத்திரன் இராஜகம்பீரனும், அன்னோன்மகன் பாண்டிவங்கிய தீபனும், அவன் தனயன் புரந்தராஜித்தும், அவன் குமாரன்பாண்டிவங்கிய பதாகனும், அவ்வாறேயரசாண்டு சிவகதியடைந்தனர். கடையிற்கூறிய பாண்டியவங்கிய பதாகனுடைய புதல்வனான, சுந்தரேசபாதசேகரபாண்டியன் சொக்கலிங்கப்பெருமான்திருவடிக் கன்புடையானுய்க் கொடுங்கோன்மை யுடைய குறும்பரசர்களை வென்றுபொதுக்கடிந்து செங்கோலோச்சிவருநாளில், பத்துத்தேர், நூறுயானை, ஆயிரங்குதிரை, பதினாயிரம்வீரர்கள் ஆகிய இரதகஜதுரகபதாதிகள் இவ்வளவேவைத்துக்கொண்டு, அவற்றிற்குத் தக்கபொருணல்கி, நின்ற பொருளையெல்லாம் கூடலெம்பெருமானுக்கே செலுத்தி, கண்டிகைமகுடமாதிதிருவாபரணங்கள்செய்தும், கோபுரமுதலியன புனைந்தும், மற்று

முன்னை திருப்பணிகள்புரிந்தும் வாழுநாளில், அவன்சேனையின் சிறுமைநோக்கி, ஆயிரம்பரிக்கோர் சேவகனென்னும் பெயர்பூண்ட சோழனொருவன், பாண்டியனைவெல்லக்கருதி, தன்சேனா சமுத்திரத்தோடு மதுரையம் பதியைநோக்கிவருகையில், அஃதுணர்ந்த பாண்டியன் சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து, வணங்கி, எம்பெருமானே! அடியேன் இந்தப்பூமியை, உமதுதிருவருள் வலத்தால் அரசாள்வதை நோக்காது, என்சேனையின் சிறுமைநோக்கித் தன்வலியா லென்னைவெல்லற்கெண்ணித் தன்சேனாசமுத்திரத்தோடும் சோழன் மதுரையம்பதியை நண்ணினனென்று குறையிரந்தனன். அப்போது, அன்பனே! நீயேவெற்றிபெறுமாறு நாம்வந்து அமர்புரிவோம் என்று அசரீரிவாக்கொன்றுண்டாதலும், பாண்டியன்கேட்டுவகைபூத்து, சிவபெருமானைப் போற்றிப்புறம்போய், வாத்தியங்களொலிக்க, சேனைகள் புடைசூழ்ந்துவர, பரிமாமேவிச் சோழன்சேனைக்கெதிர் குறுகினன். குறுகியமாத்திரத்தில், பாண்டியன்சேனையானது பரமசிவனருளால், சோழன்சேனைகளுக்கோர் கடல்போலத் தோன்றிற்று. அந்தப்பாண்டியன் சேனாசமுத்திரத்தின் முன்னே, சொக்கலிங்கப்பெருமான் வேடுருத்தாங்கி, கையில்வேலேந்தி வடவாக்கினிபோலும் திறலை

ச்சோழன்கண்டு சீறி, ஆயிரம் பரிக்கோர் சேவகன்வந்தேனென் றெதிர்த்தலும், வேடுருப் பூண்டுநின்றசொக்கலிங்கப்பெருமான் அவனை நோக்கி நீ ஆயிரம்பரிக்குமாத்திரமோர் சேவகன், நான் எண்ணிலாப்பரிக்கோர் சேவகன் என்றுஇடியேறுபோலுரைத்து, தன்கையிலுள்ள வேலை வலப்புறஞ்சுழற்றி யவனையெதிர்த்துச் சீறலும், அதுகண்டு, சோழன்பயந்து, நாமினிஇந்தவேளையிறப்பதற்கையமில்லை யென்றுள்ளம் நடுங்கி யோட்டமெடுத்தனன். அப்போது, வேடுருக்கொண்டுவந்த எம்பெருமான் மறைய, பாண்டியன் சோழனைத்துரத்தியோடுகையில், சோழன் திரும்பிப்பார்த்து வேடுருவமூர்த்தியைக் காணாமையால் அச்சமொழிந்து, பாண்டியன் மதுரையளவும் பின்பற்றித் துரத்துகையில், வாயுவேகமாயோடிய பாண்டியன் அங்கோர் அகழியில் வீழ்தலும், துரத்திச்சென்ற சோழனும் வீழ்ந்தனன். அவ்விருவரில், பாண்டியன்மாத்திரமேல்வர, சோழன் நீரிலாழ்ந்திறந்தனன். மாண்டசோழனுடைய நால்வகைச்சேனைகளையும், நிதிகளையுங்கவர்ந்து, சொக்கலிங்கப்பெருமானுக்கு வேண்டிய சிறப்புகள் நடாத்தி, அருட்குரியனாய் வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

# உலவாக்கோட்டையருளியபடலம்.

சுந்தரேசபாதசேகரபாண்டியன், மதுராபுரியில் செங்கோலோச்சி வருநாளில், அப்பதியில், ஓர்வேளாளன், சிவபெருமானிடத்தும், அடியார்களிடத்தும் மிக்க அன்புள்ளானாய், கற்பிற்சிறந்த தருமசீலையென்னும்மனையாளோடும் இல்லறதருமமேற்கொண்டு, உழவுத்தொழிலாலடைந்த பயனில், அரசர்கடன்போக, மீதியாயுள்ளதை வீட்டிற்செலுத்தி, மனையாட்டி பாகஞ்செய்து சிவனடியார்களுக்கு அறுசுவையோடு திருவமுதுபடைத்துவர, மணற்கேணிபோல் நாளுக்குநாள் செல்வம் வளர்ந்தோங்கிவந்தது. செல்வங்குன்றினும், நியமந்தவறு னென்னுந் தன்மையுலகத்தார்க்குணர்த்தவிரும்பிச் சிவபெருமான், வயலின்விளைவுகுறையச்செய்தனர். அங்ஙனம் வறுமையுற்றும், விருந்தித்தொழில்செய்து, கடன்கொண்டும், அடியார்க்கமுதளித்தலை முட்டுப்படாமல் நடாத்திவருநாளில், சிவபெருமான் விளைவில்லாமலும், கடன்கிட்டாமலுஞ் செய்தருளலும், அடியார்க் கமுதூட்டும் நியமம் தவறியதால், மிகவும்வருத்தமெய்தி னுயிர்த்துணையாகிய மனைக்கிழத்தியோடும் நெஞ்சமுறணபட்டு, பட்டினிகிடந்து, இனியிவ்வுடலாற்பெறும்பேறு என்னுளது? மனையாளோடும் ஸ்ரீசொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து, இச்செய்தி கூறி, ஆவிவிடுவதே துணிவென்று தீர்மானி

த்துப்போய், எம்பெருமான் திருவடிகளில்வ ணங்கி, சுவாமீ! நின்னடியார் பூசைக்கிடையூ றுண்டாகுமாறு என்வயல்விளைவின்றிச்சிதை ந்தது, வேறுகடன் கொடுப்பாரையுங்காணே ன், கடன்தரவல்லாரை நீயே காட்டல்வேண் டும், காட்டாயேல், இவ்வுடற்சுமையை யொ ழிப்பே னென்று தன்மனைக் கிழத்தியோடும் குறையிரக்கையில், அன்பனே! உன்வீட்டிலி ன்றோர் செங்நெல்கோட்டை வைத்தோம். அதை நீயெடுத்துச்செலவிடுந்தோறுங் குறை யாதிருக்கும், அதைநீ தினந்தோறும்பூஜித்து, வேண்டிய அளவு எடுத்து, அடியார்களுக்குத் திருவமுதுபடைத்து, மற்றும்பலர்க்கும் அன் னதானமுதலிய பலதருமங்கள் செய்தும் வ ருக. பின்னர், உனக்கு மோக்ஷமளிப்போம் என்று, சிவபெருமான் திருவாக்கொன்று ஆகா யத்தினிடத்தில் உண்டாயது. வேளாளகுல திலகன், அதுகேட்டின்பமடைந்து, சொக்கலி ங்கப்பெருமானை வணங்கி, தன்வீடெய்தி நெ ற்கோட்டையைக்கண்டு, மலர், சந்தனம், தூ பம், தீபம்முதலியவை கொண்டருச்சித்துஅன் னத்திற்கும், மற்றும்பல கருவிகளுக்குமதை யே யுபயோகித்து, சிவனடியார்கள், மறை யோர், தென்புலத்தார், தெய்வம், விருந்து, உ ள்ளூர், நாட்டோர் முதலியயாவர்க்கும் வரை யாதுநல்கி, எந்நாளும் நோயின்றி குபேரனைப்

போல்வாழ்ந்திருந்து, பின்னர், தன்மனையவள், அயலார், சுற்றத்தார் முதலானவரோடும் சிவசாரூபம்பெற்று, சிவலோகஞ்சென்று வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## மாமனாகவந்துவழக்குரைத்த படலம்.

சுந்தரேசபாதசேகர பாண்டியன், மதுராபுரியில் அரசுபுரிந்துவருநாளில், அப்பதியில்குபேரனைப்போல், செல்வத்திற் சிறந்த தனபதி யென்னும் வணிகனும், அவன் மனைவி சுசீலை யென்பவளும், மகப்பேறின்மையால் மிகவும் வருத்தமுற்று, தனபதிசெட்டியின் தங்கைமகனை ஸ்வீகாரபுத்திரனாகக்கொண்டு, மிக்க அருமையாக வளர்த்துவந்தனர். தனபதி, பிள்ளைப்பேறு இல்லாதவனாயினும், மனைவிமேல்வைத்த ஆசைமயக்கத்தினால், தங்கையோடு எப்போதும் தீராச்சண்டையிட்டு வருகையில், ஒருநாள், அவள் பொருளாய்மனம்வெகுண்டு, தமையனைநோக்கி, புத்திரப்பேறற்ற பாவியாயிருந்தும், உனக்கிந்தச் செருக்கேன்? என்னருமைப்புதல்வனாலன்றோ நீயிம்மைமறுமைப் பயன்களை யடைய விருக்கின்றனை யென்று வைதனள். தனபதிசெட்டி யதுகேட்டு, பெ

ரிதும்வெட்கங்கொண்டு, வருஞ்சென்மத்துக் காயினும் பிள்ளைப்பேறு தரத்தக்க தவம் புரிவேனென்று, தன்னளவிறந்த செல்வங்களையெல்லாம் தங்கைமகனாகிய மருமகனுக்கு ஒப்பிவித்துவிட்டு, தன்காதல் மனைவியோடுந் தவநெறியிற் சென்றனன். பின்னர், அவன் நெடுநாள்வாராமைகண்டு, தாயத்தார்கள் வீண்வழக்குப்பேசி பொருளையெல்லாம் அபகரித்தாலும், தாயுமகனும் சிறகிழந்தபுட்போல் தளர்வுற்று, அநாதரக்ஷகராகிய ஸ்ரீசொக்கலிங்கப் பெருமான் சந்நிதியடைந்து, திருவடிகளில்வணங்கி, நிகழ்ந்தனவெல்லாம் முறையிட்டு, எம்பெருமானே! நானோ ஆதரவில்லாதவள், என்புதல்வனோ தேர்ச்சியில்லாத சிறியன், வேறு துணையுங்காணேன். சர்வாந்தரியாமியாயுள்ள நீயறியாததொன்றுளதோ வென்று குறையிரந்து தண்டாகாரமாக பூமியில்வீழ்ந்து, சிவபெருமான் திருவருளால், சிறிதுதுயில் கொண்டவளவில், அவள்கனவில், சொக்கலிங்கப் பெருமான் வேதியமூர்த்தியாயெழுந்தருளி, நீபொழுது விடிந்தபின்னர், அரசன் ஆஞ்ஞைவலியால், தாயத்தார்களை நியாயசபைக்குக் கொண்டுபோய் மறித்துவைத்துக்கொண்டு இருப்பையாகில், நாம்போய்ப்பேசி யுன்பக்கமாக வழக்குத் தீர்த்துத்தருகின்றோ மென்றருளிச்செய்தனர். அவள்விழித்து, கனவின்

நிகழ்ச்சியையோசித்து, வியப்புற்று, யாருமில்
லார்க்குந் தெய்வமேதுணை யென்பது தெளிந்தே
னென்று மகிழ்ந்து, மீனாக்ஷியம்மை சமேதரா
கிய சொக்கலிங்கப்பெருமானை வணங்கித்து
தித்து, தன்னிளங்குமாரனோடு வீடடைந்து,
பொழுதுவிடிந்தபின் னெழுந்து, சுவாமியை
வந்துவணங்கி, எம்பெருமான் கூறியவாறு,
தாயத்தாரிருப்பிடஞ்சென்று, அவர்களைநோக்
கி, அடுப்பில்நெருப்பிடாதீர்கள், வெளியேயெ
ங்கு மடியெடுத்துவையாதீர்கள், அரசனாணை
யிட்டனன். நீங்கள்யாவரும் நியாயசபைவந்
து அங்குள்ள நீதியதிபர் சொல்லியபடிகேட்டு
எங்கள் பொருளைத்தந்து போங்கள், எனப்ப
லருங்கேட்கும்படி மறித்தமாத்திரத்தில், அ
வர்கள் பலவாறுவைது தள்ளியடித்தனர்.
அவள் நியாயசபையோர் முன்பெய்தி, விளங்
கனமுறையிடலும், நீதிவல்லோர் ஏவலாள
ரையனுப்பி தாயத்தார்களை நியாயசபையிற்
கொண்டுவந்து நிறுத்தலும், அதுசமையத்தில்,
சொக்கலிங்கப்பெருமான் தவத்துக்குச்சென்
ற தனபதிசெட்டிபோல் திருவுருக்கொண்டு,
அரசசபையடைந்து, இங்கு வேந்தனில்லை
யோ? பெரியோரில்லையோ? வேந்தன்செங்கோ
ல்கொடியதோ! தெய்வமுமில்லையோ? தருமம்
தானெங்கொளித்ததோ? என்றுமொழிந்து, ம
ருமகனையுந் தங்கையையுந் தழுவிக்கொண்டு,

அந்தோ! ஏழைகளானீரோ வென்றுவாய்விட்டழுது, தன்பாதங்களில்விழ்ந்து கண்ணீராருகப்புலம்பிய தங்கையையும், மருமகனேயுமெடுத்துக் கண்ணீர்மாற்றிமருமகனேநோக்கி, மார்பில் ஐம்படையும், பாதங்களிற் சிலம்பும், கழுத்திற்பதக்கமும், முகத்தில்சுட்டியும், காதில் குழைகளும் கண்டிலேன். வெற்றுடல்தான் கண்டேனப்பா, என்னவிலைபெறுமென்று குழந்தை நகைகளேயுங் கவர்ந்தனரென்று வாய்விட்டழுது, தங்கையையும், மருமகனேயும் தடவிக்கொடுத்து, நீங்கள்யாதுக்கு மஞ்சவேண்டாம், வஞ்சகஞ்செய்த தாயாதிகள் வழக்குத் தோல்வியடைவது காண்பீர். தீயவழியில்வந்த சிலர் பொருளேப்போல், அறத்தாற் சம்பாதித்த நமது பொருளாகுமோ? என்றிவ்வாறுகூறி, மதுரையெம்பெருமானுகிய சொக்கலிங்கக்கடவுளேநோக்கி, சுவாமீ! எம்மவர்வழக்கை இந்த நீதிவல்லோர்முன்னுகத் தீர்த்துத்தருகவென்றுபுலம்பிக்கூவி, பின்னர், நீதிநூலோரைப்பார்த்து, எம்வழக்கையும், ஞாதியராகவந்த பகைவர்வழக்கையுங்கடுநிலைமையாகத் தூக்கிப்பார்த்துத் தெரிகவென்று பகர்ந்தனர். அதுகேட்டு, நீதிநூலோர் நடுங்கி, இருதிறத்தார் வழக்கையுங்கேட்டு, அனுவாதஞ்செய்து விசாரிக்கையில், ஞாதியர்வழக்கு இழுக்கெனத்தெளிந்து சொல்லக்கேட்டு, தாய

வரிசைகள் நல்கி, சொக்கலிங்கப் பெருமான் கோயிலைப் பொன்னால் புதுக்கினன். சுந்தரேசபாதசேகர பாண்டியன் பின்னுஞ்சிலநாளு லகாண்டுவந்து, பூபாரத்தைத் தன்புதல்வனாகிய வரகுணபாண்டியன் புயத்திலிறக்கிச் சிவபெருமான் திருவடி நீழலடைந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## வரகுணனுக்குச்சிவலோகங் காட்டியபடலம்.

வரகுணபாண்டியன், சொக்கலிங்கப்பெருமான் ஸ்ரீபாதங்களில் மிக்க அன்புள்ளானாய், மதுராநகரில் அரசுபுரிந்துவருநாளில், ஒருநாள் காட்டில் வேட்டைக்குச்சென்று, அந்திக்காலம் வருமளவும் பலவிதமிருகங்களை வேட்டையாடி, நகரத்துக்குத்திரும்பிப் புரவிமீது காட்டின்வழியாக வருகையில், அவ்வனத்திலோர் வேதியன் அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருக்க, குதிரை யவனைமிதித்துச்சென்றமையால், அவ்வந்தணன் உயிர்துறந்தனன். அதையறியாமல், பாண்டியன் அரண்மனைபுகுந்தவளவில், மாய்ந்தபிராமணனை யவன் சுற்றத்தார் எடுத்துவந்து பாண்டியனுடைய புறங்கடையிலிட்டு, நிகழ்ந்ததெடுத்தோதக் கேட்டுப் பாண்டியன், தன்குற்றத்தை யுணர்

ந்து, அவர்களைக்கட்டு வேண்டியபொருணை
ல்கி, இந்த மறையோனுக்குச் செய்யவேண்டி
ய சமக்கடன்களையெல்லாமுடிப்பித்து வாழு
கையில், அப்பிரமஹத்தியானது, அவனைவிட்
டகலாமற்பற்றியது. அப்பழிக்குப்பிராயச்சித்
தமாக வேதமுணர்ந்த மறையோர்கள் சொ
ன்னவாறு, ஐவகையுணவுகளை நதிக்கரையில்
பிராமணர்கட்களித்தும், திரிமூர்த்தி சொரு
பமாகிய அரசவிருக்ஷத்தைப் பிரதக்ஷிணஞ்
செய்தும், அறுகம்புல்கொய்து பசுக்களுக்குத்
தந்தும், அகமருஷணமந்திரத்தால் யாகஞ்செ
ய்தும், பஞ்சகவ்வியங்களையும், பசுவின்கொ
ம்புபடிந்த ஜலத்தையும் பானஞ்செய்தும், நீங்
காத வலிமையுடையதாய் நெய்சொரிந்த நெ
ருப்பைப்போல் மேன்மேலும் ஓங்கிப்பாண்
டியனை மிகவும்வருத்திக்க, அதுகண்டமறை
யோர்கள், அரசே! இப்பழியானது, கூடலெ
ம்பெருமானைத்தினமும்ஆயிரத்தெட்டுப்பிரத
க்ஷிணமாக, இம்முறை பத்துநாள்புரிவாயாகி
ல், ஒழிந்துபோமென்று கூறினார். அவ்வாறே
பாண்டியன் சொக்கலிங்கப்பெருமான் சந்நிதி
யடைந்து, எம்பெருமானே! யான் இந்திரன்
பழியையும், தாரைப்படுத்த வேதியனுடை
ய மரணபாதகத்தையுமொழித்தனை. அது
போலுமிப்பேதையுடைய பழியையுந் தொலைத்த
ருள்கவென்று பாதங்களில் பணிந்தெழுந்து,

மேற்கூறியவண்ணம் பிரதக்ஷிணஞ்செய்துவருகையில், கருணையங்கடலாகிய சிவபெருமான், அசரீரியாய், அன்பனே ! நின்வழிபாட்டுக்கு யாமுள்ளமகிழ்ந்தோம். நீ யிப்பழிக்கஞ்சல் வேண்டாம், சிலநாட்களுக்குப்பின், சோழனுன்னோடு போர்செய்யவருவான். நீயதற்கிசைந்துசமர்புரிகையில், அவன்முதுகிட்டோடுவன், அவ்வாறோடுமவனை நீபின்பற்றித்துரத்திச் செல்லுகையில்,நம்மைநாமேபூசித்த க்ஷேத்திரமாகிய திருவிடைமருதூருக்கு வருவாயாகில், உன்பழியைத் தீர்க்கிறோமென்றருளிச்செய்யக்கேட்டுமகிழ்கூர்ந்து, சிவபெருமான் திருவருளைவாழ்த்தி, திருவடிகளை வணங்கித் தன்னரண்மனையெய்தியிருந்தனன். சிலநாளைக்குப்பின்னர், சோழன், பாண்டியன்மேற்போர்க்குப்புறப்படலும், அவனோடமர்புரிந்து, அவன் சேனைகளுடைந்தோடப் பின்றொடர்ந்து துரத்திச்சென்று, காவிரியாற்றையடைந்து, அதின்மூழ்கி, அதன்தென்பாலுள்ள திருவிடைமருதைப்பணிதற்காகக் கீழ்க்கோபுரவாயில் வழியாகச்செல்ல, அவனைப்பற்றியிருந்த பழியானது வெளியேநின்றது. பாண்டியன் உள்ளே சென்று சிவபெருமானைப்பணிந்து, அழலிலிட்ட நெய்போலுருகிச்செயலற்று, அறிவுருவாய் நின்று அளவிலாத்துதிகள்செய்தனன்.

சிவபெருமான், பலவாறுதுதித்து அடிப ணிந்து நின்றபாண்டியனைநோக்கி, அன்பனே! பிரமஹத்தியானது, கீழ்க்கோபுர வாயிலில் நிற்கிறபடியால், நீயவ்வழிபோகுதலொழிந்து, மேலைக்கோபுரவழியாக மதுரைக்குச்செல்க வென்று பணித்தனன். வரகுணனதுகேட்டு, எம்பெருமானை வலம்வந்து, பிரிவாற்றுமல், வாயில்தோறுமடிக்கடிபணிந்து, மேலைக்கோ புரவழியாய்ச்செல்பவன், அக்கோபுரத்தைத் தன்பெயரால் செய்வித்து, சிலநாளங்குவதிந் து, பலதிருப்பணிகள்செய்து,பின்னர்,மதுரை யடைந்து பழிதொலைவித்தாண்ட சொக்கலி ங்கப்பெருமானைத் தினந்தோறும் தொழுது, செங்கோல் செலுத்திவந்த வரகுணபாண்டிய ன், சிவபெருமான் புகழைப் பெரியோர்சொ ல்லக்கேட்டு வருகையில், வேதாகம புராணங் களெல்லாமெடுத்துச் சொல்வதும், எல்லாவு லகங்களுக்கு மேம்பட்டுள்ளதும் சிவலோக மென்றறிந்து, அதனைக்காணவேண்டுமென்னு ங்காதல்மிக்குடையானுய்,சிவராத்திரிநாளில், சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து, வ ணங்கி,சுவாமீ! தேவரீர் அடியார் கூட்டங்கள் சூழச்சிவலோகத்தில் வீற்றிருக்குந் திருக்கோ லத்தைக்கண்டுவணங்க அடியேனுக்கோர் கரு த்துண்டாயது என்று குறையிரந்துகூறினன்.

இவ்வாறு குறையிரந்த வரகுணபாண்டிய னுடைய அன்புக்கெளியராய், சொக்கலிங்கப் பெருமான் அச்சிவலோகத்தை யீண்டுவருவி த்து இவனுக்குக்காட்டுவோமென்று திருவுள் ளத்திலெண்ணியமாத்திரத்தில், அவ்வெண் ணத்தை யுருத்திரலோகமறிந்து, கோடிசந்திர ர்கள் ஒளிவீசியோரிடத்து நின்றதுபோல், வி ண்ணிலுலாவு மிருசுடர்களு மொளிமழுங்கு மாறு வந்துதோன்றியது. சிவபெருமான் நந் தியையழைத்து, நம்மிடத்து மெய்யன்புபூண் ட வரகுணபாண்டியன்நமதுலகத்தைக்காண் பதற்கு விரும்பினனாதலால், நீயவனுக்குக் காட்டுகவென்று பணித்தருளலும், நந்தியெம் பெருமான் அப்பணியைத் தலைமேற்கொண்டு பணிந்து சென்று, வரகுணனை யழைத்துக் கொண்டுபோய், கருப்பூரம்போலக் கமழ்ந் து, பதினாயிரம் யோசனைதூரம் பரிமளிக்கும் இலக்ஷுமிதழ்கள்பொருந்திய கமலங்கள் மலர்ந் த ஓடைகள்புடைசூழ்ந்த ஆறுகளும், அளவிற ந்ததேவமாதர்களும்,தும்புரு நாரதர்களும்,வீ ணையேந்திப்பாடுமினிய கானமும், அமுதவா விகளும், பொற்றாமரைத்தடாகங்களும், அர ம்பாஸ்திரீகள் விளையாடுகின்ற மரகதச்சோ லைகளும், தேவர்கள் பதங்களும், பாலகழியும், பொன்மதில்களும், கோபுரங்களும், மங்களமி க்கழகுவாய்ந்த வீதிகளும், மாளிகைவரிசை

களும், உருத்திரர்கள் உருத்திரமகளிரோடுவா
ழும் மாளிகைநிரைகளும், அபரற்ற செல்வங்
களும், போகங்களுங்காட்டி, பிரமன்பதமும்,
விண்டுபதமும், உருத்திரபதமும், அஷ்டதிக்
குப்பாலகருறைவிடங்களும், சரியை கிரியை
யோகங்களை யநுஷ்டித்து, முறையேசாலோ
க சாமீப சாரூபபதங்களையடைந்த அடியவர்
வாழிடங்களும், சோமசுந்தரக்கடவுளுக்கு ஆ
லயமுதலிய திருப்பணிகள்செய்து, பூதிசாத
னவழியுலகாண்டு கதியடைந்த பாண்டியர்கள்
வாழுமிடங்களும், வேத்திரப்படையால்குறித்
துக் காட்டிச்சிவபெருமான்சந்நிதி முன்விடுத்
தனன். அங்கேவேதாகமங்கள் வடிவுபூண்டு
இருபுடைநின்று வாழ்த்தவும், தும்புருநாரதர்
கள் கைகளில்யாழேந்திப்பாடவும், அரம்பை
மாதர்நடிக்கவும், தேவர்களிடங்கிடையாமல்
ஒதுங்கியிருக்கவும், விநாயகக்கடவுளும், முரு
கக்கடவுளும், வீரபத்திரமூர்த்தியும் ஏவினப
ணிசெய்து நிற்பவும், பிரமவிஷ்ணுக்கள்தொ
ங்கும் வஸ்திரத்தை யொதுக்கிக்கொண்டு, வா
ய்பொத்தி யொருபுறமொதுங்கிநின்று தங்கள்
குறைகளைச்சாற்றவும், இந்திரன்முதலிய திக்
குப்பாலகர்கள் தாங்கள் புரியுங்காரியக் குறை
வுகளை யோதிநிற்கவும், கணத்தலைவர்கள் வா
யில்கடோறுங் காவல்செய்யவும், சித்தர், கின்
னரர், கிம்புருடர், வித்தியாதரர் முதலிய தேவ

கணங்கள் பரவாநிற்கவும், எங்கள்பிறவி யொழித்தருளுகவென்று மிக்கமெய்யன்பினால் கண்களிலானந்த பாஷ்பம்பெருக, தரிசித்தவண்ணமாய் முனிவரர்கள் சங்கர சிவசிவவென்று துதித்தோதவும், அவரவர்கட்கு வேண்டியவரங்களை வரன்முறைவழங்கி, உமாதேவியார் புன்முறுவல்செய்ய ஆயிரஞ் சூரியர்களொளிவீசும் சிங்காசனத்தி லெழுந்தருளியிருந்த சிவபரஞ்சுடரை வரகுணபாண்டியன் கண்டிறைஞ்சி உரைதடுமாறவும், மெய்புளகிக்கவும், ரோமஞ்சிலிர்ப்பவும், பரவசனாய்ப் பலவாறு துதித்துநிற்ப, தோன்றியசிவலோகமறைந்து முன்பிருந்தவாறு பிராட்டியுந்தானுமாகச் சொக்கலிங்கப்பெருமான் வீற்றிருந்ததைக் கண்டுபணிந்து, கண்ணீர் தாரைதாரையாய்வழிய நின்றுதுதித்து எம்பெருமானருள்பெற்று, பின்னர்பலதிருப்பணிகள் செய்துலகாண்டுவாழ்ந்தனன் என்றுகூறிய அகத்தியமுனிவனை இருடியர் நோக்கி, இந்திரன்பழியும், வெள்ளையானைசாபமும், தந்தையைக்கொன்று தாயைப்புணர்ந்த வேதியன்பாவமும், சிவபெருமான்மதுரையில் ஒழித்தனனன்றோ? வரகுணனைப்பற்றியபிரமஹத்தியைமாத்திரம் திருவிடைமருதில் வருவித்துத்தீர்த்தவாறென்னை யெனவினவினர். முனிவர்களே! மதுரையெம்பெருமான்புண்ணியமூர்த்தி

யாகையால், அத்தலத்துள்ள அடியவரும் இப்பாதகஞ்செய்யாவண்ணம் திருவுளத்திற்க ருணைகொண்டு இப்பழியை திருவிடைமருதி லொழித்தனனென்று அகத்தியன்விடை தந்தருள, யாவருஞ் சந்தோஷித்து சொக்கலிங்கப்பெருமான் திருவடியிற்பதிந்த மனத்தினராய் ஆனந்தக்கடலிலாழ்ந்தனர்.

அம்மதுராநகரமானது, அன்று தொட்டு இன்றளவும், தனக்குத்தானே நிகருள்ளதாய் எல்லாத்தலங்களுக்குஞ் சிகாமணியாய், வாளுட்டிலுஞ்சிறந்த வளங்களுடையதாய், பூலோகத்தில் சிவலோகமென்று பதினன்கு புவனங்களிலும் புகழ்வாய்ந்து விளங்குகின்றது.

திருச்சிற்றம்பலம்.

---

## விறகுவிற்றபடலம்.

---

மதுராபுரியில், வரகுணபாண்டியன் செங்கோலோச்சிவருநாளில், வடதேயத்திலிருந்து ஏமநாதனென்னு மொருயாழ்வல்லோன் பல ஜயவிருதுகளோடு மதுரையம்பதிக்கு வந்து, பாண்டியனரண்மனையெய்தி யவனை வணங்கி, அவனநுமதிகொண்டாடி, வீணையை யிடக்கரத்தேந்திச் சுருதிகூட்டி, பாண்டியன் உள்ளங்களிக்கும்படி கானஞ்செய்தனன். பா

ண்டியன் மிகவுங்களிகூர்ந்து அவனுக்குவேண்டிய ஆடையாபரணங்கள், உணவுக்குரியபொருள்கள், வாசஸ்தானமுதலியன வளிக்கப்பெற்று, தனக்கிங்கு வேறு சமானமுள்ளாரில்லையென்று செருக்குற்றிருப்பதைப் பாண்டியனறிந்து, ஏவலாளரைவிடுத்துப் பாணபத்திரனையழைப்பித்து, நீ யிந்த ஏமநாதனோடும் பாடவல்லையோவென்று வினவலும், பாணபத்திரன் பாண்டியனடிபணிந்து, எம்மரசே! அடியேன் சொக்கலிங்கப்பெருமான் திருவருளாலும், உன்னுடைய திருவுளப்பாங்காலு மூயன்றுபாடி யவனுடைய விருதுகளைவாங்கி யவன் செருக்கையழிப்பேனென்றுகூறப் பாண்டியன்கேட்டு, ஆனால், நாளையதினம் பாடுகவென்று விடைதரத்தன்னிருக்கை யடைந்திருந்தனன். இப்பால், ஏமநாதனிடத்தில் கற்குமாணுக்கர்கள் மதுரையிற்பல விடங்களிலுஞ்சென்று இனிதுபாடுவதைப் பாணபத்திரன்கேட்டு மிகவும் அதிசயித்து,அந்த ஏமநாதனுடைய மாணுக்கர் பாடும்வண்ணமே யித்திறத்ததாயின் அவன்பாடுவதெத்தன்மையாயிருக்குமோ? நாம் நாளையிசைபாடி யவனை வெல்வதெவ்வாறென்று மனங்கலங்கி, சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து வணங்கி, சுவாமி! அடியேனுக்குன்னருட்டுணை செய்தல்வேண்டுமென்று குறையிரந்துபோற்றி, எம்பெருமான் திரு

வடிகளில் பதிந்தமெய்யன்போடுந் தன்வீட்டில் வந்திருந்தனன். இவ்வாறுமனம் வருந்திக் குறையிரந்த அன்பனாகிய பாணபத்திரன் பொருட்டாக, சொக்கலிங்கப்பெருமான் வயோதிகப்பருவமுள்ள ஒருவிறகாளாய் தலையில்விறகுசுமைதாங்கி, ஒரு பழையவீணை தோளிலிட்டு காலில் தேய்ந்தசெருப்பணிந்து, முகத்தில் வேர்வையொழுக, மதுராநகர்வீதி யெங்குந்திரிந்து, சுமைதாங்கிமேற் சாத்துவதும், மீட்டுமெடுப்பதும், குளத்தில் நீரருந்துவதும், கேட்பவர்க்கு அருவிலைபகர்வதுமாகச் சென்று மாலைநேரத்தில் அந்த ஏமநாதன் வீட்டுக் கடைவாயிலடைந்து, எடுத்துவந்த விறகுசுமையை யொருபுறஞ்சாத்தி, திண்ணைமீதுட்கார்ந்திளைப்பாறி, தன்வீணையையெடுத்துச் சிறிதுகானஞ்செய்தலும், ஏமநாதன்கேட்டு வெளியேபோந்து, நீயாரென்றுவினவினன். சொக்கலிங்கப்பெருமா னவனைநோக்கி, நான் பாணபத்திரன் ஆள், அவனிடத்திலிசைகற்கும்பலருள்நானுமிசைபயின்றுவருகையில், அந்தப்பாணபத்திரன் என் வயோதிகபருவத்தைப் பார்த்து, நீவயதானவனாகையால், இனியிசைபாடுதற்காகாதென்று தள்ளிவிட்டனன், ஆதலால், விறகுவெட்டிவிற்றேனும் வயிறுவளர்க்கலாமென்று இத்தொழில் மேற்கொண்டே னென்று பாணபத்திரன் கூறினன்.

ஏமநாதன் இன்னும் மொருகாலவ் விசைபாடுக வென்று கேட்க, எம்பெருமானதற்கிசைந்து, வீணையையிடத்தோளிட்டு, இசைக்காகாதகுற்றங்களையெல்லாமொழித்து, எழுதுசித்திரம் போலிருந்து கானஞ்செய்தலும், சராசரங்களெல்லாம் அவ்விசைமயமாகி யுணர்வற்றிருந்தன. பாணபத்திரனாய் வந்துபாடிய சொக்கலிங்கப்பெருமான் விறகுசுமையோடு மறைந்தனர். ஏமநாதன் எம்பெருமான்பாடிய சாதாரியென்னும் அவ்விசையைக்கேட்டு, இந்தச்சாதாரிகானமறிந்ததன்று. இக்கானத்தை யிவனுக்குணர்த்தினோன் கடவுளே யாதல்வேண்டும். ஏனையமனிதர்வல்லவரல்லர். தள்ளிவிடப்பட்ட இக்கிழவனிசைபாடுந்திரமே யித்தன்மையதேல், அந்தப்பாணபத்திரன்பாடுதலெவ்வகைத்தோவென மனங்கலங்கி, தான் கொண்டுவந்த பொருள்களும், வஸ்திரங்களும், வீணையும், விட்டுவிட்டு, இரவில் தன் மாணாக்கர்கூட்டத்தோடும் பிரயாணப்பட்டு உத்தரதிசைநோக்கிச்சென்றனன்.

அன்றிரவில், சொக்கலிங்கப் பெருமான் பாணபத்திரன் கனவிலடைந்து, அன்பனே! நின்வேண்டுகோளின்படி யின்றுநாம்விறகாளாய்ச்சென்று, நின்னடிமையென்று ஏமநாதனிடங்கூறி யிசைபாடி யவனையோட்டிவிட்டோமென்றுரைத்தனர். பத்திரன்விழித்தெழுந்து,

இவ்வடாதகாரியஞ் செய்யவேயானின்றுவே ண்டுதல் செய்தேனென்று அச்சமுற்று, சொ க்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து, பலவா று துதித்து வலங்கொண்டு, பாண்டியனிடம் வந்து பணிந்து நின்றனன். பாண்டியன் பா ணபத்திரன் வரவுகண்டு, ஏமநாதனையழைத் துவரும்படி சிலரைவிடுக்க, அவர்கள்போய் விசாரிக்கப்போனபோது,அங்குள்ளார்சிலர் அ ந்த ஏமநாதனேற்றிங்கிருந்தனன். ஒருவயோ திகன்விறகுசுமந்து, பாணபத்திர னடிமையெ ன்று பகர்ந்து இசைபாடினன். பின்னர் நிக ழ்ந்த தறியோம். அர்த்தராத்திரியில் தன்மா ணுக்கர் கூட்டத்தோடுமோட்டமெடுத்தனன் என்று கூறக்கேட்டுப் பாண்டியனிடம்வந்து சொல்லவியப்புற்று, பாணபத்திரனைநோக்கி, நேற்று நீ இங்கிருந்துபோனபின்ன ரென்செய் தனையென்றுவினவலும், தான் எம்பெருமான் சந்நிதிக்கேகிக்குறையிரந்ததும், சொக்கலிங்க ப்பெருமான்கனவில்வந்துஉன்பொருட்டு நாம் கூலியாளாய் விறகுசுமந்துபோய், சாதாரிபா டியுன்பகைவனைவென்று வந்தோமென்றுகூறி யதும் பாண்டியனிடத்தில் மொழிந்தனன். வ ரகுணபாண்டியன், ஏவலாளர் மொழிந்ததும் பத்திரன்கனுநிகழ்ச்சியும் ஒத்திருந்ததால், இஃ து நமதுசோமசுந்தரக் கடவுள் திருவிளையாட் டென்று தெளிந்து பாணபத்திரன் சிவநேசத்

தையும், எம்பெருமான் திருவருளையும்வியந்து, ஆலயமெய்தி சொக்கலிங்கப்பெருமானைப்பணிந்து, பாணபத்திரனை யானைமீதிருத்தி, நகர் வலஞ்செய்வித்து, அவனுள்ளங்களிக்குமாறு வேண்டியவரிசைகணல்கி பத்திரனைநோக்கி, சமஸ்தவுலகங்களுந் தனக்கடிமைசெய்யவிருக்குஞ் சிவபெருமானே, இரண்டுதிருவடிகளும் நோவவந்துமக்காட்செய்தனரென்றால், யாவருமுமக்கடிமைகளேயன்றோ? ஆதலால், நீரெமக்குடையார், நானுமக்கடிமை. இன்றுதொட்டுமக்கு எம்பெருமானைப் பாடுதலே கடனென்று இனியனகூறி யிருந்தனன். பாண்டியன் நல்கியபொருள் ஆபரணங்கள் முதலியவற்றை வித்துவான்களுக்கும், மாணுக்கர்களுக்கும் பகிர்ந்து கொடுத்து, சுற்றத்தோடு மகிழ்வுற்று வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## திருமுகங்கொடுத்தபடலம்.

மதுராபுரியில், வரகுணபாண்டியன் செங்கோலோச்சிவருநாளில், பாணபத்திரன் என்னும் யாழ்வல்லோன் பாண்டியன் அரண்மயில் இசைபாடுந்தொழிலொழிந்து முப்போதுஞ்சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து மிக்க உள்ளன்போடு இசைபாடும் நியமப்பூ

ண்டு வந்தனன். இத்தொழிலேயன்றி பாண பத்திரனுக்கு வேறுதொழிலில்லாமையாலே வறுமையடைதலும், எம்பெருமான் சகியாதவராய், பாண்டியன் பொக்கிசத்திலுள்ள பொற்காசுகள் சிலநாளும், ஆபரணங்கள் சிலநாளும், சாமரைப்பொற்காம்பு சிலநாளும், பொன்வஸ்திரங்கள் சிலநாளும், சிங்காதனத்தின் பொற்றகடு சிலநாளும், மணிகள் சிலநாளுங் கவர்ந்துவந்து கொடுக்கப் பெற்றுக்கொண்டு போய், வேறொருவருமறியாமல் எரியிலிட்டழித்து, தன்னைச்சேர்ந்துள்ள யாவருக்கு முதவிசெய்து கவலைதீர்ந்து வாழ்ந்திருந்தனன். இவ்வாறு கொடுத்துவந்த வெம்பெருமான் பின்னர் மறுத்தமையால், பாணபத்திரன் வறுமையெய்தி, சுற்றத்தாரோடு வருந்தி நித்திரை செய்கையில், சொக்கலிங்கப்பெருமான் அவன் கனவிலடைந்து, நாம் இதுகாறும் பாண்டியன் பொன்னறையில் திருடியுனக்குக் கொடுத்துவந்தோம். நம்பாலன்புவைத்துள்ள பாண்டியனிதையறிந்தால் மனத்தில் சங்கைகொண்டு, காவலாளரைத் தண்டிப்பானாதலால், உன்போலெம்மிடத்து மிக்கமெய்யன்புள்ள சேரமானுக்கு நாமிப்போது ஒருதிருமுகம் எழுதித்தருகிறோம் நீசெல்லுகவென்று "மதிமலி புரிசை" என்றற்றொடக்கத்துப் பாசுரத்தை யெழுதிக்கொடுத்து மறைந்தனர். பாணபத்திர

ன்விழித்து போனகந்தங்கொண்டு, அத்திரு முகத்தைப் பட்டாடையில்வைத்து, எம்பெருமான் சந்நிதியடைந்து வணங்கி வலங்கொண்டு புறப்பட்டு, சேரநாட்டையடைந்து, அங்குள்ள திருவஞ்சைக்களமென்னும்நகரில் ஒரு தண்ணீர்ப்பந்தலி லிருந்தனன். அன்றிரவில், சொக்கலிங்கப்பெருமான் சேரமான் கனவிற்றோன்றி, நாம் மதுரையிலுள்ள சித்தர். நம்முடைய அன்பனாகியபாணபத்திரன் உன்னிடத்தில் நாமெழுதிக்கொடுத்த திருமுகங் கொண்டுவந்திருக்கின்றனன். அவனுக்கு வேண்டிய பொருள்கொடுத்து அனுப்புதல் வேண்டுமென்று சொல்லிமறைந்தனர். சேரன் துயிலொழிந்து, தானிரவில் கண்டகனவை அமைச்சர் முதலானோரோடுஞ்சொல்லி, பாணபத்திரனைத்தேட ஆள்களைவிடுத்து, தண்ணீர்ப்பந்தலிலிருக்கின்றனனென்று அவர்கள்வந்து புகலக்கேட்டு, சேனையோடுஞ்சென்று, பாணபத்திரனைக்கண்டு கைகளையுச்சிமேற்குவித்துப் பாடியாடித் தண்டாகாரமாகப் பூமியில்வீழ்ந்து எழுந்து, திருமுகத்தைவாங்கிக் கண்களிலொற்றி முடிமிசைவைத்து,உடலம்பூரித்து, ஆனந்தபரவசனாய், அத்திருமுகப்பாசுரத்தை வாசித்து, களிப்பெல்லைதெரியாதவனாய் அத்திருமுகத்தைப் பொற்றட்டில்வைத்து யானைமீதேற்றி, பாணபத்திரனை முன்னிருத்தித்

தான் பின்னிருந்து சாமரைவீசி, பலவாத்தியங்களொலிக்க நகர்வலஞ்செய்வித்து, அரண்மனையிற்கொண்டுபோய், வேண்டிய வுபசாரங்கள்செய்து, அறுசுவையோடு மன்னமளித்து, தாம்பூலம் முகவாசமுதலியனநல்கி, பொன்னறையைத்திறந்து, வேண்டும்பொருள் எடுத்துக்கொள்கவென்றுரைத்தலும், பத்திரன் எடுத்துக்கொண்டனன். பின்னர், ஏழடிதூரஞ்சென்று பலவரிசைகளோடும் பாணபத்திரனை விடுத்துச் சேரன் திரும்பிச்சென்றனன். பாணபத்திரன் குபேரனைப்போல் மதுராநகரடைந்து, சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியெய்திவணங்கி, வேதியர்க்கும் புலவோர்க்கும் மற்றுமுள்ளோர்க்கும் முறைமைப்படி பொருள்வழங்கிச் சுகித்துவாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## பலகையிட்டபடலம்.

மதுராபுரியில், பாணபத்திரனென்னும் யாழ்வல்லோன் ஸ்ரீசொக்கலிங்கப்பெருமானை முப்போதும் போய்வணங்கி, நந்திதேவருக்குப் பின்புறம் நின்று இசைபாடி, அர்த்தராத்திரியில் எம்பெருமான் தேவியார் திருப்பள்ளியறைக்குச் சிவிகையி லெழுந்தருளும்போது திரித்துவரும் நியமமுடையானாய் வாழ

நாளில், ஒருநாளிரவில், சொக்கலிங்கப்பெருமான், பாணபத்திர னெத்தகைய இடையூறுவரினும் தன்னியமந் தவறுனென்னும் உறுதிநிலையை யுலகத்தாருக்குணர்த்தும் பொருட்டு, திசைகளும், மேலும், கீழுந்தெரியா வண்ணமிருண்டு கன்மழை பெய்யும்படி திருவுளத்தெண்ணினன். அப்போது பாணபத்திரன், அம்மழையைப் பூமழையாகநினைந்து, சொக்கலிங்கப்பெருமான் கோயிலடைந்து, விடைத்தேவர் பின்னின்று, வீணையையிடத்தோளில் சாத்தி, நரம்புகள்நனைந்து, இசைமழுங்கி, விரல்கள் மிறைத்து, உடல்குளிரால் நடுங்க, அன்பின்மிகையால் பலவகைத்துதிகளால் கானஞ்செய்து நிற்கையில், கிருபாசமுத்திரமாகிய எம்பெருமான் சகியாதவராய், இதோ! உனக்கே யிப்பொற்பலகை தந்தனம். இதன்மேல் நின்று பாடுவாய் என்று அசரீரியாய்மொழிந்து நல்கினர். சிவபெருமான் திருவடிக்கமலங்களை மனத்துட்கொண்டு, பலகையைக் கையிலெடுத்துக்கொண்டு பாணபத்திரன்வீட்டுக்குச்செல்லுகையில், மழைபெய்தலொழிந்து, இருண்டிருந்த ஆகாயம் நன்குவிளங்கி, நக்ஷத்திரக்கூட்டங்கள் தோன்றப்போய்ச்சேர்ந்தனன். இரவுகழிந்து சூரியனுதித்தபின்னர், வரகுணபாண்டியன் நிகழ்ந்த செய்தியைக்கேட்டு, பாணபத்திரனை வரவழைத்து, அந்தப்

பொற்பலகைமீதிருத்தி, இவரே நம்மதுரை நாயகனென்று நினைந்து இரத்தினாபரணங்களும், விளைநிலங்களும், பொருள்களும் வெறுப்பக்கொடுத்து மகிழ்வித்தனுப்பினன். பின்னர், வரகுணபாண்டியன் ஸ்ரீசொக்கலிங்கப் பெருமானை வழிபாடுசெய்துவந்து, சிலநாள் கழிந்தபின்பு இவ்வுலகவாழ்வைத்துறந்து சிவசாரூபமடைந்து சிவலோகத்தில் வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## இசைவாதுவென்றபடலம்.

மதுராபுரியில், வரகுணபாண்டியன் புதல்வனை இராஜராஜபாண்டியன் அரசுபுரிந்துவருநாளில், பாண்டியன் காமக்கிழத்தியர் பலருள், மிக்கஅழகுடையாளும் இசைவல்லாளுமாகிய ஒருத்திக்கும், பாணபத்திரன் மனையாட்டிக்கும் இசையிற்பகையுளதாயும், பாண்டியன் காமக்கிழத்தி பொறாளாய், இவளுக்கெதிராக ஒருபாடினியை வரவழைத்துப்பாடவிட்டிவள்கொண்டிருக்கும் செருக்கை யழித்தல் வேண்டுமென்றெண்ணுற்று, பாண்டியன்பாலிதனை விண்ணப்பிக்க அவனுமதற்கிசைந்து, ஈழநாட்டிலிருந்து மோர்பாடினியை வரவழைத்துப் பாடக்கேட்டு அவனைநோக்கி, நீ பாண

பத்திரன்மனைவியை நின்னோடு பாடுதற்கழை, அவளிதற்கிசையாது வேறு வுத்தரஞ்சொன்னாலும், நாமவள் சார்பாய்நின்றுன்னை விலக்கியபோதிலும் விடாதுதொடர்ந்து, அவள்வெட்கும்படி யாணையிட்டு, செல்லேல், நில்லெனவளைந்து கொள்ளென்றுசொல்லி, நீயுன்னிருப்பிடம்போய் நாளைவாவென்று விடுத்தனன். பின்னர், பாண்டியன் பாணபத்திரன் இல்லாளைவரவழைத்து ஈழநாட்டி னின்றும்போந்த இசைவல்லாளொருத்தி தன்னோடு இசைபாடவல்லாரு முளரோவென்று மிகத்தருக்கியிருக்கின்றனள், நீயவளோடு பாடவல்லையோவென்று உள்ளொன்றும் புறம்பொன்றுமாகச் சாற்ற, பத்திரன் மனையாள்கேட்டு, நெறிதவறுக்கற்பும், சொக்கலிங்கப்பெருமான்கருணையு மெனக்கிருப்பதால், பாடிவெல்வதேயன்றிப்பரிபவப்பட்டு வருந்தேனென்று மறுமொழிகூற, அவளையும் வீட்டுக்கனுப்பிவிட்டு, மறுநாள் இருவரையுந் தனதுசபைக்கழைத்து நேர்கூட்டிக் கீதங்கேட்குமுன், ஈழநாட்டிலிருந்து மரக்கலத்தில் வந்தபாடினி, பத்திரன் இல்லாளை வைது, யாழ்க்கோலுக்குக் குணதோஷங்களெத்தனை? தெய்வமியாது? என்று பலகேழ்விகேட் டிவற்றிற்குத்தரம்புகன்று பிறகு என்னுடன் பாடுக, இல்லையேலுனக்கு வசையுண்டாமென்றுமொழிந்தனள். பத்திரன்

மனையாளதுகேட் டவளைநோக்கி, நீமரக்கலத்திற்கொண்டுவந்த அருமையானகல்வியும், வாதின்மேலுனக்குள்ள வூக்கமும், பலர்விரும்பும் பெண்ணலமும் பாண்டியன் சபையிலுள்ளார் பலருமறிய வாய்திறந்து பேசவேண்டியதே. உன்னோடு இசைவாதினுக்கு நான் எதிரேயல்லாமல் தீயவாய்திறந்து வையுஞ்சண்டைக்கு எதிரலேன், நின்போல் மானம்விற்றுண்ணு மகளிரே யதற்கெதிராவரென் றுரைத்தனள். பாண்டியன் அவர்களை விலக்குவான்போ லெதிர்வந்து விலக்கி, நீவிர்பாடுமின், தோற்றோர் வெற்றியுற்றோர்க் கடிமையாவதேசபதம் என்று மானமுண்டாக்கலும், ஈழநாட்டுப்பாடினிமுன்னர் யாழேந்தி இன்னிசைபாட, பின்னர் பத்திரன்மனையாளும்பாடினள். சபையிலுள்ளோர் பாண்டியன் உட்கருத்தறியாமல் பத்திரன்மனையாள் பாடலையே வியந்தனர். பின்னரரசன் கருத்தறிந்து, அவன்புகழ்ந்தவாறே தாமும்புகழ்ந்தனர். பிறகு பாண்டியன் சபையாரைநோக்கி, ஈதின்றொருநாளிலேயே தேறத்தக்கதன்றெண அவ்விருவரையுந் தத்தமிருக்கைக் கனுப்பலும், ஈழநாட்டரிவை, பாண்டியன் தன்பாடலைப் புகழ்ந்ததே புகழ்ந்ததாகக்களிகூர்ந்திருந்தனள். பத்திரன்மனையாளோ மிக்கமனவருத்தமெய்தி, சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து

வணங்கி, கண்ணீர்தாரைதாரையாய்வழிய ஒ
ருபுறமொதுங்கி நின்று, எம்பெருமானே! பா
ண்டியன் பாரபக்ஷமாய்ப்பேசுகின்றனன். அ
வன் கருத்துக்கேற்பச்சபையோருங் கூறுவா
ராயினர். பின் நடுநிலைமை யாராய்ந்து பேசு
வார்யாவர்? கிருபாநோக்கம்வைத்து, என்து
யரொழித்தல் வேண்டுமென்று குறையிரத்த
லும், கருணாநிதியாகிய சிவபெருமான், நீயே
நாளைவெல்லும்படி செய்கிறோம், நீ யாதுக்கு
மஞ்சல் வேண்டாமென் றசரீரியாய்ப்புகலக்
கேட்டு, மகிழ்வெய்தித் தன்னில்லஞ்சேர்ந்தி
தனள். அன்றுபோலவே மறுநாளும் பாண்டி
யன் அவ்விருவரையுமழைப்பித்துப் பாடக்
கேட்டு,நேற்றுக்கூறியவாறேகூறச் சபையோ
ரு மப்படியே பகர்ந்தனர். பாணபத்திரன்ம
னைவி பாண்டியனைநோக்கி, நீபாரபக்ஷமுடை
யாயாகையால், நீசொன்னவாறே சபையுஞ்
சொல்லத்துணிந்தது. சொக்கலிங்கப்பெரு
மான் சந்நிதானத்திற்போய்ப்பாடுவோம். எம்
மிருவர் பாடலையுங்கேட்டு சந்நிதியிலிவள் வெ
ன்றாளென்று துணிந்தொருவர் சொன்னாற்
போதுமென்றுகூறப் பாண்டியனவ்வாறே யி
சைந்து, மறுநாளவ்விருவரையும் சொக்கலிங்
கப்பெருமான் சந்நிதியின் மண்டபத்தழைப்
பித்தனன். எம்பெருமானுமோர் நாவலர்போ
லச்சபையில்வந்திருந்தனர். அப்போது, ஈழ

நாட்டுமங்கை முன்னர்பாடினள். ஒருவரும் வாய்திறவாதிருந்தனர். பின்னர், பத்திரனில்லாள்பாடலும் யாவருங்கேட்டானந்தித்தனர். பாண்டியன் * கைதவனென்னுந் தன்பெயர்க்காரணத்தைத் தெளிவிப்பான்போல், முன்னர் கூறியவாங்கே கூறத்தலைப்பட்டவன் எம்பெருமானருளால், தன் தீக்குணங்கெட்டு, இவளே வென்றனளென்றனன். சபையோருமவ்வாறேசாற்றினர். தோற்ற ஈழநாட்டுமாதின்கழுத்தில் பத்திரன் மனையாளை யிருத்துமென்று பாண்டியன்பணிக்க, அவ்வாறிருத்தும்போது, எம்பெருமான் ஈதற்புதம்! ஈதற்புதம்! என்றுகூறிமறைந்தனர். யாவரும் வியந்தனர். பாண்டியன் பயந்தனன். யாவருமீதெம்பெருமான் திருவிளையாடலெனத்தெளிந்து, சொக்கலிங்கப்பெருமான் கருணைத்திறத்தையுமடியவரன்பையுநோக்கிக் கண்ணீர்வழிய ஆனந்தக்கடலிலாழ்ந்தனர். பின்னர், பாண்டியன் ஈழநாட்டரிவை பிடரியிலிருந்த பத்திரன் மனையாளை யிறக்குவித்து வேண்டிய வரிசைகணல்கி, ஈழநாட்டுமங்கைக்குஞ் செலவளித்து அனுப்பிவிட்டு, சொக்கலிங்கப்பெருமானுக்குமாபாஹிகள் சமர்ப்பித்து, அரசர் வலியெல்லாந் தெய்வத்தின்முன்னும், அத்தகையபிறதேவர்வலியெல்லாம் முக்கணெம்பெருமான் முன்னும் இல்லாவென்றுலகத்

---

* கைதவன் = வஞ்சகன்.

தோர் மொழிவதை யிப்பண்மகளிடங் கண்டேனென்று வியப்படைந்து சொக்கலிங்கப் பெருமானைப்போய் வணங்கி, வலஞ்செய்து விடைபெற்று, பலவாத்தியங்கள் கோஷிக்க அரண்மனையடைந்து, சுகுணபாண்டியனைப் பயந்து, இன்புற்று வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## பன்றிக்குட்டிகளுக்கு முலைகொடுத்த படலம்.

மதுராபுரியில், இராஜராஜ பாண்டியன் அரசுபுரிந்து வருநாளில், மதுராநகருக்குத்தென்பால் குருநாதனெனப்பேர்பெற்று, சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலமாகிய குருவிருந்தத்துறையென்னு மூரில்வாழும் சுகலன் என்னும் வேளாளன் மனைவியாகிய சுகலையென்பாள் பன்னிருபுதல்வரைப்பயந்தனள். அப்புதல்வரையவர்கள் தங்கள்செல்வச்செருக்கால் கடியாராகி மிகக்களிப்புடன் வளர்த்து வருநாளில், பெற்ரேர்மரித்தனர். பின்னர், அப்புதல்வர் கொடுந்தொழில் பூண்டுவேடர் கூட்டத்திற் சேர்ந்து காட்டகம்போய் வேட்டையாடிவருவாரொருநாள், ஒருபுதற் கீழ்பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்து நோற்கு மொருதபசியைக்கண்டு கைகளைப்புடைத்துச்சிரித்து, கற்

நாட்டுமங்கை முன்னர்பாடினள். ஒருவரும் வாய்திறவாதிருந்தனர். பின்னர், பத்திரனில்லாள்பாடலும் யாவருங்கேட்டானந்தித்தனர். பாண்டியன் * கைதவனென்னுந் தன்பெயர்க்காரணத்தைத் தெளிவிப்பான்போல், முன்னர் கூறியவாங்கே கூறத்தலைப்பட்டவன் எம்பெருமானருளால், தன் தீக்குணங்கெட்டு, இவளே வென்றனளென்றனன். சபையோருமவ்வாறேசாற்றினர். தோற்ற ஈழநாட்டுமாதின்கழுத்தில் பத்திரன் மனையாளை யிருத்துமென்று பாண்டியன்பணிக்க, அவ்வாறிருத்தும்போது, எம்பெருமான் ஈதற்புதம்! ஈதற்புதம்! என்றுகூறிமறைந்தனர். யாவரும் வியந்தனர். பாண்டியன் பயந்தனன். யாவருமீதெம்பெருமான் றிருவிளையாடலெனத்தெளிந்து, சொக்கலிங்கப்பெருமான் கருணைத்திறத்தையு மடியவரன்பையுந் தூக்கிக் கண்ணீர்வழிய ஆனந்தக்கடலிலாழ்ந்தனர். பின்னர், பாண்டியன் ஈழநாட்டரிவை பிடரியிலிருந்த பத்திரன் மனையாளை யிறக்குவித்து வேண்டிய வரிசைகளைல்கி, ஈழநாட்டுமங்கைக்குஞ் செலவளித்து அனுப்பிவிட்டு, சொக்கலிங்கப்பெருமானுக்குமாபரணாதிகள் சமர்ப்பித்து, அரசர் வலியெல்லாந் தெய்வத்தின்முன்னும், அந்தகையசிறுதேவர்வலியெல்லாம் முக்கணெம்பெருமான் முன்னும் நில்லாவென் றுலகத்

---

* கைதவன் = வஞ்சகன்.

தோர் மொழிவதை யிப்பண்மகளிடங் கண்டேனென்று வியப்படைந்து சொக்கலிங்கப் பெருமானைப்போய் வணங்கி, வலஞ்செய்து விடைபெற்று, பலவாத்தியங்கள் கோஷிக்க அரண்மனையடைந்து, சுகுணபாண்டியனைப் பயந்து, இன்புற்று வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

## பன்றிக்குட்டிகளுக்கு முலைகொடுத்த படலம்.

மதுராபுரியில், இராஜராஜ பாண்டியன் அரசுபுரிந்து வருநாளில், மதுராநகருக்குத்தென்பால் குருநாதனெனப்பேர்பெற்று, சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலமாகிய குருவிருந்ததுறையென்னு மூரில்வாழும் சுகலன் என்னும் வேளாளன் மனைவியாகிய சுகலையென்பாள் பன்னிருபுதல்வரைப்பயந்தனள். அப்புதல்வரையவர்கள் தங்கள்செல்வச்செருக்கால் கடியாராகி மிகக்களிப்புடன் வளர்த்து வருநாளில், பெற்ரோர்மரித்தனர். பின்னர், அப்புதல்வர் கொடுந்தொழில் பூண்டுவேடர் கூட்டத்திற் சேர்ந்து காட்டகம்போய் வேட்டையாடிவருவாரொருநாள், ஒருபுதற் கீழ்பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்து நோற்கு மொருதபசியைக்கண்டு கைகளைப்புடைத்துச்சிரித்து, கற்

களைவாரியத்தவத்தோன் மீதெறிந்தனர். அவன் இவர்கள் நமது தவத்துக்கிடையூறுவிளைத்தன ரென்று வெகுண்டுநோக்கி, மண்ணுழுந் தொழிலுடைய நீங்கள் வேட்டைத்தொழில் பூண்டுழல்வதால், பன்றிக்குட்டிகளாய்ப் பிறந்து தாய்தந்தையையிழந்து வருந்துகவென்று கொடியசாபமிட்டனன். அதுகேட்ட பன்னிருமைந்தரும், உள்ளம் நடுங்கி இச்சாபமெப்போதொழிவதெனை வேண்டலும், அவனுள்ள மிரங்கி மதுரை யெம்பெருமானாகிய சொக்கலிங்கப் பெருமானே யுங்கட்கன்னையாய் வந்து முலைதந்துவுயிரளித்து அமைச்சராக்கிப் பின்னர் வீடுதருவ னெனக்கூறினன். அவ்வாறே யப்பன்னிருவோரும் குருவிருந்த துறைக் கடுத்துள்ள காட்டில் பன்றிகட்கெல்லாமரசாயிருக்குமொருவராகத்தின் பெண்பன்றி வயிற்றிற் குட்டிகளாய்ப் பிறந்தனர்.

இங்ஙன மவ்வேளாளப் பிள்ளைகள் பன்றிக்குட்டிகளாய்ப் பிறந்து வளர்ந்து வருநாளில், இராஜராஜ பாண்டியன் அக்காட்டிற்சென்று பலமிருகங்களைக்கொன்று வேட்டையாடி வந்தனன். அப்போது, ஒருபன்றி தங்களரசிடஞ் சென்று, எம்மிறைவ! பாண்டியன் வந்து மிருகங்களை யெல்லா மழிக்கின்றனனென்று சொல்லக்கேட்டுக் கோபமூண்டு தன் பெட்டையை நோக்கி யின்று நான் பாண்டிய

ளோ டமராடச் செல்கின்றேன். வெற்றியடை வேனோ, அல்லது மாள்வேனோ, நீயுன் புதல்வரைப் பாதுகாத்துச் சுகமாயிருவெனக்கூறலும், பெட்டைப்பன்றி யானும் நின்னுடன் வந்து நீமாய்ந்த விடத்தில் மாய்வேனேயல்லாமல், உன்னைவிட்டுத் தனித்திரே னென்று உடன் செல்லலும், அவ்வரச வேனமானது, தன்பரிவாரத்துடன் சென்று அரசனை யெதிர்த்துப் போராடி மடிந்தது. அதுகண்ட பெட்டைப்பன்றியும் சமர்புரிந்திறந்தது. இரண்டும் விமானமேறித் தேவர்கள் பூமாரிபொழிய விண்ணுலகடைந்தன.

பின்னர், அவ்வுயிர்துறந்த இரண்டுபன்றிகளும் அங்கு இரண்டு மலைகளாகியதுமுதலிந்நாள்வரையிலும் பன்றிமலையென வழங்கிவருகின்றன. அம்மலைமீது மாதவர்களும், விச்சாதரர்களும் இன்னும் துறந்தார்பலரும் வீடுபேற்றின்பொருட்டு தவஞ்செய்து வருகின்றனர் என்றுமொழிந்துவந்த மலயமுனியாகிய அகத்தியரை நோக்கி, இருடிகணங்கள் அடிகளே! அறிவிலாப்பன்றியுருவாகியமலையின்மேல் அருந்தவர்களெல்லாம்தவஞ்செய்தகாரணம்யாதெனவினவலும், கும்பமுனி சொல்லலுற்றனர். மன்மதன்போலும் அழகுள்ளவடிவினனாகிய விச்சாதரனென்னுமொரு யாழ்வல்லோன் புலத்திய முனிவருடைய தவத்துக்கிடையூறு

விளைக்கத்தக்க காணஞ்செய்யலும், அவர் வெகுண்டு பன்றியாகெனச்சாபமிட்டனர். சாபமேற்ற அவ்விச்சாதரன் பயந்து இதனுக்கொழிவு எப்பொழுதென இரங்கிவேண்டலும், அம்முனிவன் சிறிதுகோபந்தணிந்து, இராஜராஜபாண்டியன் என்போன்போய் உன் வனத்திலுள்ள மிருகங்களையெல்லாங்கொலைத்து உன்னையுமாய்ப்பான். அப்போது, நீ யிவ்வுருவடைக வென்று அனுக்கிரகஞ்செய்தனர். அவ்வாறே யவ்விச்சாதரன் வந்துபிறந்து இறந்து தொல்லையுருவடைந்தனன். அப்புண்ணிய விச்சாதரனுடைய தேகமாய்க்கிடந்த தூய்மையினாலே அம்மலை மீது தவத்தவர்களெல்லாந் தங்கித்தவஞ்செய்கின்றனர். சகல ஆத்மகோடிகட்கும் நாதனாய் விளங்கும் மதுரையெம்பெருமானும் அவ்விடத்து இன்புற்றுறைவார் என்று அகத்தியமுனிவர் விடைதந்தருளினர்.

இதுநிற்க, முன் தாய்தந்தையாகிய பன்றிகளைப் போரிலிழந்த பன்னிரண்டு பன்றிக்குட்டிகளும், எங்கணுமோடித் தேடிப்பார்த்துங் காணாது பசியால் வருந்திச் சொல்லொணாப் பெருந்துயரிலாழ்ந்து வாடுகையில், சொக்கலிங்கப்பெருமான் அங்கயற்கண்ணம்மையோடு விமானமேற்கொண்டு, அக்கானகத்தில் லீலாவிநோதமாய் உலாவிவருகையில், அப்பன்றிக்குட்டிகள் தாயின்றி வருந்தும் பெருந்துய

ரைக்கண்டு சகியாராய், கருணையங்கடலாகிய சிவபெருமான், தாய்ப்பன்றி போல் திருவுருவங்கொண்டு, நேர்வந்தனர். அதுகண்டமாத்திரத்தில், அப்பன்றிக்குட்டிகள் அளவிறந்த சந்தோஷங்கொண்டு, சமீபித்துமேல் விழுந்து தாவிக்குதித்து விளையாடின. தாய்ப்பன்றியாய்வந்த எம்பெருமான் அக்குட்டிகளைத்தழுவியணைத்து மோந்து திருமுலைப்பாலருத்தி, ஆற்றலும், ஞானமும், பெருந்தகையும், நற்குணங்களுமளித்து முகமொன்றுமாத்திரம் பன்றியுருவமாகவும், ஏனைய அங்கம்யாவும் மானுடவடிவமதாக்கி எம்பெருமான் மறைந்தருளினர்.

திருச்சிற்றம்பலம்

---

## பன்றிக்குட்டிகளைமந்திரிகளாக்கிய படலம்.

மதுராபுரியில், கருணாநிதியாகிய சொக்கலிங்கப்பெருமான் திருமுலைப்பால்கொடுத்து மறைந்தபின்னர், அப்பன்றிமுகம்படைத்த பன்னிரண்டுகுமாரரும் பாலசூரியர்களைப்போல் அந்தப்பன்றிமலையின்மேல் சகலசாஸ்திர சம்பன்னுளாய் வீற்றிருந்தனர். அவ்வாறவர்க ளிருக்குநாளில், நம்மிறைவனுகிய சிவபெருமானுடைய திருவருள் எல்லாவுயிர்க்கும்

விளைக்கத்தக்க கானஞ்செய்யலும், அவர் வெ
குண்டு பன்றியாகெனச்சாபமிட்டனர். சாப
மேற்ற அவ்விச்சாதரன் பயந்து இதனுக்கொ
ழிவு எப்பொழுதெனை இரங்கிவேண்டலும், அ
ம்முனிவன் சிறிதுகோபந்தணிந்து, இராஜரா
ஜபாண்டியன் என்போன்போய் உன் வனத்
திலுள்ள மிருகங்களை யெல்லாந்தொலைத்து
உன்னையுமாய்ப்பான். அப்போது, நீயிவ்வுருவ
டைகவென்று அனுக்கிரகஞ்செய்தனர். அவ்
வாறே யவ்விச்சாதரன் வந்துபிறந்து இறந்து
தொல்லையுருவடைந்தனன். அப்புண்ணிய வி
ச்சாதரனுடைய தேகமாய்க்கிடந்த தூய்மை
யினலே அம்மலை மீது தவத்தவர்களெல்லாந்
தங்கித்தவஞ்செய்கின்றனர். சகல ஆத்மகோ
டிகட்கும் நாதனாய் விளங்கும் மதுரையெம்
பெருமானும் அவ்விடத்து இன்புற்றுறைவார்
என்று அகத்தியமுனிவர் விடைதந்தருளினர்.

இதுநிற்க, முன் தாய்தந்தையாகிய பன்றிக
ளைப் போரிலிழந்த பன்னிரண்டு பன்றிக்குட்
டிகளும், எங்கணுமோடித் தேடிப்பார்த்துங்
காணாது பசியால் வருந்திச் சொல்லொணுப்
பெருந்துயரிலாழ்ந்து வாடுகையில், சொக்க
லிங்கப்பெருமான் அங்கயற்கண்ணம்மையோ
டு விமானமேற்கொண்டு, அக்கானகத்தில் லீ
லாவிநோதமாய் உலாவிவருகையில், அப்பன்
றிக்குட்டிகள் தாயின்றி வருந்தும் பெருந்துய

ரைக்கண்டு சகியாராய், கருணையங்கடலாகிய சிவபெருமான், தாய்ப்பன்றி போல் திருவுருவங்கொண்டு, நேர்வந்தனர். அதுகண்டமாத்திரத்தில், அப்பன்றிக்குட்டிகள் அளவிறந்த சந்தோஷங்கொண்டு, சமீபித்துமேல் விழுந்து தாவிக்குதித்து விளையாடின. தாய்ப்பன்றியாய்வந்த எம்பெருமான் அக்குட்டிகளைத்தழுவியணைத்து மோந்து திருமுலைப்பாலருத்தி, ஆற்றலும், ஞானமும், பெருந்தகையும், நற்குணங்களுமளித்து முகமொன்றுமாத்திரம் பன்றியுருவமாகவும், ஏனைய அங்கம்யாவும் மானுடவடிவமதாக்கி எம்பெருமான் மறைந்தருளினர்.

திருச்சிற்றம்பலம்

## பன்றிக்குட்டிகளைமந்திரிகளாக்கிய படலம்.

மதுராபுரியில், கருணாநிதியாகிய சொக்கலிங்கப்பெருமான் திருமுலைப்பால்கொடுத்து மறைந்தபின்னர், அப்பன்றிமுகம்படைத்த பன்னிரண்டுகுமரரும் பாலசூரியர்களைப்போல் அந்தப்பன்றிமலையின்மேல் சகலசாஸ்திரசம்பன்னராய் வீற்றிருந்தனர். அவ்வாறவர்களிருக்குநாளில், நம்மிறைவனாகிய சிவபெருமானுடைய திருவருள் எல்லாவுயிர்க்கும்

பொதுவானதென்னுந் தன்மையை யாவருந் தெளியுமாறு, உலோகநாயகியாகிய உமாதேவியார் தன்மணாளனாகிய சொக்கலிங்கப்பெருமானைநோக்கி, சுவாமீ! மிகக்கொடுமையும், அசேதனத்தன்மையுமுள்ள இப்பன்றிக்குட்டிகளிடத் தருள்சுரந்து திருமுலையருத்தி, விலங்கறிவை யகற்றியகாரணம் யாதெனவினவலும், பெண்மணீ! சகலவேதாகமங்களும் நம்மைச் சர்வஜீவதயாபரனென்று சாற்றுந் தன்மையதால், சேதனம்அசேதனமாகிய விரண்டும் நமக்குவேறல்ல, பொதுவே. ஆகையால், தாயிழந்து பசியால் வருந்தும் பன்றிக்குட்டிகளுக்கு அன்னையாய் முலையூட்டியாவிநல்கினோம். அக்காரணத்தால், அளவிறந்தவாற்றலும், கல்வியும், ஞானமுமெய்தப்பெற்றனர். இனிமேல், பாண்டியனுக் கமைச்சர்களாகி யினிதுவாழ்ந்திருந்து, பந்தபாசங்களொழிந்து, நமதுகணத்தலைவராவார் என்று, எம்பெருமான் பிராட்டியாருக்கு விடைதந்தருளி, அன்றுபாண்டியன் கனவிற்றோன்றி, அரசே! பன்றிமலையின்மேல் வராகமுகத்தராய்ப் பன்னிருகுமரர்கள் அறிவின்மிக்கோராய் வாழ்கின்றனர். அவர்களை நீ மந்திரிகளாகக்கொள்கவென்றுரைத்தருளினார். அதுகேட்டமாத்திரத்தில், பாண்டியன் மிகக்களிப்புடையானாய் கண்விழித்து விடியற்காலத்தில் தன்சொர்ப்பன

நிகழ்ச்சியை மந்திரிகளுக்குணர்த்தி, அவர்களை யிங்கழைத்து வருகவெனக்கட்டளையிடலும், மந்திரிகள்போ யன்னோரைக்கண்டு வேண்ட, அக்குமரர்கள் போய் பாண்டியனை வணங்கினின்றனர். அக்குமரர்களைநோக்கி பாண்டியன் பெருங்களிப்பெய்தி, மந்திரித்தொழில்தந்து, பலவரிசைகணல்கி முன்னுள்ளமந்திரிகளின்புதல்வியரை யவர்க்கு மணம்புரிவித்து நன்குபாராட்டிவந்தனன். அக்குமரர்கள் பாண்டியனுக்குக் கண்ணுங்கவசமுமாய்நடந்து, பலகலைகளிலும் வல்லாராய், நுட்பமதியுடையாராய், பகைவருஞ்சந்தோஷிக்கத்தக்க இன்சொலுடையாராய் பூர்வஜன்மநல்வினைப் பயனால் மந்திரித்தலைமையடைந்தனமென்று சிறிதுமிறுமாப்பின்றி, குற்றேவல்செய்யுஞ் சிறுவர்போலரசனுக்கஞ்சி, அவன்விரும்பியதை விடம்போலத்தாங்கள் வெறுத்து, அழல்போலணுகாமலும், அகலாமலும், நீழல்போலுடன்தொடர்ந்து, பாண்டியன் மனக்கொள்கை தம்மகத்துள்கண்ணாடிநீழல்போல்தோற்ற வறிந்து, அது தருமநெறிப்பட்டதாயின் செய்வர், அன்றேல், உயிர்போயினும் மனத்தாலுஞ் செய்யநினையார். இவ்வாறு அப்பன்னிருகுமரரும், ஈகையும், தருமமும், புகழும், பாண்டியனுக்கு நாடோறும் பெருகச்செய்து, திசைகளெங்கும் வெற்றியுண்டாக்கி, நாகபூஷண

ஞகிய சங்கரனுடைய சிவலோகமடைந்து கணநாதரோடு கலந்தின்புற்று வாழ்ந்திருந்தனர். இராஜ ராஜபாண்டியனும் விண்ணுலகெய்திச் சுகித்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

# கரிக்குருவிக்குபதேசஞ்செய்த படலம்.

மதுராபுரியில், சுகுணபாண்டியன் அரசுபுரிந்து வருநாளில், ஒருவன் பூர்வஜனனத்தில் மிகவும் புண்ணியமேசெய்து, சிறிது பாவஞ்செய்தகாரணத்தால் அசேதனஜெந்துவாகிய கரிக்குருவியாய் வந்துபிறந்து, காகமுதலிய பக்ஷிக்கூட்டங்கள் துன்பஞ்செய்தலால், இரத்தஞ்சோருந் தலையுடையதாய், அப்பறவைகட்கு மிகவுமஞ்சி, ஒருபெரியவனத்திற்சென்று, வழிக்கருகேநிற்கும் ஒரு நீண்ட மரத்தின்மேற்றங்கி, பெருந்துயரடைந்திருக்கையில், விபூதி ருத்திராக்ஷ முதலிய சிவசின்னம்பூண்டவனும், உள்ளும் புறம்புந்தூய்மையுடையவனும், கையிற்குடைதாங்கியவனுமாய் புண்ணியதீர்த்தயாத்திரை செய்துவருமொரு சிவனடியான் அம்மரநிழலின்கணடைந்து, அங்கமர்ந்து, அங்குள்ள சிலரைநோக்கி, மூர்த்திதலதீர்த்தங்களிற் சிறந்தது மதுரையம்

பதியென்று பெரியோர்சாற்றுவர். ஏனையதல
ங்களில் ஒவ்வொன்றே சிறந்து விளங்காநிற்கு
ம். இக்கூடலின்கண்ணே அம்மூன்றுஞ் சிறந்
துநிற்கும். ஆதலாலிதற்கிணையாய் வேறொரு
பதியுமில்லை. இந்தமதுரேசர் தன்னைவணங்கி
த்துதிப்போர்க்கு மிகவெளியராய் அவர்கள்
வேண்டிய வரங்களையெல்லா முடனே யிம்
மையிலேயே யளிப்பர். ஏனையதலத்து மூர்
த்திகள் மறுமையிலன்றி நல்கார். ஆகையினு
லீததிகமென்றுரைத்தனன். அதுகேட்டு, அவ்
விருக்ஷக்கிளையிலிருக்கும் கரிக்குருவி ஞான
மடைந்து, தன்பூர்வஜன்மமும், இப்போது ப
றவையாய்ப்பிறந்ததும், மற்றுமுள்ளனவுந்தெ
ளிந்து, நாமிச்சனனமொழிப்பதற்கு இப்பெரி
யோன் கூறியவுறுதியே யேதுவென்று துணி
வுபூண்டு, அக்கானகம்விட்டுநீங்கி, மதுரையம்
பதியையடைந்து, பொற்றாமரையில் ஸ்நான
ஞ்செய்து, அங்கயற்கண்ணி யம்மைசமேதரா
கிய சோமசுந்தரக்கடவுளைவலஞ்செய்து, அ
ன்பினால் உள்ளத்தின்கண் எம்பெருமானை ய
ருச்சித்துத்தொழுது, இவ்வண்ணம் மூன்றுநா
ள்புரிந்துவருகையில், பிராட்டியார் தமதுநா
யகராகிய சொக்கலிங்கப்பெருமானைநோக்கி,
சுவாமீ! இக்கரிக்குருவி புரியுஞ்செயலென்னை?
இதன்வரவியாது? என்றுவினவலும், எம்பெ
ருமான் அதன்வரலாற்றினை முறையேகூறி,

பக்தி நியமம்பூண்ட அப்பறவைமேல் கருணை நாட்டம்வைத்து, காலனைக்காய்ந்த மிருத்தியுஞ்செயமந்திரத்தை யதற்குபதேசஞ் செய்தருளினார். அம்மந்திரத்தை யுபதேசிக்கப் பெற்றமாத்திரத்தில், தன் சிற்றறிவுநீங்கி, துயரொழிந்து, எம்பெருமானைப் பலவகையாகத் துதிசெய்து, சுவாமீ! அடியேற்கொருகுறையுளது. அஃதென்னையெனின், கொடியபறவைகளெல்லாம் என்னை யூறுசெய்துவருத்துகின்றன, அதனையொழித்தருளல்வேண்டுமென்று பிரார்த்தித்தலும், சிவபெருமான் கருணைகூர்ந்து, நீயப்பறவைகட்கெல்லாம் வலியையாகுகவெனத் திருவாய்மலர்ந்தருளினார். பின்னருமப்பறவைதாழ்ந்து, அப்பெயர் என்மரபுக்கெல்லாம் விளங்கல்வேண்டும், தேவரீரிப்போதுபதேசித்தமந்திரத்தை நாங்களோதித் துன்பத்தை வெல்லல்வேண்டுமென்று அக்கரிக்குருவி குறையிரத்தலும், அங்ஙனமே யாகுகவென்று திருவருள்செய்தனர்.

இவ்வாறு கரிக்குருவியானது, எம்பெருமானால் உபதேசம்பெற்று, தன்னினப்பறவைகளெல்லாம் வலியானென்னும் பெயரடைந்து உலகிற் பிரசித்தியடையச்செய்து, சிவபெருமானுடைய திருவடிநீழலடைந்தது.

திருச்சிற்றம்பலம்.

# நாரைக்குமுத்திகொடுத்தபடலம்.



மதுராபுரியில், சுகுணபாண்டியன் அரசுபுரிந்துவருநாளில், மதுரையம்பதிக்கு தென்பாலுள்ள ஓரூரில், ஒருதாமரைத் தடாகத்தில், வாழுமீன்களை யெல்லாம் பிடித்துத்தின்று கொண்டு, அத்தடாகத்தின் கரையில் ஒரு நாரை உயிர்வாழ்ந்து வந்தது. இவ்வண்ணம் வாழுநாளில், சிறிது காலமழையில்லாமல் போனமையால் அத்தடாகத்தின் ஜலம்வற்றியது. அந்த நாரையானது, அத்தடாகத்தை விட்டு ஒரு கானகம் போய்ச்சேர்ந்தது. அங்கு ஒரு தவசிரேஷ்டர் சில முனிவர் கூட்டத்தோடு வாசமாயிருந்தனர். ஒரு பெரிய நாற் சதுரமுள்ள தடாகமும் சுற்றும் படித்துறைகளோடும் சந்தியா மடத்தோடு மமைவுற்றிருந்தது. அந்த நாரை அத்தடாகக்கரையின்கணிருந்து முனிவர்கள் வந்து அதின் மூழ்கியெழுந்தோறுந் தோள்பின்புறத்தில் தாழும் நீண்டசடையில் மீன்கள் பாய்ந்து பாய்ந்து புரள்வதைப் பார்த்து இம்மீன் கணங்கள் இம்மாதவத்தோர் திருமேனியைத்தீண்ட என்னதவஞ் செய்தனவோ ? நமக்கிம்மீன்களுணவுக்காகாவென்று வெறுத்து, அந்நாரையங்கு வசித்துவந்தது. அம்முனிவர்கள் யாவருமத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தபின்னர், கரையின் கண்வந்து, அங்குள்ள சந்தியாமடத்திற்றங்கி, கூடற்புராணத்தில் சோமசுந்தரப் பெருமான் திருவிளையா

டல்களும், மூர்த்திதலம்தீர்த்தம் இவற்றின் சி
றப்பும், தன்னையடைந்தோர்க்கெம்பெருமான்
எளிதி லருளும்வண்ணமு மெடுத்தோதக்கே
ட்டு, அங்குவதியும் நாரையானது, தன்னறியா
மை நீங்கி மெய்ஞ்ஞானமடைந்து, சிவபெரு
மானுடைய திருவடிகளிற்பூண்ட அன்பானது
வாவென்றிழுத்துச்செல்ல, மதுரையம்பதிய
டைந்து பொற்றாமரைத்தீர்த்தத்தில் மூழ்கி,
இந்திரவிமானத்திலெழுந்தருளியிருக்கும் எம்
பெருமானைவலம்வந்து திருவருளைக்கங்கூடு
தலால் தரிசித்து, சந்நிதானத்தில்வந்து பா
மசிவனைத்தியானித்து, இவ்வண்ணம் பதினை
ந்து நாள்செய்தபின்னர், பொற்றாமரையில்ஸ்
நானஞ்செய்யும்பொருட்டுச் சமீபித்தலும், ப
சியால் வாடி அதிலுள்ள மீன்களைப்பற்றியுண்
போமென்று சிறிதுளத்தி லெண்ணி, எம்பெ
ருமான் திருவருள்வலத்தால் பின்னர் அறிவு
விளங்கலும், அந்தோ! இப்புண்ணிய தீர்த்தத்
திலுள்ள மீன்களைக்கவர்ந்துண்ணத் தீவினை
யேற்காசை யெழுந்ததே. எனக்கெப்போதிப்
பிறவித் துயரொழிவது என்று மிகவுஞ் சஞ்ச
லமெய்தி எம்பெருமான் ஸ்ரீபாதங்களில் சிந்
தையைவைத்திருக்கையில், கருணபயோததியாகி
ய சிவபெருமான், அந்நாரைமனத்தில் நினைத்
தவடிவாய்த்தோன்றி உனக்கென்னவரம் வே
ண்டுமென்று கேட்டலும், நாரைபணிந்தெழு

ந்து சுவாமி! அடியேன் இப்பிறவியை யொழித்து நின்னன்பர்கள் வாழுஞ் சிவலோகத்தில்வந்து வசித்தல் வேண்டும், ஈதன்றியும், என்மரபின்பறவைகளும் ஏனையபுட்களும் இப்புனிததீர்த்தத்திலுள்ள மீன்களையருந்தினால் பெரும்பாவம்வந்து சம்பவிக்குமாகையால், என்றும் இத்தடாகத்தில் மீனில்லாதிருக்கவரம்நல்கியருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தலும், எம்பெருமான் தந்தருளினார். நாரையானது தேவதுந்துபிமுழங்க விமானமேற்கொண்டு சதுர்ப்புஜங்களும், திரிநேத்திரங்களும் பொலிய தேவர்கள் பூமாரிபொழியச் சென்று சிவலோகஞ் சேர்ந்தது.

அன்றுமுத லின்றளவும், அப்பொற்றாமரைத்தீர்த்தம் மீன்கணங்களேயன்றி, ஏனையஜெந்துக்களும் இலதாய் விளங்குகின்றது. சுகுணபாண்டியனும் இவ்வுலகவாழ்வைத்துறந்து சொர்க்கமடைந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவாலவாயானபடலம்.

மதுராபுரியில், கீர்த்திபூஷண பாண்டியன் செங்கோல் செலுத்திவருநாளில், சப்தசாகரங்களுங் கரைகடந்தாரவாரித்துப்பொங்கி, கீழ்மேலுலகங்களும், அஷ்டகஜங்களும், அஷ்ட

குலபருவதங்களும், சக்ரவாளகிரியும் நிலைத டுமாறும்படி வெள்ளங்கொண்டு எங்குமூடிய போது, எல்லாவுலகங்களும்; அவற்றிலுள்ள சராசரங்களும் யாவுமழிவுற்றன. சொக்கலிங் கப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இந்திர விமானமும், அங்கயற்கண்ணி யம்மையார் திருக்கோயிலும், பொற்றாமரையும், எம்பெரு மான் திருவிளையாட்டால் வந்த இடபமலையும், யானைமலையும், நாகமலையும், பசுமலையும், வரா கமலைமுதலியவை மழியாதிருந்தன. பின்னர், பிரளயஜலம் வறந்தவுடன்,சிவபெருமான் முன் போல் சமஸ்தவுலகங்களையும், புள், விலங்கு முதலியவற்றையும் நன்று, சேர சோழ பாண் டியர்களாகிய மூவேந்தர்களையும் படைத்தன ன். அம் மூவருள் பாண்டியவம்சோத்பவனுய் வந்தவங்கிய சேகரபாண்டியன் சோமசுந்தரக் கடவுள் ஆலயத்தைச்சூழச் சிறிதிருந்த நகரத் தை யரசாண்டுவருகையில், மனுநீதி முறைப் படி செங்கோல் செலுத்தி, குடிகளுக்குத் து யரகற்றி, பல்வளங்களு மோங்கப்பரிபாலித்து வந்தமையால், ஜனங்கள் பெருகி வசித்தற்கு நகரிடங்குறைவாயிருத்தல் கண்டு, பாண்டி யன் சொக்கலிங்கப் பெருமான் சந்நிதியடை ந்து வணங்கி, எப்பெருமானே! உன்னருள் வலத்தால் இப்பூமியாண்டு வருகின்ற வடியே னுக்கு, இப்போதோர் குறையுண்டாயிற்று,

அஃதென்னையெனின், இத்தனை ஜனங்களும் இருந்துவாழ்தற்கு நகரெல்லையறிகிலேன். இதனைத் தேவரீர் தமியேனுக்குக்காட்டி யருளல்வேண்டுமென்று குறையிரந்தனன். கிருபாநிதியாகிய சிவபெருமான் ஒருசித்தராய்த்திருவேடங்கொண்டு, அரைஞாண், கோவணம், முப்புரிநூல், குண்டலம், பாதச்சிலம்பு, கைக்கடகமுதலியயாவுஞ் சர்ப்பங்களையே தரித்துவந்து, மண்டபமருங்கு நின்று, கையில்கங்கணமாகப்பூண்டுள்ள நாகத்தைநோக்கி, நீயிப்பாண்டியனுக்கு நகரெல்லையளந்து காட்டுகவென்று கட்டளையிட்டருளலும், அந்நாகம் பணிந்து, எம்பெருமானே, இந்நகரம் அடியேன்பெயரினால் விளங்குமாறநுக்கிரகஞ் செய்யவேண்டுமெனப் பிரார்த்தித்தலும், கருணையங்கடலாகிய சிவபெருமானு மதற்கிசைந்தவ்வாறே யாகுகவெனப்பணித் தருளினார். பின்னர், அந்நாகம் விரைந்து கீழ்த்திசையிற்சென்று வாலை நீட்டி, நகரபிரதக்ஷணமாக வுடலைவளைத்து வாலைவாய்வைத்துப் பாண்டியனுக் கெல்லைகாட்டி மீண்டுசிவபெருமான் கரத்தில்வந்திருந்தது. சொக்கலிங்கப் பெருமானுங் கோயிலுக்கெழுந்தருளினார். பாண்டியன் நாகம்வளைத்துக்காட்டிய வண்ணம்மதிலெடுத்து, தெற்கே திருப்பரங்குன்றமும், வடக்கே யிடபக்குன்றமும், மேற்கேதிருவேடக

நகரமும், கிழக்கே பூவணநகரமும் நான்கு வாயில்களுக்கு எல்லையாக வகுத்தனன். அம்மதிலுக்கு ஆலவாய்மதிலென்றும், அந்நகருக்கு ஆலவாய்நகரென்றும் பேர்விளங்கின. பாண்டியன் பின்னர் மண்டபம்,கோபுரம், வீதி, பூஞ்சோலை முதலியனவும் புதியனவாகக்கண்டு, சொக்கலிங்கப்பெருமானுக்குத் திருவாபரணங்களும் வேறுவேறமைத்து,பலவகைப்பெருங்குடிகளைநிரப்பி, குபேரன், இந்திரன் இவர்கள் பதிகளினுஞ் சிறக்கும்படி பலவளங்கள் பெருக்கி யரசாண்டு வாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரப்பேரம்பெய்தபடலம்.

மதுராபுரியில், மீனத்துவசனாகிய வங்கியசேகரபாண்டியன் செங்கோல்செலுத்திவருநாளில்,விக்கிரமசோழனெனவன்பாண்டியனோடமர்புரியக்கருதி, நரபதி துரகபதி முதலாகிய வடபுலத்தரசர் சேனைகள்புடைசூழ்ந்துவரத் தேர்மேற்கொண்டு காவிரிக்கருகிலுள்ளநகரில் தங்கினனாக, அவன் சேனாவீரர்கள் போய்ப் பாண்டியனுடைய பசுநிரைகளைக்கவர்ந்தும், மலர்த்தடாகங்களையு மேரிகளையுமுடைத்தும்,நகர்க்குவரும் பலபண்டங்களையும் வழிமறித்துக் கவர்ந்தும் போர்க்காரம்பஞ்செய்தனர்.

இதனைப் பாண்டியனறிந்து, இனிச்செய்வதி யாது, சோழன்படையோ வளவிறந்தது. அவனோடெதிர்த்தமராடிச் செயித்தலெனக்கரிதாம். ஆகலின், இக்குறையைச் சொக்கலிங்கப்பெருமானிடத்திற்கூறி யவனை வெல்லற்கு வரம்பெறுவேனென்று எம்பெருமான் சந்நிதியடைந்து, திருவடிகளில் வணங்கி, எம்பெருமானே! சோழன் என்னோடு போர் செய்ய வடபுலமன்னர்களோடு வந்திருக்கின்றனன். எனக்கோ அவனைப்பொருதற்குத் தக்கசேனையில்லை, உம்மையே சரணாகவடைந்தேன். தேவரீரன்றி வேறொருவருந் துணைகாணேனென்று குறையிரந்து நிற்றலும், கருணாநிதியாகிய எம்பெருமான், அன்பனே! நீ அஞ்சல்வேண்டாம். முன்னர், நீசென் றச்சோழனோடமர்புரிக, பின்பு, நாமுனக்குதவித்துணையாய்வந்துவெற்றிநின்பக்கலுண்டாம்படிச் செய்கின்றோம் என்று, அசரீரியாய் மொழிந்தருளலும், பாண்டியன்கேட்டுச் சிந்தைமகிழ்ந்து, சிரமேற்கரங்களைக் கூப்பித்தொழுது புறப்படுமுன், ஒரு ஒற்றன்வந்து, வேந்தே! விக்கிரம சோழனுடையசேனைகள் இடபமலைக்கருகில் வந்திருக்கின்றதென மொழிந்தனன். உடனே பாண்டியன் பலவாத்தியங்கள் கோஷிக்கத் தன் சேனாசமூகத்துடனே தேர்மேற்கொண்டு திருவாலவாய்மதிலின்புறப்பே

சமுத்திரம்போல் வளைந்துகொண் டிருக்கும் சோழனுடைய சேனைக் கெதிர்சென்று, இருதிறத்தவருங்கலந்து போர்புரிகையில், பாண்டியன்சேனை யிளைத்ததுகண்டு, வாகைதன்னுடையதென்று சோழன் சங்கமெடுத்து முழங்கினான். அப்போது,சிவபெருமான் தாம் சொல்லியபடியே ஒரு வேடாசனாய், துயரின் மூழ்கியிருக்கும் பாண்டியனுடையசேனைக்காவலனாகவந்து, வில்வளைத்து "சுந்தரேசன்" என்றுதீட்டியுள்ள கூரம்புகளைத் தொடுத்து, வெற்றியடைந்தோமென்று சங்கநாதஞ்செய்து நின்ற சோழன்படைமீது செலுத்தினர். அவ்வாளியொன்று பதினாயிரம் சேனாவீரர்களுயிரை யுண்ணநோக்கிச் சோழனதிசயித்து, இவ்வோரம்புக்கு இத்துணைவலியேதென வாசங்கித்து, அவ்வம்பைக் கொண்டுவரக்கட்டளையிட்டு அதனைப்பார்த்து, "சுந்தரேசன்" எனவதன்மேல் வரைந்திருந்தலால், இதுபாண்டியனுக்குச் சொக்கலிங்கப்பெருமான் துணைபுரியுஞ் செயலாமென்றஞ்சிப் புறங்கொடுத்தோடுஞ் சோழனை யவன்படைத்துணையாகவந்த உத்தரதேசத் தரசர்களும், அருக்கர் எட்டியர்களு மற்றுமுள்ளோருந்தடுத்து வைது, நீபோர்க்குடைந்துபோனா லுன்னாண்மையுமானமு மென்னாகும் நீசெல்வதைநிறுத்துக வென்றழைத்துக் கொண்டுவந்து பாண்டியன்

சேனையைமீண்டு மெதிர்த்து அம்புமாரி பொழிந்து நின்றனர்.

வேடுவவேடந்தாங்கிநின்ற சொக்கலிங்கப் பெருமான், தன்சிலையை வளைத்து பத்துநூறு ஆயிரமாக வாளிகளைத் தொடுத்தெய்து எண்ணிறந்த வீரர்களைவதைத்துப் பிணமலை யாக்கியதைச் சோழன்கண்டு வெட்கி யோட்டமெடுத்தனன். கையில் வில்லேந்திநின்ற வேடர்பெருமான் பாண்டியன் முகத்தைநோக்கி, சிறிது புன்முறுவல்செய்து மறைந்துபோயினர். பின்னர், பாண்டியன் ஜயசங்கந்தொனித்து, யானைமேற்கொண்டு சர்வாடம்பரத்தோடு மதுரையடைந்து, வேடர் கோலமாய்வந்து விற்சேவகஞ்செய்து, தனக்கு வெற்றிதந்த எம்பெருமானுக்குச் சிறந்த பூஜைகள் செய்து, பலபூஷணங்கள் செய்தணிந்து, வில்லும் பேர்தீட்டிய வாளியையுஞ் சுவாமிக்குச் சாத்தி, பலதருமங்களையும் பெருக்கியுலகாண்டுவாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## சங்கப்பலகைதந்தபடலம்.

---

மதுராபுரியில், வங்கியசேகர பாண்டியன் செங்கோல் செலுத்திவருநாளில், பூர்வம் கங்

காகதிருப்பெற்ற காசி க்ஷேத்திரத்தில், கம
லாசனனாகிய பிரமதேவன் பத்து அஸ்வமே
தங்கள் செய்து, அவப்ருதஸ்நானம்போது,
தீர்த்தஸ்நானஞ்செய்யக்கருதி, சரஸ்வதி, சா
வித்திரி, காயத்திரி யென்னு மனைக்கிழத்திய
ரோடும் கங்கையைநோக்கிச் செல்லுகையில்,
கலைமடந்தை யானவள் வித்யாதரமாதொரு
த்தி பாடுங்கானத்தில் மனஞ்செலுத்தியிருக்க,
மலரவன் சங்கற்பமுடைந்து, நாமகள் வரு
கை தாழ்த்தமையால், சாவித்திரி, காயத்திரி
யென்னும் மடவாரிருவரோடுந் தீர்த்தஸ்நா
னஞ்செய்து கரையேறுகையில், சரஸ்வதிவ
ந்து, தன்றுணையாகிய சதுமுகனைநோக்கி, எ
ன்னையன்றி நீ ஸ்நானஞ்செய்ததெவா றென்னெ
ன வெகுண்டு வினவலும், பிரமன் நாமகளை
நோக்கி, பெண்ணே! குற்றம் நின்மேலதாயி
ருக்க நீயென்மீது கோபங்கொள்வது தகுதி
யன்று. நீயிவணிருந்த விக்ருதியினை பலமனிதர்
களாயுலகிற் பிறந்தொழிக்கடவை யென்று
சாபமிடலும், வாணியஞ்சி, மனத்துயரெய்தி,
தன்கேள்வனைநோக்கி, நின்றுயிர்த்துணையா
கிய யான், மானிடயோனியிற்பிறந்து மயங்க
வோவென்றிரங்கி வேண்டலும், பிரமன் மன
மிரங்கி பெண்ணே! நின்மெய்யுருவமாகிய மு
தலெழுத்து ஐம்பத்தொன்றில், அகாரமுதல்
ஹகார மீறாயுள்ள நாற்பத்தெட் டக்கரங்

களும் நாற்பத்தெண்புலவர்களாகி உலகிலவத ரித்திடுக. அவ்வக்கரங்களிலெல்லாமேறி நி ன்று அவ்வவற்றின் தன்மையெய்தி, வெவ் வேறியக்கந்தோன்ற நடத்தும் அகாரத்திற்கு முதன்மையாயொழுகும் நாதர் மதுரை யெம் பெருமானுணையால், அவர் தாமுமொருபுலவ ராகத்திருவுருக்கொண்டு, சங்கப்பலகையிலே றி, நாற்பத்தொன்பதாவது புலவராயிருந்து, அப்புலவர்களுள்ளேநின்று அறிவுவிளக்கிப் பு லமை காத்தருள்வரென்று பிரமன்கூறினன். அவ்வாறே நாற்பத்தெட்டக்கரங்களும் மனித ர்களாயுதித்து, சகலசாஸ்திரங்களு முணர்ந்து கீர்வாணமும் ஏனையபதினெண் பாஷைகளு மாய்ந்து, திராவிடத்தில் தலைமைப்புலமை ய டைந்து, சிவசாதனம் பூண்டு, சொன்மாலை யாலும் மலர்மாலையாலுஞ் சிவார்ச்சனைசெய் யுமெய்யன்பு பூண்டவர்களாய், பலதேயத்து ஞ்சென்று தம்புலமைத் திறத்தால் வெற்றிபு னைந்து, மதுரையம் பதியை நோக்கிவருகையில், சொக்கலிங்கப் பெருமான் ஒருபுலவர் பெரு மானாய்வேடம் பூண்டுவந்து, அவரைநோக்கி, நீவிர்யாவர்? எங்கிருந்து வருகின்றீ ரெனவின வலும், யாங்கள்புலவோர். பாண்டிநாட்டுக்கு வருகின்றோ மென்று கூறலும், ஆயின் நீவிர் நமது சொக்கலிங்கப்பெருமான் திருவடியிறை ஞ்சவருதல் வேண்டுமென வழைத்துக் கொ

ண்டுபோய், மதுரை யெம்பெருமானைப் பணி
த்து மறைந்தனர்.

எம்பெருமான் மறைந்தபின்னர், புலவர்
கள் நாற்பத்தெண்மரும் விம்மிதமடைந்து,
இந்திர விமானத்தி லெழுந்தருளி யிருக்கும்
சொக்கலிங்கப் பெருமானை வெவ்வேறு செய்
யுளால் தோத்திரஞ்செய்து, திருவடியிற்பணி
ந்து, கோயிலினின்றுந் திரும்பிப்போய்ப் பாண்
டியனைக்கண்டனர். பாண்டியனவர்களதுகல்
வி கேள்விகளை நோக்கி, இவர்கள் சான்றோ
ரெனவுளத்தில் மதித்தவனாய், தனக்குள் ளு
வகைபூத்து, சொக்கலிங்கப் பெருமான் எழு
ந்தருளியிருக்கும் ஆலயத்துக்கு வடமேற் பா
ரிசத்திலோர் சங்கமண்டப முண்டாக்கி யவர்
கட்கு வேண்டிய சிறப்புகளளித்து, அங்கமர்ந்
திருக்கும்படி வைத்தனன். முன்பாண்டிய
னிடத்திருந்த புலவர்களதுகண் டுளம்புழுங்கி
சங்கப்பலகையை யெதிர்த்து வாதிட்டு முன்னு
ள்ள புலமையுமிழந்து, வெட்கித் துயரடை
ந்தோடினர். பின்னர், மறுதேயத்துப் புலவர்
களும் வந்துவந்து எப்போது மிடைவிடாமல்
வாதித்துத் தோல்வியுற்றுப் போய்க்கொண்டி
ருக்கையில், சங்கப்புலவர்கள் நித்தம் வாத
த்தினா லிளைப்புற்றமனத்தினராய்ச் சொக்கலி
ங்கப் பெருமான் சந்நிதியடைந்து வணங்கி, எ
ம்பெருமானே! பலதேயத்துப் புலவர்களும்

வந்தெப்போது மெம்முடன் வாதஞ்செய்து வருத்துகின்றாராதலால், அவ்வவர் புலமையை அளவிட்டறியத்தக்க சங்கப்பலகையொன்றை எங்கட்களித்தல்வேண்டுமெனக்குறையிரந்து நிற்றலும், கிருபாநிதியாகிய சிவபெருமான் ஒரு புலவராய் வேடம்பூண்டு பலகையுடன்தோன்றி, அந்தப் புலவரைநோக்கி, இப்பலகை சதுரமாயிரண்டுசாணளவுடையது. மிக்கபரிசுத்தமுடைய மந்திரவலியுள்ளது. புலமைமிக்க நும்மை யொத்தோர்க்கெல்லாமுழம்வளர்ந்து இருப்பிடந்தரும். இதுவே புலமைக்களவுகோலாயிருக்குமென்றுகூறி யளித்தருளினர். புலவர்களதனைப் பெற்றுக்கொண்டு எம்பெருமான்கோயிலை வலம்வந்து, சங்கத்தையடைந்து, அந்தப்பலகைக்குச் சோடசோபசாரங்கள் செய்து பூஜித்துவணங்கி, நக்கீரன், கபிலன், பாணன்முதலிய புலவர்கள் நாற்பத்தெண்மரு முறையேயேறி யொன்றுகூடியிருக்க, அவர்கட்கெல்லா மிடங்கொடுத்திருந்தது. அப்புலவர்களெல்லாமதன்கணமர்ந்திருந்து பலநூல்களாய்ந்து தம்பாண்டித்தியவிர்த்திசெய்து பற்பலநூல்களியற்றத் தொடங்கினர். அவ்வாறவர்கள் செய்தநூல்களில் சொல்வளம், பொருள்வளம், செய்யுட்குறிப்பு முதலியயாவு மொத்துப் பேதந்தோன்றா திருந்தமையால், கலக்கங் கொண்டிருந்த

னார். அப்போது, சொக்கலிங்கப் பெருமான் ஒருநாவலராயவர்கள் முன்றோன்றியவர்களை மயக்கிவருந்துஞ் செய்யுட்பொருள்களைக் கொண்டுவரும்படி பணித்து, பாடல் வகைதெரிந்து அவ்வவர் செய்யுளையெடுத்து நல்கினார். சங்கப்புலவர்கள் களிகூர்ந்து நீரெம்மோடொரு புலவரா யமர்ந்திருத்தல் வேண்டுமென்று பலகையின்மேலேற்றலும், நடுநாயக மணியாய் நாற்பத்தொன்பதாவது புலவரா யிருந்தனர். அப்புலவர்கள் யாவரும், பின்னர், பலவகைத் தமிழ்ப் பிரபந்தங்களைப்பாடி வாழுநாளில், வங்கியசேகர பாண்டியன் வங்கியசூடாமணி பாண்டியனுக்கு முடிபுனைந்து, உலகவாழ்வை வெறுத்துச் சிவபெருமான் றிருவடி நீழலடைந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## தருமிக்குப் பொற்கிழியளித்தபடலம்.

மதுராபுரியில், வங்கியசூடாமணிபாண்டியன் செங்கோல் செலுத்திவருநாளில், சொக்கலிங்கப் பெருமானுக்கணியு மலர்களைத்தரும் பலவகைமரங்கள்சூழ்ந்த நந்தவனம் வைத்து, எம்பெருமானுக்கு மாலைகள்தொடுத்துச் சாத்தித்தரிசித்து வருவோன், சுவாமிக்குச் சண்பகமாலைபுனைந்து, மகிழ்ந்து, தானுஞ்சண்பக

பாண்டிய னென்னும் பேர்பெற்று, சுவாமிக்குத் திருத்தொண்டுபுரிந்து வந்தனன். இவ்வாறுவாழுநாளில், வேனிற்காலம் வருதலும், அதனைச்சகியாராய் மதுராநகரத்துள்ளார்யாவருங்குளிர்ந்த பூஞ்சோலையடைந்து, அங்கு பலவாறுவிளையாடிக்கொண்டு இன்புற்றிருந்தனர். பாண்டியனும், தன்கற்பிற்சிறந்த பத்தினியோடும் அந்தநந்தவனத்தையடைந்து, அதனிடையிலமைத்துள்ள சந்திரகாந்தச்சலவைக்கல் மண்டபத்தில் வேடைக்கோடை தணித்துக்கொள்ளும்பொருட்டு, வேறாகத்தனித்திருந்தனன். அப்போது, அதிசயமான ஒருதிவ்வியபரிமளம்வீசலும், அதனையாக்கிராணித்து, ஈதுமிக்கநல்லவாசனையாயிருக்கின்றது. இஃது தென்றல்காற்று பூஞ்சோலையினின்றும் கவர்ந்துவந்தமணமன்று, காற்றுக்கும் இயற்கையில் மணமில்லை, இது யாதின்மணமோவென்றெண்ணிக்கொண்டே தன்மனைவியைத்திரும்பிநோக்க, அஃதவள் கூந்தல்மணமாயிருக்கக்கண்டு அதிசயங்கொண்டு; இம்மணம் கூந்தலுக்கியற்கையோ, அல்லது செயற்கையோ வென்று சங்கையுற்றவனாய், அரண்மனையடைந்து, என் மனோசங்கையுணர்ந்து பாடல்செய்வோர்க்கு இவ்வாயிரம் பொன்னுங் கொடுக்கப்படுமென்று ஏவலாளரிடந்தாலும், அவர்கள், அப்பொற்கிழியைக் கொண்டுபோய்ச் சங்கப்புல

வர்கள்முன்கட்டினர். பின்னர், சங்கத்தார் யாவரும் தம்முளாராய்ந்து பாண்டியன் கருத்துக்கொவ்வாத பொருள்கூறிப் பங்கமடைந்து வருத்தமுற்றனர். அப்போது, எம்பெருமான் திருவடிகளில் மெய்யன்புபூண்ட பிரமசாரியாகிய தருமியென்னும் ஆதிசைவவேதியன், சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து சுவாமீ, தந்தைதாயில்லாத்தனியனாகிய அடியேன் மணஞ்செய்துகொள்ள விருப்புற்றிருக்கின்றனன். என்மனமோ வியாகூலத்தை யொழித்து, திருவருள் புரியவிதுவே நல்ல தருணம், யாவையுமுணர்ந்த தேவரீருக்கு அடியேன் சொல்வதுயாதுளது. பாண்டியன் உள்ளக்கருத்தையுணர்ந்து, ஓர்கவிபாடித்தந்தருளல் வேண்டுமென்று குறையிரத்தலும், இருபாதியாகிய சிவபெருமான் "கொங்குதேர்வாழ்க்கை" என்னு முதலுடையதிருப்பாசுரமெழுதிக் கொடுத்தனர். தருமியென்னும்பிராமணனதுபெற்றுக்கொண்டு, சங்கத்தாரிடஞ்சென்று, அவர்கள் கையிற்றரலும், யாவரும் வாசித்துச் சொல்வளம்பொருள்வளநோக்கிநன்றெனவுளமகிழ்ந்து, பாண்டியனிடஞ்சென்றங்கு அக்கவிவிளம்பலும், அஃது தன்னுளக்கருத்துக் கொத்திருந்தமையால் உவகைகொண்டு, சிரமசைத்து, பொற்கிழிதரும்படி கட்டளையிட்டனன். பாண்டியனுஞ்ஞை

யின்படிபோய்த் தருமியென்னும் வேதியன், பொற்கிழியறுக்குஞ்சமையத்தில், நற்கீரன்வந்துவிலக்கி இக்கவி குற்றமுள்ளதெனக்கூறலும், தருமிகேட்டு, மனம்மிகவும்வருந்தி யப்பாடலைக்கொண்டுபோ யெம்பெருமான் சந்நிதானத்தில் வைத்து, சுவாமீ! கதியிலாதவெனக்கு இவ்வழுவுபாடலை நல்கினை இதுநன்று! நன்று! நான்பெற்றபொருளை யிழந்தேனென்று நான்வருந்தவில்லை. யாவருக்கு மேலோனாகிய நீபாடியகவிக்குச் சிற்றறிவுடைய புலவர்குற்றங் கூறுவாராஞல், யாவருன்னை மதிப்பார்கள். இவ்விகழ்ச்சி நினக்கேயன்றி யடியேற்கி யாதுமில்லை யென்றிவ்வாறு வருந்திக்கூறலும், சொக்கலிங்கப்பெருமான் ஒருபுலவராய்த்தோன்றி, சங்கத்தாரிருக்கும் சபையையடைந்துநின்று, அங்குள்ளவரைநோக்கி, நம்முடைய கவிக்குக்குற்றங் கூறியவர்யாவரென்றுவினவினர். அப்போது, நற்கீரன் அஞ்சாது நானே கூறினே னென்று முன்வந்துபுகன்றனன். எம்பெருமான் குற்றம் யாதெனக்கேட்டலும், நற்கீரன் சொற்குற்ற மின்று பொருட்குற்றமுளது, அஃதென்னெனின், மலர்ச்சேர்க்கையாலன்றிக் கூந்தலுக்கியற்கையில் வாசனையில்லையெனமொழிதலும், சொக்கலிங்கப்பெருமான், பதுமினிமாதர் குழலோவென்ன, அதுவுஞ்செயற்கையேயென்றனன், தெய்வமங்கையர்

கூந்தலோவென்ன, அதுவுங் கற்பகமலரின்சேர்க்கையாலென்று கூறலும், எம்பெருமான் நற்கீரனைநோக்கிநீவழிபட்டேத்துகின்ற காளத்திநாதருடைய தேவியாராகிய ஞானப்பூங்கோதையாருடைய கூந்தலோவென்ன? அதுவுமத்தகையதே யென்று முழுவதுஞ்சாதித்தனன். பின்னர், சொக்கலிங்கப்பெருமான் நெற்றிக்கண்ணைச்சிறிது திறந்துகாட்டலும், அந்தச்சுவாலையால் வெதுப்பப்பட்டு வருந்துவோன் நீ தேவேந்திரனைப்போல் உடலமெல்லாங்கண்ணுறினும், நீபாடியபாடலில் குற்றங்குற்றமேயெனச்சாதித்து, எம்பெருமான் நெற்றிக்கண்ணெருப்பினால் தகிக்கப்பட்டு, அந்தவெம்மையைச் சகிக்காதவனாய்ப் பொற்றாமரைத்தடாகத்தில் விழுந்தனன். சொக்கலிங்கப்பெருமானுமறைந்தருளினார்.

திருச்சிற்றம்பலம்.

---

## கீரனைக்கரையேற்றியபடலம்.

மதுராபுரியில், சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணினின்று முண்டான தீயினால் தகிக்கப்பட்டுச் சகிக்கலாற்றாதவனாய், நற்கீரன் பொற்றாமரையில் வீழ்ந்துவருந்தி நிற்கையில், சூழ்ந்திருந்த சங்கப்புலவர்கள் கண்டுளந்தளர்ந்து, சொற்பொருள்வடிவாயுள்ள பரமேஸ்வ

ரனுடன் வாதிட்டுவந்த விப்பிழை யெவ்வா
ருெழியு மெனக்கருதி, கைலாயமலையைப்பெ
யர்த்தவனுகிய இராவணன் தன்கையில்வீணை
யேந்தியின்னிசைபாட வருள்சுரந்து, அவன்
செய்தபிழை பொருத்ததுமன்றித் தேரும்வா
ளுங்கொடுத்தருளினுராதலால், ஒருவராலுந்
தீர்த்தற்கரிதாயவிப்பிழை அம்மஹாதேவரே
திருவுளந் திரும்பினுலன்றி வேறுவகையா
லொழியாதென்று துணிவுகொண்டு, புலவர்
கள் யாவரும் எம்பெருமான் சந்நிதியடைந்து,
பலவாருகத்துதித்து வணங்கினுர்கள். அப்
போது, கருணுநிதியாகிய சொக்கலிங்கப்பெ
ருமான், தேவியாரோடும் எழுந்தருளிவந்து
பொற்ருமரைத்தீர்த்தத்துக்கருகில் புலவர்கூ
ட்டத்துள்நின்று,முன் அனற்கண்ணுல் நோக்
கியவரிப்போ தருட்கண்ணுல்நோக்க, தடாக
த்தில் மூழ்கியிருந்தநற்கீரன், பொறிப்புலன்க
ரணங்களெல்லாம் எம்பெருமான்வயப்பட்டு,
அருட்கடலில்மூழ்கி, அன்புருவாய்நின்று, ஞா
னப்பூங்கோதையம்மையார் கூந்தலுக்குத்தீ
ங்கு சொன்னமையால், அப்பிழைநீங்கக் கா
ளத்திகைலையென்று வெண்பாவந்தாதிபாட,எ
ம்பெருமான் திருச்செவியேற்று மகிழ்ந்து, ந
ற்கீரன் கையைப்பற்றியருளினுர். அவ்வாறு
கைதந்து கரையேற்றிய கருணையங்கடலாகிய
சிவபெருமானை வணங்கி, உமாதேவியாரை

யும் பணிந்து,முன் தீமை நன்மை புரிந்தோர்
க்குநிக்கிரஹம் அநுக்கிரஹம் செய்தமைபொ
ருளாகச் செய்யுளில் வைத்துப்பாடி, அடியே
ன் மிசைபாடச்செய்த தீங்குக்கென்னையுந் த
ண்டித்து நீயேயென்பாடிய மாலைகேட்டு என்
னையடிமைகொண்டருளிய மலைமகளுதனே
யுனக்கு நமஸ்காரம், தேவியேயுனக்கு நமஸ்
காரம், பிழைசெய்து கெட்ட வெளியேற்கரு
ள் புரிந்தருளு மென்று கோபப்பிரசாத மென்
னும் பனுவலால், பரமனையும் பராசத்தியை
யும் முறையே போற்றி. பின்னர், எம்பெரு
மான் மீது, பெருந்தேவபாணி, எழுகூற்றிருக்
கை யென்னும் பிரபந்தங்கள் பாடிப்பணிந்த
னன். மற்றுமுள்ள பாவலர்களுந் தனித்தனி
துதித்து வணங்கினார். எம்பெருமான், நற்
ரனுக்கருள்புரிந்து, நீ முன்போல் புலவர்கூ
டத்துள் வாழ்கவெனக் கடைக்கணித்து, தி
ருவுருமறைந்தனர். பின்னர், கீரனும் புலவர்
களும் சங்கமண்டபத்தில் கட்டியிருந்த பொ
ற்கிழியை யறுத்து, தருமியென்னுமந்தணனு
க்குக் கொடுத்துக் கல்விச்செல்வராய் வாழ்ந்
திருந்தனர். சண்பகபாண்டியன் சொக்கலிங்
கப்பெருமானையும், அங்கயற்கண்ணம்மையா
ரையும் பணிந்து, பலதிருப்பணிகள் நடத்தி
யரசுபுரிந்துவாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

# கீரனுக்கிலக்கணமுபதேசித்த படலம்.

மதுராபுரியில், சண்பகபாண்டியன் செங்கோலோச்சிவருநாளில், முன்பு சொக்கலிங்கப்பெருமான் ஆஞ்ஞையினால் புலவர் கூட்டத்திற் சேர்ந்துவாழுங்கீரனானவன், தன்மனக்கோட்டந்தீர்ந்து, மதுரேசனுடைய பாதாரவிந்தங்களி லன்புபூண்ட மனத்தனாய், நாம் முன்சிவபெருமானுடைய நுதல்விழித்தீயினால் தகிக்கப்பட்டபோது, அவ்வெப்பத்தை யொழித்து நம்மைக்காத் தருளியது இப்பொற்றாமரைத் தீர்த்தமாகையால், எப்போது மிதுவேநம்மைக்காத்தருளுமென்று உறுதிகொண்டு, முப்போது மத்தீர்த்தத்தின் மூழ்கி, சொக்கலிங்கப்பெருமானையும், அங்கயற்கண்ணம்மையாரையும் நியமமாய் வழிபாடு செய்துவருகையில், எம்பெருமான் திருவுளமகிழ்ந்து, இவனுக்கிலக்கண மின்னமதெள்ளி தின் விளங்கிலதாகையால், நல்லசொல், வழூச்சொல், என்பதறிந்திலன். இவனுக்குயாரைக்கொண்டு போதிப்போமென்று முக்கணெம்பெருமான் யோசிக்கையில், உமாதேவியார் எம்பெருமானை நோக்கி, சுவாமி! தேவரீர்யாவையுமுணர்ந்த சர்வஜ்ஞராயிருப்பினும், என்மனத்திலுண்டாகுமெண்ணத்தை விண்ணப்பிக்கின்றேன். செவிசாய்த்தருளல் வேண்டும். பூர்வமொருகால், பிரம விஷ்ணு முதலாகிய

தேவர்களும், சனகராதி முனிவர்களும், பிறரும், இமயமலையிடத்தில், ஒன்றுகூடியிருந்தபோது, பூமிபொறுக்காமல் வடகீழ்த்திசைதாழ்ந்து தென்மேற்றிசையுயர்ந்தது கண்டு, அகத்தி முனியைநோக்கி, நீ போய்த்தென்கீழ்த்திசையி லிருந்தால், பூமிசமமாயிருக்குமெனப் பணித்தருளினீர். விடைபெற்றுப்போகும்முனிவான், சுவாமீ! அடியேன்போகுந் தேயம் தமிழ் நாடாயிருத்தலால், அங்குள்ளாரெல்லாம் இனியதமிழ் நூல்களை ஐயந்திரிபறக் கற்று, கேட்போர்க்கு நல்லுத்தரமளித்தல் வேண்டும். அடியேனுக்கு அத்தமிழிலக்கணத்தை யுபதேசித்தருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க, அவனுக்குப்போதித்தருளினீர். பின்னரு மவன், சுவாமீ! அடியேனெப்போதும்முடைய திருவடிகாண்பேனென்று வேண்டுகையில், கடம்பவனத்தில்வந்து நம்மைத்தரிசித்துப்பணிந்து, நீவிரும்பியவரங்களைப் பெற்றுப் பொதிகையில் வாழ்கவென்றருளிச் செய்தீர். அவ்வாறே யம்முனிவரன், தன்பத்தினியாகிய லோபாமுத்திரையோடு அங்கு வாழ்கின்றனன். அவனையிப்போதழைத்து இந்தநற்கீரனுக்கு இலக்கணம் போதித்தல் நன்றெனப் பார்வதிதேவியார் மொழியக்கேட்டு, சிவபெருமான் மனமகிழ்ந்து, அகத்தியமுனிவனை நினைத்தனர். உடனே, அம்முனிபுங்க

வன் தன்மனைவியோடு மதுரையம்பதியடைந்து, ஆலயத்துட்புகுந்து, சொக்கலிங்கப்பெருமானையும் மீனாக்ஷியம்மையையும் பணிந்து, ஆனந்தபரவசனாயிருக்குஞ்சமையத்தில், நற்கீரனும், பொற்றாமரையில் மூழ்கி, எம்பெருமானைப்பணிய விரைந்துவந்தனன். அப்போது, சொக்கலிங்கப்பெருமான் அகத்தியனை நோக்கி, முனிவரனே! இக்கீரனுக்கிலக்கணநூலமையாத படியால், நம்பாலுணர்ந்தநீ யதனைஐயந்திரிபறப்போதிக்கவென்றுகட்டளையிடலும், அப்பணியைச் சிரமேற்கொண்டு, அகத்திய முனிவன், நற்கீரனுக்கு இலக்கணநூலை நன்குவிளங்கப் போதித்தனன். சிவபெருமான் குறுமுனிவனைத்தமது திருக்கரங்களாற்றடவி, வேண்டியவரங்கள் நல்கி, திருப்பொதிகைக்கு விடைதந்தனுப்பினர். பின்னர், உமாதேவியார் தமது நாயகராகிய சிவபெருமானைநோக்கி, சுவாமீ! இக்கீரனுக்குந்தேவர் இலக்கணமுபதேசியாமல், அகத்தியனைக்கொண்டுபோதித்தமை யாதுகாரணமென வினவலும், நாடோறுந்தன்னை வழிபடுவோனுக்கும், மிக்கபொருளளிப்போனுக்கும், மாச்சரியமில்லாதவனுக்கும், சொன்னசொற் கடவாதவனுக்கும், குற்றமற்றநெஞ்சினனுக்கும் நூலுரைத்தல்வேண்டும். இவன் மாச்சரியங்கொண்டமையால், நாமுணர்த்தாது, இம்முனிவனைக்

கொண் டுணர்த்துவித்தோம் என்றுரைப்பத் தேவியார்கேட்டுச் சங்கையொழிந்து மகிழ்ந் திருந்தனர். பின்னர், நக்கீரன் தான்முன்செய் தகவிகள் யாவையும்நோக்கி, அவைமுற்றும் வழுக்கள் நிறைந்திருக்கக்கண்டு, அந்தோ! நான் எம்பெருமானுக் கபராதஞ்செய்தேன். சிறியகல்வி யுடையோர் மிகவுஞ் செருக்கு டையவர் என்று பெரியோர் கூறும் பழமொ ழியென்னிடத்தே திருஷ்டாந்தமாயிற்று. எம்பெ ருமான் அடியேனுக்குச் செய்தவிப்பேருதவி க்கு யானென்னகைம்மாறு செய்யவல்லேன் என்று திருவருட்பெருமையை நினைந்து விய ந்து, தனக்குச்சிவபெருமான் போதித்த இல க்கணநூலை மற்றுள்ள புலவர் யாவர்க்கும் போதித்து இனிதுவாழ்ந்திருந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## சங்கத்தார்கலகந்தீர்த்தபடலம்.

மதுராபுரியில், சண்பகபாண்டியன் செங் கோல்செலுத்துநாளில், சங்கப்புலவர்கள் நா ற்பத்தெட்டுபேரும், வெவ்வேறுதமிழ்ப் பிர பந்தங்கள்பாடி, தம்மில்செருக்குற்று, பெரு மைபேசிப்பகைகொண்டவர்களாய்த் தங்கள் தாரதம்மியங்களை யளக்கவல்ல முன்னேனுகிய சொக்கலிங்கப் பெருமானிடத்தடைந்து, திரு

வடிகளைவணங்கி, சுவாமீ! அடியோங்கள்பாடிய இப்பாடல்களில், உயர்வுதாழ்வுநோக்கி, பேதமளந்துகாட்டி, குற்றம்போக்கி, சந்தேகமொழித் தருளல்வேண்டுமென்று பணிந்து நிற்கக்கண்டு, சொக்கலிங்கப்பெருமான் கருணைகூர்ந்து, சிவலிங்கத்தினின்று மோர்புலவனாகத் திருவுருக்கொண்டுதோன்றி, சங்கப்புலவர்களைநோக்கி, இம்மதுராநகரத்தில், குபேரனையொத்த செல்வப்பெருக்குடைய ஒருவணிகனுளன். அவன்மனைவி குணசாலினியென்னும் பெயருடையாள். அவர்கள் தவப்பேற்றினாலொரு புதல்வன் ஞானசூரியனைப்போலவதரித் திருக்கின்றனன். அழகில்மன்மதனுக்கொப்பாகிய அந்தப்புதல்வன் பிறவி யூமனாகும். அவ்வூமப்பிள்ளையினிடஞ் சென்று நீங்கள் பாடியுள்ள செய்யுட்களையெல்லா முரைப்பீராயின், அவன்புத்திக்கிசைவதெதுவோ, அதுவே யாவரும் மதிக்கத்தக்க நல்லதமிழென்றுகூறியருளினார். அதுகேட்டபுலவர்கள் சுவாமீ! அவன்குலத்தில் வணிகனும், பிறவியூமனுமானால், அவனெவ்வாறு இப்பாடல்களிற் கிடக்கும் நன்மை தீமைகளையாராய்ந்து,அவற்றினிலக்கணங்களை யறியவல்லானென வினவலும், அவன் உங்கள்பாடல்களிலுள்ள சொல்லாழம் பொருளாழங்களைக்கண்டால் சிரமசைத்து, புளகம்பூரித்து, மகிழ்ச்சியடைவன். அப்போது,

உங்களுக்குள் நேரிட்ட கலகந்தீரும் என்று சிவபெருமான்மொழிந்து ஆலயத்துட்சென்றனர். பின்னர், பாவலர்களெல்லாம் அவ்வணிகசிகாமணியை யழைப்பித்து, சங்கப்பலகையிலிருத்தி, சந்தனபுட்பமுதலியவற்றாலருச்சித்து, அவன்முன்னிருந்துகொண்டு தங்கள் தமிழ்ப்பாடல்களை மொழிந்தனர். அவ்வாறுமொழிந்தபோது, அவ்வணிகர்பெருமான், சிலர் சொல்லாழத்தை மகிழ்ந்தும், சிலர் பொருளாழத்தை மகிழ்ந்தும், சிலர் சொற்பொருள்வைப்பையிகழ்ந்தும், சிலர் சொற்பொருளின்பங்களைப் புகழ்ந்தும், சிலர் சொற்பொருள்வன்மைக்கு முகமலர்ந்தும், அந்தசங்கப்புலவர்கள் தமிழையெல்லாம் சீர்தூக்கியளந்துவந்தவணிகன், நக்கீரன், கபிலன், பாணன் ஆகிய இம்மூவர்தமிழையாராயுந்தோறும், அப்பாடல்களின் சொற்பொருளின்பங்களை யநுபவித்து, உடல்பூரித்து, சிரக்கம்பனஞ்செய்து, ஆனந்தக்கண்ணீரின் மூழ்கி, தன்னைப்பெற்றோர் புரிந்த தவப்பிரயோஜனத்தை யளித்து, சந்தோஷித்திருந்தனன். இவ்வாறு அவ்வணிகர்கோன் பவளம், முத்து முதலிய மணிகளை நிறுத்தளப்பதுபோல், சொற்பொருளாழங்களை நாவாகிய துலாக்கோலால் தூக்கிக்காட்ட, சங்கப்புலவர்கள், பகைநீங்கி, சிநேகம் பாராட்டினர். அம்மூவர்தமிழும் உலகில்பெருகி, சிறப்

படைந்தன. அப்புலவர்களும் கலகமொழிந்து, நூல்களாய்ந்து சுகித்துவாழ்ந்திருந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

---

# இடைக்காடன்பிணக்குத்தீர்த்த படலம்.

மதுராபுரியில், சண்பகபாண்டியன் சிவலோகமடைந்த பின்னர், அவ்வமிசத்தில், பதினைந்து பாண்டியர்களுடைய அரசாட்சிக்குப் பின்பு, குலேசபாண்டியன் மதுராநகரில் செங்கோல்நடாத்திவந்தனன். அவன் இலக்கணவிலக்கியங்களையும், எல்லாநூல்களையும் வரம்புகண்டவனாதலின், அவனுக்குச்சங்கப்பலகையும் ஏனையபுலவர்களோ டொப்பவீற்றிருக்கும்படி யிடந்தந்தது. அக்குலேச பாண்டியன், மிகுந்தகல்விகேள்வி யுடையவனென்று கேள்வியுற்று, சங்கப்புலவர்களில் ஒருவனான கபிலனுக்கு மிக்கநட்பாளனாகிய இடைக்காட்டுப் புலவன், சிலதமிழ்ப்பாடல்கள்தொடுத்து பாண்டியனைப் போய்க்காண்போமென்று, தான்பாடிய பனுவலோடு பாண்டியன் திருமுன்னடைந்து அதனைவாசித்தலும், குலேசபாண்டியன், உள்ளத்தில் கல்விப்பொறாமையால், சிரக்கம்பஞ்செய்யாமலும், அகமகிழ்ச்சிமுகமலர்ச்சிகாட்டாமலும், ஒன்று முறையா

மனுஞ் சும்மாவிருப்பக்கண்டு, இடைக்காடன் மானம் புறம்பேதுள்ளச் சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து, திருவடிகளில் வீழ்ந்தெழுந்துநின்று, தமிழறியும்பெருமானே! குலேசபாண்டியன், அளவிறந்த பொன்னிதி போல கல்வியும் படைத்தவனென்று சொல்லக்கேட்டு, கவிபாடிக்கொண்டு சென்றேன். இதனைச் சிறிதுமறியாமல் அவமதித்தனன், அவன் என்னை யிகழ்ந்தனனோ? இல்லை. சொல்வடிவாய உமதிடப்பாகத்தில் வீற்றிருக்கும் உமாதேவியாரையும், பொருள் வடிவாயுள்ள உம்மையுமே யிகழ்ந்தனனாதலால் அடியேனுக்கென்ன குறையுளது என்று மொழிந்து, தணியாக்கோபத்துடன் சென்றனன். அவ்வார்த்தை திருச்செவியில் நன்குயுறைப்பக் கருணாநிதியாகிய சிவபெருமான் மனம்நொந்துபோன இடைக்காடனுக்கும், கபிலனுக்கும், உள்ளக் களிப்புண்டாகும்படி, இவ்விடத்தில் தன் இலிங்கவுருவைமறைத்து, பிராட்டியாரோடும், வெளியே புறப்பட்டுப் போய், தன்கோயிலுக்கு நேர்வடதிசையில், வையையாற்றுக்குத்தென்பால் ஓராலயங்கண்டு அங்குவீற்றிருந்தருளினார். சங்கப்புலவர்களும் எம்பெருமானுடன் சென்றங்கிருந்தனர். பின்பு, அடியார்கள் விடியற்காலத்தில், திருப்பள்ளியெழுச்சிச் சமையத்தில், சுவாமியைச்

சேவிக்கச்சென்றபோது,இலிங்கவுருவையங்கு காணுமல், அதிசயித்தவர்களாய், பாண்டியன் சமூகமடைந்து, அரசே! நாங்கள் திருப்பள்ளியெழுச்சிக்காலத்தில், எம்பெருமானைச் சேவிக்கப்போனபோது, அங்கு இலிங்கவுருவைக்கண்டிலேம். நகரமும்வாட்டமடைந்திருக்கின்றது என்று அழலிற்காய்ச்சிய வேல்போல் செவியில் உறுத்தியமாத்திரத்தில், பாண்டியன் சிங்காசனத்திலிருந்து, அடியற்றமரம்போலத் தரையில் வீழ்ந்து, அறிவு ஒடுங்கிமட்பாவைபோல் அசைவறச் சிறிதுநேரமிருந்து, பின்னர், சிறிது அறிவுதோன்ற எழுந்துநின்று, அஞ்சலியாகக்கைகளைக் கூப்பிக்கொண்டு,தாரைதாரையாய்வழியும் கண்ணீர்வெள்ளத்தாழ்ந்து, சுவாமீ! அடியேன் யாதுபிழைசெய்தேன்? நீயிவ்விடம்விட்டு நீங்கியெங்குற்றனை? சிவலோகத்தினையோ? வெள்ளியலையினையோ? அடியார் உள்ளத்தினையோ? வேதச்சிரத்தினையோ? என்று தளருகையில், சிலரோடிவந்து, எம்மரசே! வையைநதிக்குத்தென்பால், எம்பெருமான் ஆலயமொன்று புதிதாக ஏற்படுத்திக்கொண்டு சங்கப்புலவர்களோடும், உமாதேவிசமேதரா யங்குவீற்றிருக்கின்றனரென்றுகூறினர். அம்மொழிகேட்டமாத்திரத்தில், பாண்டியன், காலினுல்நடந்து அங்கேகி, பிராட்டியாரோடு மெழுந்தருளியிருக்

மலுஞ் சும்மாவிருப்பக்கண்டு, இடைக்காடன்
மானம் புறம்பேதள்ளச் சொக்கலிங்கப்பெரு
மான் சந்நிதியடைந்து, திருவடிகளில் வீழ்ந்
தெழுந்துநின்று, தமிழறியும்பெருமானே! கு
லேசபாண்டியன், அளவிறந்த பொன்னிதி
போல கல்வியும் படைத்தவனென்று சொல்
லக்கேட்டு, கவிபாடிக்கொண்டு சென்றேன்.
இதனைச் சிறிதுமகிழாமல் அவமதித்தனன்,
அவன் என்னை யிகழ்ந்தனனே? இல்லை.
சொல்வடிவாய உமதிடப்பாகத்தில் வீற்றி
ருக்கும் உமாதேவியாரையும், பொருள்
வடிவாயுள்ள உம்மையுமே யிகழ்ந்தனனாதலா
ல் அதிலெனக்கென்ன குறையுளது என்று
மொழிந்து, தணியாக்கோபத்துடன் சென்ற
னன். அவ்வார்த்தை திருச்செவியில் நன்கு
யுறைப்பக் கருணாநிதியாகிய சிவபெருமான்
மனம்நொந்துபோன இடைக்காடனுக்கும், க
பிலனுக்கும், உள்ளக் களிப்புண்டாகும்படி,
இவ்விடத்தில் தன் இலிங்கவுருவைமறைத்து,
பிராட்டியாரோடும், வெளியே புறப்பட்டுப்
போய், தன்கோயிலுக்கு நேர்வடதிசையில்,
வையையாற்றுக்குத்தென்பால் ஓராலயங்கண்டு
அங்குவீற்றிருந்தருளினார். சங்கப்புலவர்களு
ம் எம்பெருமானுடன் சென்றங்கிருந்தனர்.
பின்பு, அடியார்கள் விடியற்காலத்தில், திருப்
பள்ளியெழுச்சிச் சமயத்தில், சுவாமியைச்

சேவிக்கச்சென்றபோது,இலிங்கவுருவையங்கு காணுமல், அதிசயித்தவர்களாய், பாண்டியன் சமூகமடைந்து, அரசே! நாங்கள் திருப்பள்ளியெழுச்சிக்காலத்தில், எம்பெருமானைச் சேவிக்கப்போனபோது, அங்கு இலிங்கவுருவைக்கண்டிலேம். நகரமும்வாட்டமடைந்திருக்கின்றது என்று அழலிற்காய்ச்சிய வேல்போல் செவியில் உறுத்தியமாத்திரத்தில், பாண்டியன் சிங்காசனத்திலிருந்து, அடியற்றமரம்போலத் தரையில் வீழ்ந்து, அறிவு ஒடுங்கிமட்பாவைபோல் அசைவறச் சிறிதுநேரமிருந்து, பின்னர், சிறிது அறிவுதோன்ற எழுந்துநின்று, அஞ்சலியாகக்கைகளைக் கூப்பிக்கொண்டு,தாரைதாரையாய்வழியும் கண்ணீர்வெள்ளத்தாழ்ந்து, சுவாமீ! அடியேன் யாதுபிழைசெய்தேன்? நீயிவ்விடம்விட்டு நீங்கியெங்குற்றனை? சிவலோகத்தினையோ? வெள்ளிமலையினையோ? அடியார் உள்ளத்தினையோ? வேதச்சிரத்தினையோ? என்று தளருகையில், சிலரோடிவந்து, எம்மரசே! வையைநதிக்குத்தென்பால், எம்பெருமான் ஆலயமொன்று புதிதாக ஏற்படுத்திக்கொண்டு சங்கப்புலவர்களோடும், உமாதேவிசமேதரா யங்குவீற்றிருக்கின்றனரென்றுகூறினர். அம்மொழிகேட்டமாத்திரத்தில், பாண்டியன், காலினல்நடந்து அங்கேகி, பிராட்டியாரோடு மெழுந்தருளியிருக்

இன்ற சொக்கலிங்கப்பெருமானைக்கண்டு, பணிந்து, கண்ணீர்சொரிந்து, ஆனந்தவெள்ளத்திலாழ்ந்து, நாக்குழற எம்பெருமானைநோக்கி, சுவாமீ! வேதங்களும் தொடர்ந்தறியாத்திருவடிசிவப்ப நகர்புலம்ப எம்மன்னையாகிய உமாதேவியாருடன் இங்கெழுந்தருளுவதற்குக் காரணம்யாது? அடியேனாலும், என்குடிகளாலேனும், என்பகைவராலேனும், ஏதேனும் இந்நகரத்துக்குத் தீமையின்றுண்டாயிற்றோ? வேதியர் ஒழுக்கங்குன்றியதோ? தவம்தருமம்குறைந்ததோ? இல்லறம்துறவறங்கள் தவறினவோ? யானென்றுமறியேன், பெருமானே! என்று பலவாகத்துதித்து நிற்கையில், சொக்கலிங்கப்பெருமான் திருச்செவியேற்று, பாண்டியனே! உன்னுடையதோத்திரங் கேட்டுவந்தோம். இச்சிவலிங்கம் நமதுதோழனாகிய குபேரன்பூஜித்தது. ஆகையால், நாமிதனிடத்தேவந்து வீற்றிருந்தோம். இக்காரணத்தால், இன்றுமுதலித்தலம் உத்தர ஆலவாயாய்ச்சிறந்திடுக. நாம்கடம்பவனமாகிய மதுரையைவிட்டு ஒருபோதும் நீங்கோம். நீயிடைக்காடன் செய்யுளை யிகழ்ந்தபடியால், நாமவனிடத்து வைத்த அன்பினால் இங்குவந்தருளினோம், என்று சிவபெருமான் அசரீரியாக மொழிந்தருளினர். அதுகேட்டு, பாண்டியன் சுவாமீ!

சிறியோர்செய்த பிழையைப்பொறுப்பது பெ
ரியோர்கடமை யாகையால், நாயினேன்செய்
த அபராதத்தைமன்னித்தருளல்வேண்டுமெ
ன்று திருவடிகளில்விழ்ந்து துதித்தபாண்டிய
னுக் கருள்சுரந்து, உமையாளோடும், சங்கப்
புலவர்களோடும் முன்போல் தமது திருக்
கோயில் போய்ச்சேர்ந்தனர். பின்புபாண்டிய
ன் இடைக்காட்டுப்புலவனைச் சங்கத்தாரோ
டும் தன்னரண்மனைக் கழைத்துக்கொண்டு
போய், சிங்காசனத்திலிருத்தி, சர்வோபசார
ங்களுஞ்செய்து, இடைக்காடன் முன்பாடிக்
கொண்டுவந்த பனுவலை அகமகிழ்ச்சியுடன்
கேட்டானந்தித்து, அவனுக்கும் ஏனையபுல
வர்கட்கும் தக்கபரிசுகளளித்து, அவர்கள்பி
ன் ஏழடிதூரம் நடந்து சென்று மீள்பவன்,
அப்புலவர்களைநோக்கி, புலவீர்காள்! நான்
இடைக்காடனார்க்குச்செய்த விக்குற்றத்தைப்
பொறுத்தருள்கவென்று வணங்கினன். அவர்
கள் பாண்டியனைநோக்கி, அரசே! இப்போது
மொழிந்த சொல்லாகிய சீதோதகத்தால் எ
ங்கள் கோபத்தீ தணிந்தது. இன்னும் நம்மி
றைவனாகிய சொக்கலிங்கப்பெருமான்கருணை
யால் உனக்கு எல்லாப்பாக்கியமும் உண்டா
குக என்று ஆசிகூறிப்போயினர். குலேசபா
ண்டியன் தன்புத்திரனாகிய அரிமருத்தனபா
ண்டியனுக்குத்தன்னரசு அளித்துச் சிலநாள்

சென்றபின், சிவபெருமானுடைய திருவடிநீழ லடைந்தனன்.

திருச்சிற்றம்பலம்.

---

## வலைவீசின படலம்.

ஸ்ரீ கைலாயத்தில், பூர்வம் சிவபெருமான் ஜகன்மாதாவாகிய உமாதேவியாருக்கு அந்தரங்கமாக ஓர் தனியிடத்திலிருந்து வேதத்தின் இரகசியார்த்தங்களையெல்லாம் உபதேசித்துக் கொண்டிருக்கையில், பிராட்டியார் யாதுகாரணத்தாலோ சிறிது கவலைகொண்டவள் போல் அதனிடத்தில் கருத்தைவையாதவளாய்க் கேட்டிருந்தனள். அதனைக்கண்ட முக்கணெம்பெருமான் தேவியாரை நோக்கி, பெண்ணே! நீ புவியிலுள்ள பேதைமாதர்போல், எம்பால் பாராமுகங்கொண்டு வேதப்பொருளைமனவொருமைப்பாடின்றிச் சிரவணஞ்செய்த தோஷத்தால், விரதருமங்களில்லாமல் மீன்பிடித்துப் பிழைக்கும் இழிந்த பரதவர்மகளாகுகவென்று சாபமிட்டமாத்திரத்தில், அம்மையார் பயந்து பாதங்களைவணங்கி, சுவாமீ! உம்மைப்பிரிந்து அடியேன் வாழ வல்லேனோ? என்று அங்கலாய்த்தவளாய் வருந்திநிற்கையில், கருணாநிதியாகிய பரமேஸ்வரன் தேவியார் மனத்துயரத்தைக் கண்டிரங்கியவராய்,

மாதரசே! நீ பரதவர்மகளாய் உலகில் அவதரித்து வளருநாளில், நாம் வந்துன்னை மணம் புரிவோமென்று விடைதந்தனுப்பிவிட் டிருந்தனர். அப்போது, விநாயகமூர்த்தி விளைந்ததையுணர்ந்து தந்தையிடம்வந்து, இதனாலன்றோ இவ்விபரீதங்களெல்லாம் உண்டாயினவென்று அங்கிருந்த புத்தகங்களையெல்லாம் தும்பிக்கையால்வாரிக் கடலில் எறிந்துவிட்டனர். சுப்பிரமணியக் கடவுள்வந்து, தாதை கையிலிருந்த நூலை விரைவிற்பிடுங்கிச் சாகரத்தில் வீசினர். அதுகாலையில் சிவபெருமான் நந்தியெம் பெருமானைக் கோபித்து, நாமிருக்குஞ்சமையம் அறியாது இவர்களை யுட்புகவிட்டிருந்தனை யாதலால், விளைந்ததீமைக்கு நீயேகாரணமாயினை. இத்தீங்கொழியுநிமித்தம் நீயோர் சுறுவாகிக் கடலிற்சென்று வாழ்கவென்றுச் சாபமளித்து, விக்னேஸ்வரமூர்த்திக்குச் சாபமளிப்பின் அது தம்மைச்சாருமாகையால், கொடாதொழிந்து, முருகக்கடவுளை நோக்கி, நீ வணிகர்குலத்தில் ஊமைப்பிள்ளையாகுக வென்று சாபமிட்டனர். இதுநிற்க, வையைத்துறையைச்சார்ந்த கீழைச்சமுத்திரத்தருகேயுள்ள தண்டுறைப்பாக்கத்தில்,பரதவர்களுக்கெல்லாம் தலைமைபூண்டுள்ளவனும், சிவபெருமானுடைய திருவடிகளில் மெய்யன்பு வைத்தவனுமாகிய ஒரு வலைஞன் நெடுநாள்

மகப்பே றில்லாமல் மனம் வருந்துநாளில், ஒருநாள் தன் சுற்றத்தினரோடும் கடலில் மீன்பிடிக்கும்படிச் செல்லுகையில், கரையி னோர்புறம் சர்வலோகேஸ்வரியாகிய உமாதே வியார் ஒருபெண்மகவாய்த்திருவுருக்கொண்டு ஒரு புன்னைவிருக்ஷ நீழலில் அழுது கொண்டி ருந்தனள். பரதவர்கோன் அக்குழந்தையை க்கண்டு, புத்திரப்பே றில்லாவெனக்கு மது ரையெம்பெருமானே திருவுளமிரங்கி இதனை யளித்தனரென்று அடங்காப் பெருமகிழ்ச்சி யைக்கொண்டு, பேராவலுடன் அம்மகவை யெடுத்து மார்புறத்தழுவிக்கொண்டு வீட்டிற் கொண்டுபோய்த் தன்மனைவிகையிற் கொடுத்த னன். அவ்வலைமாதும் பெருது பெற்றெடுத்த அக்குழந்தையை ஆவலுடன்வாங்கிக் கொங் கைகளி லணைத்துக்கொண்டு முத்தமிட்டுச்சி மோந்து சீராட்டி வளர்த்துவந்தனள். நந்தி தேவரும் ஈஸ்வரன் சாபாக்கினையின்படி சுரு வாகிக்கடலடைந்து, கப்பல்களையும், தோணி களையும், படவுகளையும் பலவாகச்சேதப்படு த்திப் பரதவர்க்கு மிக்க இடையூறு விளைத்து வருகையில், பரதவர்கோன் தன்கிளைஞருட ன் கடலிற்சென்று பலதரம் பிடிக்கமுயன்றும் அகப்படாமல் தீங்குவிளைக்கக்கண்டு, இக்கொ டியமகரத்தைப் பிடிப்பவன் எவனோ அவனே என்புதல்விக்கு மணவாளனுமென்று பிரசித்

தப்படுத்தி யிருந்தனன். அந்நாளில், சிவபெருமான் தாம் பூர்வம்தேவியாருக்களித்த திருவாக்கைநிறைவேற்றும் நிமித்தம், ஓர் வலைஞனாகி, தன்கணத்தவரிலொருவன் பரதவனாய் மீன்வலையைத் தோளிலிட்டுப் பின்தொடர்ந்துவர, அத்தண்டுறைப்பாக்கத்தையடைந்தவளவில், பரதவர்கோன்கண்டு, நம்பி!நீயாரென்றுகேட்க, நான், மதுரையம்பதியில் வலைஞர்களுக்கெல்லாம் இறைமகனாயுள்ள ஒருவனுடையமைந்தன், நான் படைத்துக்காத்துத் துடைக்கவும் வல்லேன். வான்மீன்களை யெல்லாம் வலைவீசிப்பிடிக்க வல்லேன் என்றுகூறுகையில், பரதவர்கோன்கேட்டு, அப்படியானால், இக்கடற்றுறையில், ஓர்சுறாமீன் நெடுநாள் இடையூறு விளைத்துவருகின்றது. அதனைப் பிடிப்பாயாயின், என்புதல்வியை யுனக்கு மணஞ்செய்துதருவேன் என்றுமொழிந்தனன். உடனே சிவபெருமான் ஓர்படவிலேறிச்சென்று தம்மாள் வசத்திலிருந்த வலையைவாங்கிக் கடலில்வீசியமாத்திரத்தில், அம்மகரமீன் அவ்வலையில் அகப்பட்டுக்கொண்டது. அதுகண்ட வலைஞர்கள் யாவரும் சந்தோஷத்தால் ஆரவாரித்தனர். பரதவர்வேடம்பூண்ட சிவபெருமான் அதனைக்கொண்டுவந்து கரையிலிட்டனர். பரதவர்கோன்பெருமகிழ்ச்சி கொண்டு, தன்புதல்வியைச் சிவபெருமானுக்கு மணஞ்

செய்வித்தனன். அப்போதே, மணமகனும் மணமகளும் பழையவடிவோடு ஆகாயத்தில் விடைமேற்கொண்டு தோன்ற, கரையிலிருந்த மகாமும் நந்திதேவராய்த்தோன்ற, பாதவர்கோன் தரிசித்து திருவடிகளில் வீழ்ந்துவணங்கி சுவாமீ! ஜீவகாருண்யம் சிறிதுமில்லாத இழிந்தசரீரமெடுத்துழலும் நாயேனை இரக்ஷித்தாட்கொள்ளும்பொருட்டு, இன்றுஎன்போல் வடிவந்தாங்கிவந்த புண்ணியனே போற்றியென்று பலவாறுந்துதித்து நிற்கையில், எம்பெருமான் அவனைநோக்கி, அன்பனே! நீ நெடுநாளாய்ப்புத்திரப்பேறில்லாமல் வருந்தினமையால், நாம் உமையையுனக்கு மகளாகத்தந்து பின்புவந்து மணஞ்செய்தனம். நீயிவ்வுலகில் குபோனைப்போல் வாழ்ந்திருந்து நம்முலகமடைவாயென்று திருவருள் சுரந்து அங்குநின்றும் உத்தரகோசமங்கையென்னுந் தலத்தையடைந்து, அவ்விடத்திருந்து உமாதேவியார்கேட்ட வேதார்த்தங்களையெல்லாந் திரட்டி யுபதேசித்தனர். அப்போது, சிவபெருமான் அங்குவந்த நம்மிடத்து அன்புள்ள அறுபதினாயிரம் யக்ஷஸ்திரீகளுக்கும் உபதேசித்து வீடுநல்கி மீனாக்ஷியம்மையோடும் மதுரையம்பதியடைந்து வீற்றிருந்தருளினர்.

திருச்சிற்றம்பலம்.

---

# வாதவூரடிகளுக்குபதேசித்த படலம்.



வாதவூரடிகள், வையை ஆற்றின்கரையிலுள்ள எல்லாவளங்களும் நிறைந்த திருவாதவூரென்னும் பதியில், ஆமாத்திய பிராமணகுலத்தில் திருவவதாரஞ்செய்து, பதினாறுண்டுக்குள் வேதாகம சாஸ்திரங்கள்யாவும் கசடறப் பயின்றிருந்தனர். இவர்செய்தியை மதுராபுரியை அரசாண்டுவந்த அரிமர்த்தனபாண்டின் கேள்வியுற்று, அவரை வரவழைத்து வேண்டிய சிறப்புகள் அளித்து, தன்னிடத்திலுள்ள மதிமிக்க எல்லா அமைச்சரினும் முதல் அமைச்சராய்வைத்துக்கொண்டனன். வாதவூரடிகள் பாண்டியனுக்கு கண்ணும் கவசமும்போலிருந்து ராஜகாரியங்கள் யாவற்றையும் குறைவறநடாத்திவாழுநாளில், அவருக்கு நித்தியா நித்தியவஸ்து விவேகம் மனத்திற்றோன்றியபடியால், இம்மைமறுமை யிரண்டிலும் ஆசை யொழிந்து பரகதிக்குபாயந்தேடப் புகுந்த வாதவூரடிகள், பலசமயநூல்களிலும் நுழைந்து ஆராய்ச்சிசெய்தும், வேதாகமங்களில் மிகக்கேள்வியுடைய பெரியோர்கள் வருந்தோறும் அவர்களிடம்போய் அளவளாவியும் உணர்ந்த பொருளெல்லாம் தாகவிடாய்க்குக் கடல்நீருண்டவர்போல், உள்ளத்தில் அமைவுறாமல், சிவபெருமானுடைய ஸ்ரீபாதங்களில் உள்ளன்புபதிந்து பாண்டியனிடத்தில்

புறக்கருமங்கள் புரிந்துவந்தனர். இத்தகை ய செய்கையிலொழுகும் வாதவூரடிகள், ஒரு நாள் பாண்டியன் சபையடைந்து எதிர்நின்ற போது, குதிரைக்காவலர் பாண்டியன்முன்வ ந்து வணங்கி, ஒருபுறம் ஒதுங்கிநின்று, எம்ம ரசே! நம்மிடத்துள்ள குதிரைக்கூட்டத்தில் இறந்தவைபோக சேஷித்துள்ளவை நோயும் மூப்பும் உடையனவே யன்றி சிறந்த குதிரை ஒன்றேனுமில்லை யென்றுரைத்தனர். அதுகே ட்ட அரிமர்த்தனபாண்டியன் எதிரேநிற்கும் வாதவூர்வள்ளலைநோக்கி, நீர் இப்போது நமது பொக்கசத்தைத்திறந்து, வேண்டிய நிதியெடு த்துக்கொண்டு கடற்றுறைக்குப்போய் அங்கு இறங்கும் குதிரைகளில் நல்லவையாகத்தெரி ந்து வாங்கிவாரும் என்று விடைதந்தனுப்பி னன்.

அவ்வாறே வாதவூரடிகள் பொக்கசந்திற ந்து குதிரைகொள்ளவேண்டிய அளவு பொரு ள் எடுத்துக்கொண்டு தாபிட்டு, அப்பொருள் களை ஒட்டகத்தின்மேலேற்றி முன்போக்கி, தாம்போய்ப்பொற்றாமரைத் தீர்த்தத்தின்மூ ழ்கி, அத்தடாகக்கரையிலிருக்கும் சித்திவிநா யகரைப்பணிந்து, அங்கயற்கண்ணம்மையா ரையுந்தாழ்ந்து, சொக்கலிங்கப்பெருமான் சந் நிதியடைந்து, திருவடிகளில்வணங்கி சுவாமீ! அடியேன் விண்ணப்பமொன்றுளது. அதனைத்

திருச்செவியிலேற்று முடித்தருளல் வேண்டும். அஃதென்னையெனின், இப்பொருளையெல்லாம் உமக்கும் உம்மடியார்க்கும் விநியோகமாக்குதல் வேண்டுமென்று குறையிரந்து நிற்கையில், பரமசிவத்தின் அருள்போல் ஆதிசைவனாகிய ஒரு அர்ச்சகன் நேர்வந்து விபூதிப்பிரசாதம் அளித்தனன். அதனை இருகையிலுமேற்று, நமக்கு இதுபோலும் நற்சகுனமில்லையென்று மனமகிழ்ந்து தரித்து, எம்பெருமானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, பலவாத்தியங்கள் கோஷிக்க, சேனைகள் புடைசூழ்ந்துவர, அங்குநின்றும் புறப்பட்டுச்சென்றனர். இவ்வாறு வாதவூரடிகள் பிரயாணப்பட்டு வருவதற்கு முன்னரே, சிவபெருமான் இவரது இருவினையொப்பும் மலபரிபாகமுங்கண்டு இவரை ஆட்கொண்டு திருப்பணிகொள்ளத் திருவுளத்திலெண்ணி, தாம் ஒருபிராமண ஆசாரிய மூர்த்தியாகிப் பலசிஷ்ய கூட்டத்தோடுதிருப்பெருந்துறைக்குவந்து அங்குள்ள குருந்த மரத்தடியில் எழுந்தருளியிருந்தனர். வாதவூரடிகள் திருப்பெருந்துறையைச்சேரும்போது மனத்திலுவகையுண்டாகவும், கைகள் தலைமேலேறிக்குவியவும், கண்களில் ஆனந்தபாஷ்பம்பெருகவும், நடந்துசென்று, என் மனம் நெருப்பிலிட்ட வெண்ணெய்போலுருகுகின்றமையால், என்னுடைய ஆணவமல

வலியை யாட்கொள்ளும் கருணைவள்ளல் எழுந்தருளியிருக்கும் இடமிதுவேயென்று துணிந்து சென்னார்.

வாதவூரடிகள் திருப்பெருந்துறை ஆலயத்தையடைந்து, தடாகத்தில் ஸ்நானஞ்செய்து, கோபுரவாயிலுட்பிரவேசித்து தண்டாகாரமாகப் பூமியில் விழுந்து வணங்கி, சிவலிங்கப்பெருமானைத் துதித்து, கோயிலை வலம்வருகையில், வேதத்திரட்பொருளாகிய பரமசிவன் கருணைத்திருமேனிகொண்டு குருமூர்த்தமாய் வீற்றிருக்கும் குருந்தமரத்தை யெதிர் கண்டனர். அங்கு பலதிருத்தொண்டர் கூட்டத்திடையே, யோகாசனத்தின்மீது கைத்தலத்தில் சிவஞானபோதந்தாங்கி யெழுந்தருளியிருக்கும் கருணாநிதியைக்கண்டு, கனகசபையில் ஆனந்தத்தாண்டவஞ்செய்ததும், கல்லாலடியில் நால்வர்க்கு அறைசொற்றவிருந்து
...ஞ்செய்ததும் ஆகிய அருமை
...மயின்று நாயேனையாட்கொண்
...டீட்டு எளிவந்ததென்று திரு
...ந்து, சந்நிதியில் வணங்கி யெழு
...ங்களைச் சிரமேற்கூப்பிக்கொண்
...ு மனமுருகி நின்றனர்.

...து, ஆசாரியமூர்த்திகள் வாதவூர
...ழுக்கமும், உள்ளன்புங்கண்டு,

உடல் பொருள் ஆவியைக் கவர்ந்து, மானஸ தீக்ஷைசெய்து, அவரது சென்னிமேல் தமது திருவடிசூட்டி, அஸ்தமஸ்தக சையோகஞ் செய்து, சூக்ஷ்மபஞ்சாக்ஷரத்தை யுபதேசித்து, ஆநந்தவடிவமாக்கினர். வாதவூரடிகள் தம்மைமறந்து, தேனும் பாலும் கற்கண்டும் எனத் தித்தித்து, ஊனையும் உள்ளத்தையுமுருக்கப் பழுதகன்ற சொற்களாகிய மணிகளைப் பத்தியாய்வைத்து, அன்பாகிய கயிற்றிற்கோத்து அழுது மாலைசாத்திய மெய்யன்பினுக்ககமகிழ்ந்து, அன்பருக்கு மாணிக்க வாசகரென்று தீக்ஷாநாமம் சூட்டினர். பின்னர், மாணிக்கவாசகசுவாமிகள் குருமூர்த்தியின் திருவடிகளுக்கன்பு பூண்டு பாமாலைகளால் துதித்து, அங்குசூழ்ந்திருக்கும் சிஷ்யகூட்டங்கள் ஓதும் வேதாகம உபநிடதப் பொருளையெல்லாங் கேட்டு ஆநந்தித்திருந்தனர். அதுபோது, சிவபெருமான், இன்னுஞ்சிலநாள் இவரது மணிவார்த்தைகளைக்கேட் டகமகிழவும், இவர்கையிலுள்ளபொருளையெல்லாம் பத்தியளித்துக்கவர்ந்து வேண்டியதிருப்பணிகளைக்கொண்டு பாண்டியனுக்கு இவர்பெருமைகளையெல்லாமுணர்த்தி அவனைமுத்தியில் விடுக்கவும்,புத்தர்களை வாதில்வெல்லவும் திருவுளத்திற்கொண்டு, மாணிக்கவாசக சுவாமிகளைநோக்கி, அன்பனே! உன்னா லாகவேண்டிய கருமங்கள் சிலவுள

வாகலின், நீ யிங்கிருக்கவென்று அடியார்கூட்டத்தோடும் திருவுருமறைந்தனர்.

இவ்வாறு சிவபெருமான்மறைதலும், பிரிவாற்றாமையால் மாணிக்கவாசகசுவாமிகள் மிகவும் மனவருத்தமுற்று, வாய்திறந்தழுது, இளங்கன்றை நீங்கிய தாய்ப்பசுபோல் கரைந்த நெஞ்சுடையாராய்க் கோபுரவாயிற் புறம்பேவந்தனர். அப்போது, அங்கே பாண்டியனுடைய பரிசனங்கள் திரளாய்நிற்கக்கண்டு அவர்களைநோக்கி, குதிரைக்கூட்டங்கள் ஆடிமாதமுதலில் வருமென்று பாண்டியனுக்குப் போய்ச்சொல்லுங்களென்றனுப்ப, அவர்கள்போய்ப்பாண்டியனைவணங்கி, மாணிக்கவாசக சுவாமிகள் கூறியவண்ணமொழியப் பாண்டியன் கேட்டு ஒன்றுஞ்சொல்லாதிருந்தனன். மாணிக்கவாசகசுவாமிகள் பாண்டியன் குதிரைகொள்ளத்தந்த பொருளையெல்லாம் சிவபெருமான் பூசைக்கும், திருவிழாச் சிறப்புக்கும், ஆலயத்திருப்பணிகளுக்கும், அன்பர்களுக்குஞ்செலவிட்டு, அத்திருப்பெருந்துறையில் வாழ்ந்துவந்தனர். ஆடிமாதமாகியும் குதிரைத்திரள் வந்திலாமைகண்டு, பாண்டியன் ஓலையெழுதிமந்திரித்தலைவராகிய மாணிக்கவாசக சுவாமிகளுக் கனுப்பினன். அவர் அதுகண்டு, இனிமேல் என்செய்வதென்று மனந்தளர்வுற்று ஆலயத்துட் பிரவேசித்து, எம்பெருமானே!

பாண்டியன் பொருளையெல்லாம் நினக்கும் நின்னடியார்க்கும் ஆக்கிக்கொண்டனையே, நான் எதுகொண்டு அவனுக்குக் குதிரை செலுத்துவது? என்று வணங்கிவேண்டியபோது, சுவாமி அன்பனே? பரிகளெல்லாம் வருகின்றனவென்று பாண்டியனுக்கு ஓலைவரைந்து விடுகவென்று அசரீரியாய் மொழியக்கேட்டு, மாணிக்கவாசகசுவாமிகள் மனங்களிகூர்ந்து, பாண்டியனுக்கு வோலையெழுதிவிடுத்தனர். அதுகண்டு பாண்டியன் சந்தோஷித்திருந்தனன்.

அன்றிரவில், நித்திரைசெய்யும் வாதவூரடிகளுடைய சொர்ப்பனத்தில்,சிவபெருமான் குருந்தமரத்தடியில் ஆசாரியமூர்த்தியா யெழுந்தருளி வந்தாண்ட கருணைத் திருமேனியைக்காட்டி, அன்பனே! பாண்டியன் மனங்களிக்கும்படி நாம் குதிரைத் திரள்கொண்டு வருகின்றோம். நீமுன்னே மதுரைக்குச் செல்லுகவென்று கட்டளை யிட்டருள, அதைச்சிரசாவகித்து பொழுது விடிந்தவுடன், திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் சிவலிங்கப் பெருமானைப்பணிந்து, அங்குநின்றும் புறப்பட்டு மதுராநகரத்தை யடைந்து அரண்மனைக்குப்போய், பாண்டியராஜனைக் கண்டனர். அப்போது, பாண்டியன் வாதவூரடிகளைநோக்கி, நீர் எவ்வளவு பொருள் கொண்டு போய் எவ்வளவு குதிரைகொண்டீர் என்று

விளைவதும், பாண்டிவேந்தே! நான் கொண்டுபோன பொன்னுக்கும் அளவில்லை, கொண்ட குதிரைத் தொகையும் அத்தன்மையதே. பின்னை வரத்தாங்கள் பார்த்துக் கொள்ளலாம். அதனால் உமக்குத் துரங்கபதி யென்னும் பெயர் உண்டாம் என்று வாதவூரடிகள் கூறப் பாண்டியன்கேட்டு மனங் களிகூர்ந்து, அமைச்சர் பெருமானுக்குச் சிறந்த வரிசைகளளித்து விடைகொடுத்தனுப்பினான். பாண்டியனிடத்தில் விடைபெற்றுத் திரும்பியமாணிக்கவாசகசுவாமிகள் பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சித்திவிநாயகர் திருவடிகளைப் பணிந்து, அங்கயற்கண்ணம்மையார் சமேதராகிய சொக்கலிங்கப் பெருமானைத் தொழுது, எம்பெருமானே! பாண்டியன் குதிரைகொள்ளத்தந்த நிதியெல்லாம் உனக்கும் உன்னடியார்க்குமாகக்கொண்டு என்னை ஆட்கொண்டனையே, பாண்டியன் கோபங்கொள்ளாமல் மனமகிழும் வண்ணம் புரவித் தொகை வருவதெவ்வாறு? என்று குறையிரந்து நின்றபோது, சருவஞ்ஞியாகிய சிவபெருமான், அன்பனே! நீயாதற்கும் அஞ்சல்வேண்டாம். நீவிரும்பியவண்ணம் நாம் குதிரைத்திரள் கொண்டுவருகின்றோம் என்று அசரீரியாய்த் திருவாய்மலர்ந்தருளக்கேட்டு, மாணிக்கவாசகசுவாமிகள் எம்பெருமானுடைய

திருவருட் பெருமையைப்போற்றித் தம்மனையடைந் திருந்தனர். அப்போது, மாணிக்கவாசகசுவாமிகளுடைய சுற்றத்தாரும், நட்பினரும், பரிஜனங்களும், அயலோரும் மற்றுள்ளவர்களும் திரண்டுவந்து அவர்க்குச் சிலபுத்திகள் கூறத்தொடங்கினர். ஐயா, வேதியர்கள் அமைச்சுரிமை பூண்டு அரசகாரியஞ் செய்வதே தக்கதன்று. அவ்வாறு செய்யப் புகுந்தால், அரசர்க்கேற்றபடி நடந்துகொள்ளவேண்டுமென்று பெரியோர் கூறுவர். எல்லாமறிந்த உமக்கு நாங்கள் சொல்லவேண்டுவ தொன்றுமில்லை. ஆயினும், நீர்செய்யும் காரியம் ஒன்றும் நன்றன்று. நீர் இன்று பாண்டியனிடத்தில் பரிக்கிரள் வருவதாகச் சொன்னீர். நாளை யாதுசொல்லவல்லீர்? உம்மைச்சார்ந்துள்ள உறவினர் நட்டோர் பெரியோர் ஆகிய இவர்களைக் காப்பாற்ற வேண்டுமென்னும் எண்ணம் சிறிதும் கொண்டிலீர் போலும். உமதுசெயல் உமக்கே அழகியது போலும் என்று பலரும் வருந்திக்கூறினர்.

மாணிக்கவாசக சுவாமிகள் அதுகேட்டு, அவர்களை நோக்கி, எம்பெருமான் என்னைக் குருந்தமரத்தடியில்வந்தாட்கொண்டஅன்றே சுற்றத்தையும் அதனாலுண்டாகும் பந்தத்தையும் ஒழித்தேன், இன்பதுன்பங்களும் அற்றேன், தேகாபிமானமும் ஒழிந்தேன், பொ

ருணையும் வெறுத்தேன், சினமும் செருக்கு மொழிந்தேன், நல்வினை தீவினையகன்றேன். தாய்தந்தை குருமுதலியவர்கள் சிவபெருமானே, கிருபையே மனையாள், பல்லுயிர்களும் மைந்தர்கள், சுற்றத்தினர் சிவனடியார்கள், பிறவியேயும் பெரும்பகை என்பதையுணர்ந் தேன். ஐபொங்கும் அமைத்த சேனை என்னு டையதே, பூமியெல்லாம் படுக்கையிடமாம், கோவணமே உடுக்குமாடையாம், அணியும் சந்தனக்கலவை விபூதியாம், ஆபரணம் கண் டிகையாம். நானின்றே இறந்தாலும் பிறக்க, இருந்தாலுமிருக்க, பாண்டியன் தண்டிக்கினு ம் தண்டிக்க, உடலை உலைதனிலும் தருக, மோதுமடையிலும் அடைக்க, நாகத்தேசினு ம் சேருக, சிவனை நான் ஒருபோதும் மறவேன். பழைய ஊழ்வினை வந்து விளைந்தால் அதனை மாற்றவல்லவர் யாவர் என்று அவர்கள் கூறி யதை மறுத்திருந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

---

## நரிபரியாக்கியபடலம்.

அரிமர்த்தனபாண்டியன் மறுநாள் மாணி க்கவாசக சுவாமிகளையழைத்து, அமைச்சர் பெருமானே! இன்னம் குதிரைத்திரள் வந்தி லவோலும் என்று வினாவலும், இன்றைய

மூன்றாம் நாளில் அவையாவும் இங்குவந்து சேரும் என்று மந்திரர் பெருமான்கூறி, பாண்டிவேந்தே! அப்பரித்திரளுக்குத்தக்க இருப்பிடங்களும், நீர் அருந்துந் தடாகங்களும் வெவ்வேறு அமைக்கவேண்டுமென்ன, பாண்டியன் பணிசெய்வோர் அவ்வாறே சமைத்தனர். மாணிக்கவாசக சுவாமிகள் கூறியமூன்றுநாளும் கழிந்து பரித்திரள் வந்திலாமை கண்டு, பாண்டியன் அவரையழைப்பித்து மிகவும் கோபித்து, அங்குநின்ற தண்டமாக்களைநோக்கி, இக்கள்வனைக் கொண்டுபோய் நன்று தண்டஞ்செய்து நம்பொருளையெல்லாம் வாங்குமின் என்று கட்டளையிட, அவர்கள் அவ்வாறே அழைத்துக்கொண்டுபோய், பொன்னுக்கு என்னவழி சொல்லுகிறீர் என்று எதிர்த்துச்சீறி, அவரைக்குனிவித்து பாரமான கற்களை மேலேற்றினார்கள். அப்போது, மாணிக்கவாசக சுவாமிகள் சிவபெருமான் திருவடிகளைத் தியானித்துக்கொண்டிருந்தனர். ஆதலால், எம்பெருமான் அப்பாரத்தைத்தாங்கினர். தண்டமாக்கள், அதுகண்டு இவன் இவ்வளவுபாரஞ்சுமத்தியும் வருந்தாதிருக்கின்றனன். இது, ஏதோ மாயச்செய்கையாயிருக்கின்றதெனக் கோபித்து மாணிக்கவாசகசுவாமிகளுடைய கைகால்களைக்கிட்டி அண்ணந்தா விட்டனர். அவர், அதற்கும் உள்ளம்

அஞ்சாதிருந்தனர். அன்றிரவில் தண்டமாக்கள் அமைச்சர்பெருமானை ஓர் இருண்ட அறையில்தள்ளி கால்களுக்கு விலங்கிட்டுத் தண்டஞ்செய்தனர். அக்காலத்தும் அவர் பரமேஸ்வரன் ஸ்ரீபாதங்களையே சிந்தித்துக்கொண்டிருந்தனர். பொழுது விடிந்தவுடன், அடியவர்கள் சொக்கலிங்கப்பெருமானையும் அங்கயற்கண்ணம்மையாரையும் திருப்பள்ளியுணர்த்தக் கோயிலடைந்தபோது, அவர்கள்செய்யும் ஸ்தோத்திர ஒலியையும், தவளசங்கத்தோசையையும், வேதகோஷத்தையும் மாணிக்கவாசக சுவாமிகள் அங்கிருந்தவண்ணமே செவிகளாரக்கேட்டு மனம்பூரித்து அத்தக்கோபுர சிகரத்தைநோக்கி, கரங்கள் கூப்பித்தொழுது எம்பெருமானைப் பலவிதமாக ஸ்துதிசெய்தனர். அவர் மனங்கரைந்திரங்கு மோசையைக்கேட்டுச் சிவபெருமான் சகியாதவராய், அவரைச்சிறையினின்றும் விடுக்கத் திருவுளங்கொண்டு, நந்திமுதலாகிய கணத்தலைவர்களையழைத்து, பாண்டியன் கோபியாமுன்னம் நாம் பரித்திரள் செலுத்துதல் வேண்டுமாகையால், நீங்கள் காட்டில்வாழும் நரிகளையெல்லாம் பரிகளாக்கி, அவற்றை நடத்தும் சேவகர்களாய் முன்னே செல்லுமின் எனக் கட்டளையிட்டனர். அவர்கள் அவ்வாறே செய்தனர். சிவபெருமானும் வேதக்குதிரையின்மேல் ஆ

ரோகணித்துக்கொண்டுபலவாத்தியங்கள் கடல்போல் ஒலிசெய்ய, அளவிறந்த பரித்திரளின்காலின் எழும்தூசு திசைகளையும் ஆகாயத்தையும்மறைப்ப, மதுராநகருக்கு அரைக்காததூரத்தில்வருகையில், அதுகண்டசிலர் சிறையிலிருக்கும் மாணிக்கவாசக சுவாமிகளிடத்தில் முகமலர்ச்சியுடன் சென்று மந்திரர்பெருருமானே! குதிரைவெள்ளம் இப்போது நகரவாயிலுக்குச் சமீபமாய்வருகிறது. இந்தவிசேடத்தைச்சீக்கிரம் பாண்டியனிடம்போய்ச் சொல்லுமென்ன, அவர் அவ்வாறேபோய் பாண்டியனே? குதிரைத்திரள் இதோ வருகிறதென்று சொன்னார்.

அதுகேட்டுபாண்டியன் உடல்பூரித்து, அமைச்சர்பெருமானுக்கு விலையுயர்ந்த வஸ்திரங்களும்,இரத்னாபரணங்களும் தந்து அவரைச் சந்தோஷிப்பித்தனன். பின்னர், பாண்டியன் தன் அரண்மனைப் புறங்கடையில் இட்ட ஓர் சிங்காதனத்தில் வீற்றிருந்து பரிவரவைப்பார்த்திருந்தனன். அப்போது, எம்பெருமான் திருவிளையாட்டால்வந்த பரிவெள்ளம் சிறிதுபோதுதாமதித்தலும், பாண்டியன்வெகுண்டு இதுபொய்யென்றுநினைத்துக்கோபித்து அருகிலிருக்கும் தண்டமாக்களைநோக்க, அவர்கள் அமைச்சர்பெருமானைக்கொண்போய் நினைத்தற்கரிய கொடுந்தண்டங்களைச்செய்ய, மாணி

க்கவாசகசுவாமிகள் சிவபெருமானை நினைந்து, பலவிதமாக இரங்கித்துதிக்கையில், பலவாத்தியங்கள் ஒலிக்க, புரவிக்கூட்டத்தின் செந்தூளான்து திசைகளையெல்லா மூடக்கண்டனர். பாண்டியனும் அதனைக் கண்ணுற்று, அமைச்சர்தலைவரைவருவித்து, அவரிடத்துமிக்க அன்புபாராட்டி, இராஜகாரியம் உம்மைப்போல் பார்க்கவல்லவர் யாவர் என்று மகிழ்ச்சியுடன் அவருடன் அளவளாவி, தேவேந்திரனைப்போல நாம் ஆயிரம்கண்பெற்ருலும், இக்குதிரைப் பெருவெள்ளத்தைப்பார்க்க அமையாது என்று பேருவகை கொண்டிருந்தனன்.

அப்போது, அரிமர்த்தனபாண்டியன், அமைச்சர் பெருமானாகிய மாணிக்கவாசகசுவாமிகளைநோக்கி, பரிகளின்மீதுவந்த இந்தவீரர்களில் யார்மிக்கோர் என்றுவினவ, அவர்நான் அறியேன் என்று சொன்னார். பின்னர், வேதப்பரிமீதுவந்த சிவபெருமான் பாண்டியனெதிரேவந்து குதிரை யேற்றத்தின் திறத்தைச் சிறிதுகாட்டி யருளினார். எம்பெருமானுடன் வந்தகணத்தலைவர்கள் யாவரும் தத்தம்புரவிகளை நடத்திக்காட்டினார்கள். பாண்டியன் அவர்களைப்பார்த்து, உங்களில் இறைவர் யாவரென்று வினவ, இவர்தானென்று சிவபெருமானைச் சுட்டிக்காட்டியபோது, எம்பெருமான் எதிரேவரலும், பாண்டியன்மேல் அவர் கிரு

பாநோக்கம் பட்டமையால், அவன்தன்னை மறந்து சிங்காதனத்தைவிட்டு எழுந்து கரங்களைச் சிரமேற் கூப்பிக்கொண்டுநின்றான். உடனே சிவபெருமான் ஆஞ்ஞையால், அந்த ஞான மறைப்புண்டுபோய், நாம் இன்று ஓர் குதிரைவீரனைக்கண்டு எழுந்து கைகளைத்தலைமேற் குவித்துநின்றது என்ன அதிசயம் என்று மிகவும் நாணங்கொண்டு மறுபடியும் ஆசனத்தில் உட்காராமலே நின்றனன். அவனைச் சிவபெருமான்கண்டு, பாண்டியனே! நின்பொருளையெல்லாம் அமைச்சர்பெருமான் கொண்டுவந்து நமக்கும் நம்மைச்சூழ்ந் திருப்போர்க்கும் வழங்கியபடியால் திவ்வியலக்ஷண முள்ள உயர்ந்தபரிகள் உனக்குவந்தன. குதிரை வர்த்தகம் செய்யுமுறையை நீகேட்பாயாக. இப்போது, இக்குதிரைகளை என்னிடத்தினின்றும் நீகயிறுமாறி பெற்றுக்கொண்டால் நாளை இப்பரிகள் எப்படியானாலும் உனக்கும் எமக்கும் யாதொரு வழக்குமில்லை. இது தான் பரிமா விற்கும் முறைமையென்று சிவபெருமான்கூறப் பாண்டியன் அதற்குச் சம்மதித்தனன். பிறகு, சிவபெருமான் அசுவலக்ஷணங்களையும் அவற்றை யடைவோர் எய்தும் பிரயோஜனங்களையும் தெளிவாக விரித்துக்கூறி, கயிறுமாறிக்கொடுத்தனர். வேதப்பரி யொன்றுதவிர மற்றப்புரவிகளையெல்லாங்

கொடுக்கப்பெற்று, பாண்டியன் தன்பரிசனங்களைக் கொண்டு பந்தியிற் சேர்ப்பித்தனன். அதன்பிறகு, பாண்டியன் குதிரைவர்த்தகராகிய சிவபெருமானுக்கு விலையுயர்ந்த வெள்ளை வஸ்திரம் ஒன்று பரிசாகக் கொடுத்தான். அதனைச்சிவபெருமான் தமது அன்பராகிய மாணிக்கவாசக சுவாமிகள் பொருட்டு, குதிரையினின்றும் இழிந்துகூசாதுவாங்கி இரண்டாவது கங்கையைப்போல் முடியிற் சூடினர். அது கண்ட கணத்தலைவர்கள், எம்பெருமான் பரியினின்று மிழிந்து இந்தவஸ்திரத்தைப் பாண்டியனிடத்தில் வாங்கிப்புனைந்தது என்ன காரணம், அவ்வாறுசெய்யாவிடில் இவர்தரித்த திக்காடையும், அரவாபரணமும் பாண்டியன் கவருவானோ? என்று தம்முள் பேசிக்கொண்டனர். பின்பு, பாண்டியன் கணவீரர்கள் யாவர்க்கும் தனித்தனி வஸ்திரங்கள் அளிக்கப்பெற்றுக்கொண்டு, சிவபெருமானும் கணத்தலைவர்களு மறைந்தனர். பாண்டியன், அமைச்சர்பெருமானாகிய மாணிக்கவாசக சுவாமிகளுக்குவேண்டிய பரிசுகள் அளித்துத்தன் அரண்மனை சேர்ந்தனன். மற்றுள்ள மந்திரிபிரதானிகள் முதலாயினோரும் தத்தம் இருப்பிடம் போய்ச்சேர குதிரைப்பாகராய்வந்த சொக்கலிங்கப்பெருமானும் தம்கோயிலடைந்து தாம்செய்த திருவிளையாடலை யெல்லாம்

டீரு கூதியம்மையாருடன் சொல்லி இன்புற்று வீற்றிருந்தனர்.

திருச்சிற்றம்பலம்.

---

## பரிநரியாக்கியபடலம்.

மாணிக்கவாசக சுவாமிகள், பாண்டியன் அளித்த பலவரிசைகளைப் பெற்றுக்கொண்டு சர்வாடம்பரத்துடன் தம்மனைசேர்ந்து இன் புற்றிருந்தனர். அப்போது சுற்றத்தாரும் நட் பாளரும் மற்றவர்களும்வந்து அவரைக் கண் டார்கள். வந்து விசாரித்தவர்களுக்குத் தக்க உபசாரமொழிந்து அனுப்பிவிட்டு, மாணிக்க வாசகசுவாமிகள் வேறிடத்திலிருந்து, கருணை யங்கடலாகிய சிவபெருமானைத் தியானித்துக் கொண்டிருந்தார். அன்றிரவிலே மாயவடிவ ங்கொண்டுவந்த பரிகளெல்லாம் பழையபடி நரிகளாய் ஒன்றோடொன்று பேசத்தொடங் கின. சங்கோசையும், பிணப்பறையோசையும் நாம் எப்போதும் செவிகுளிரக் கேட்டுக்கொ ண்டிருப்போம். இப்போது நாம்பரிகளாய் ம னிதரைச்சுமந்து, தாம்புகளாலும், சங்கிலிக ளாலும் கட்டுண்டு, சாட்டியால்அடிக்கப் பக லெல்லாம் வருந்தினோம். பூர்வபுண்ணியத் தால் இவ்வேளையில் நாம்நம்முடைய பழைய வுருவடைந்தோம்.நாம்காட்டில் வாழுங்காலத்

தில் ஒருநாளும் இப்படிப்பட்டகவலை யடைந்ததேயில்லை. இன்னமும் நம்மைக் கட்டிய சங்கிலித்தழும்புகளும் சாட்டியடித் தழும்புகளும் மறையவில்லை. இனிப்பொழுது விடியுமுன் இவ்விடம் விட்டோடிப்போவதே யுக்தமாகும். நாம் புசிப்பதற்கு இவ்வூர் நத்தை நண்டு முதலியனவைகளுங்கிடையா. கொள்ளும்பயறும் புல்லும் நம்முடைய தேகத்துக்குதவா. பாண்டியன் ஏவலாளர்கள் நம்முடைய தற்கால நிலையைக்கண்டால் கோபித்துக்கொல்லுவார்கள். ஆகையால், உடனே காட்டுக்கோடி மறைவதே உபாயமென்று யாவும் ஒன்றுகூடி சங்கிலிகளையும் தாம்புகளையும் அறுத்துக்கொண்டு முன்னிருந்த குதிரைகளையும் கடித்துக்காயப்படுத்திவிட்டு ஊளைக்கலக்கி அனர்த்தஞ்செய்து, பலவழியாலும் தப்பியோடிக் காடுசேர்ந்தன. பொழுதுவிடிந்த உடன் குதிரைக் காவலர்கள் பாண்டியனிடம் போய்வணங்கி, உடல்நடுங்கி, எம்மரசே! நேற்றுவந்தபரிகளெல்லாம் இரவில் நரிகளாய் ஊளைக் கலக்கிவிட்டு காட்டைத் தேடின வென்று சொன்னார்கள். இக்கடுஞ் சொல்லைப் பாண்டியன்கேட்டு, கண்களில் தீப்பொறிபறக்கக் கோபித்து, அருகிலிருக்கும் அமைச்சர்களைநோக்கி, மதிவல்லோரே! வாதவூரன் என்னும் வஞ்சமனக் கள்வன், நம்முடைய

பொருளையெல்லாங் கவர்ந்து காட்டிற்பிணம் பிடுங்கித் தின்றுதிரியும் நரிகளைப் பரிகளாக்கிக் கொண்டுவந்த மாயத்தைக்கண்டீரோ? இவன் செய்த கொடுஞ்செயலுக்கு இவனையென்செயலாம்? என்றுகேட்க, அவர்கள், பழிபாவமஞ்சாது நன்றிகொன்றவனாகிய இவன்பொருட்டு நாங்கள் யாது சொலக்கடவோம் என்று வாய் பேசாது தலைகுனிந்திருந்தனர். அப்போது விளைந்தது ஒன்றுமறியாத மாணிக்கவாசக சுவாமிகள் பாண்டியனிடம் வரலும், பாண்டியன் அவரைநோக்கி, அளவிலாத நம்முடைய பொருளைக் கொண்டுபோய் நல்ல குதிரைகளைத்தேடிக் கொண்டுவந்தனையன்றோவென்றுவினவினான். அதுகேட்ட மாணிக்கவாசகசுவாமிகள் அக்குதிரைகட்குக் குற்றமென்ன என்று கேட்க, பாண்டியன்குற்றம் யாதுமில்லை, ஆனால், அவை அர்த்தராத்திரியில் நரிகளாய் பக்கத்திருந்த குதிரைகளையெல்லாம் ஹிம்சித்து ஊரைக் கலக்கிக் காட்டிலோடிமறைந்தன. நீகண்ணும் கவசமுமாயிருந்து இராஜகாரியத்தை நன்குநடாத்திய தெல்லாம் சமையம்பார்த்துப் பொருளைக்கவரும் பொருட்டோ? நின் அமைச்சுத் தொழில்மிகவும் நன்றாயிருக்கின்றது. நீ அந்தணர்மரபில் பிறந்தோம் என்று ஓர்பெருமை பூண்டனை, வேறொருவராகில் நன்றாய்த்தண்டிக்கப்படுவ

# மண்சுமந்தபடலம்.

மதுராபுரியில், வையையாறு ஊழிவெள்ள
ம்போல் பெருக்கெடுத்துவருவதை அரிமர்த்
தன பாண்டியன் கண்டு, மந்திரிகளைநோக்கி,
நீங்கள் விரைந்துசென்று ஆற்றுக்கு அணை
போட்டு வெள்ளத்தையொதுக்கி வாருங்கள்
என்று கட்டளையிட்டான். அவர்கள் அவ்வா
றேபோய் மதுராநகரத்திலுள்ள குடிகளையெ
ல்லாம் ஏட்டில் குறித்தெழுதி, அவரவர்க்கு
இவ்வளவு பங்கென்று கோல்கொண்டு அளந்
துவிட்டு எங்கும்பறையறைவித்து அளவின்
படி அவ்வவர்கள் தங்கள் தங்கள் பாகத்தை
யடையுங்களென்று யாவரையும் வருவித்தன
ர். பாண்டியன் கட்டளையின்படியே குடிகள்
எல்லோரும் தத்தம்பங்கை அடைப்பாராயி
னார். அந்தநகரத்தில் தென்கீழ்த்திசையில், சா
லவுமூப்புடையவந்தியென்னும் நரை மூதாட்
டி யொருத்தி யிருந்தனள். அவள், சிவபெரு
மானுடைய திருவடித்தாமரைகளில் மிக்கமெ
ய்யன்புபூண்டவள், பிட்டு விற்றுண்ணும் தொ
ழிலுடையவள். நாள்தோறும் தான் சுடும்பி
ட்டினைச் சொக்கலிங்கப்பெருமானுக்கு நிவே
தித்து உண்பவள். அந்த நரைமூதாட்டிக்கு
அளந்துவிட்டபங்கை அடைப்பதற்குக்கூலி
யாள் கிடையாமல், தனக்கு வேறொருவருந்
துணையின்மையால் மிகவுமனந்தளர்ந்து, நா
ன் என் செய்வேன், பாண்டியன்தண்டனைக்

குள்ளாகவேண்டுமேயென்று பயந்து சொக்கலிங்கப்பெருமானை யுளத்திற்சிந்தித்து, எம்பெருமானே! பிட்டு விற்றுண்டு வாழும் பேதையாகிய நான் இதுவரையில் சிறிதுந்துயரின்றி உமது திருவருளால் சுகித்துவாழ்ந்திருந்தேன். அப்படிப்பட்ட எனக்குப்பாண்டியன் ஆஞ்ஞையினாலே இன்று, ஒரு இடையூறு வந்து சம்பவித்து விட்டது. துணையும் மக்களும் நட்பினரும், சுற்றத்தாரும் பிறரும் ஆகிய ஒருபற்றுக்கோடு மின்றித் துக்கத்திலாழ்ந்து புலம்பும் பாவியேனுக்கு இத்தகைய துன்பம்வருவது நீதியோ? பாண்டியன் என்மேற் கோபிக்குமுன் எனக்குக் கூலியாளாய்வருபவர் ஒருவரையுங்காணேனே. இனிநான்யாது செய்வேன்? என்று குறையிரந்து வீதியில்வந்து, யாரேனுங்கூலியாள் வருவதுண்டோ என்று கூவி மனோசஞ்சலங் கொண்டிருந்தனள். அப்போது, கருணாநிதியாகிய சிவபெருமான், அன்பிற்பழுத்த அந்த நரைமூதாட்டியின் துக்கத்தை நிவர்த்திசெய்யும்படி திருவுளங்கொண்டு, அழுக்கடைந்த ஒருபழங் கந்தையை இடையில் தரித்து, திருமுடியில் சுமையடையும் கூடையுந்தாங்கி, தோள்மேல் ஒரு மழுங்கியமண்வெட்டியேந்தி மிகவும்பசியினர்போல் புறப்பட்டு கூலிகொடுத்து என் வேலைகொள்வாருண்டோ? என்று கூவிக்கொ

ண்டு, கண்ணீர்விட்டுக் கலங்கியழுகின்ற நரை மூதாட்டிவாழும் வீதியில்வந்தனர். எம்பெருமான் ஓலமிடுங் குரலைக்கேட்டு, வந்தியென்பாள் வீட்டின்வெளிவந்து கூலியாளென்று வரும் காளையை அழைத்து, அப்பா! எனக்கு அளந்துவிட்ட கரையை அடைத்துத்தருவாயோ என்றுகேட்டாள். எம்பெருமான் அதற்கிசைந்து தாயே! எனக்குத்தருங் கூலியாதென்றுகேட்க, அப்பா, உனக்குப்பிட்டு அளிப்பேன் என்று வந்திகூறினள். ஆனால், இப்போது நான் மிகவும் பசித்திருக்கிறேன், உதிர்ந்த பிட்டெல்லாம் முந்தியளிப்பாயாகில், நான் உண்டு இளைப்பாறி, பின்பு உன்பங்குக்கரையை அடைப்பேன் என்று சுவாமிகூறினார். நரைமூதாட்டி, உதிர்ந்த பிட்டெல்லாம் எடுத்து அப்பா உண்ணென்று அளிக்க, சிவபெருமான் முன்தானையேந்தி வாங்கி, மிகவும் நன்று! நன்று! என்றுகூறி அவள் அன்பையும் உடன்கூட்டித் திருவமுது செய்து, அன்னையே! இதுதாய் முலைப்பாலினும் அதிக சுவையுடையது. இது சொக்கலிங்கப் பெருமானுக்கே அர்ப்பிதமாம் என்றுகூறிச் சிரமசைத்துக் களித்தனர்.

பின்னர், சிவபெருமான் வந்தியைநோக்கி, தாய்தந்தையரின்றித் தனிக்கூலியாளாகவந்த எனக்கு ஒருதாயாய் அன்புபாராட்டி என்பசி

இளைப்பை யொழித்தனையே, அன்னையே!
இனிவேலைக்குப்போய் உன் பங்குக்கரையை
அடைக்கின்றேன் என்று கூறி வேலைத்துறை
க்குப்போய், நான்வந்தியாள் என்று ஏட்டில்
எழுதுவித்து, கரையடைக்காமல் அனந்தவித
மான திருவிளையாடல் செய்துகொண்டிருந்
தார். பாண்டியனுடைய பரிசனங்கள் கரைய
டைப்பினைப்பார்த்துவருகையில், நகரிலுள்ள
எல்லார் பங்குக்கரைகளும் மலைபோலுயர்ந்
திருக்கவும் வந்தியென்னும் நரைமூதாட்டிக்கு
விட்டபங்கு அடைபடாமையுங்கண்டு கோப
மூண்டவர்களாய், வந்திக்குக் கூலியாளாகவந்
தவன் யாரென்று தேடிப்பார்த்து, மன்மத
னைப்போல் மிக்க அழகினையுடைய காளையை
நோக்கி, அடா! தம்பீ! யாவர்பங்கும் அடை
பட்டதே. நீயேன் இன்னம் வந்திபங்கைய
டையாமல் சும்மா இருக்கின்றாய் என்றுவின
வினர். எம்பெருமான் அதற்கு மறுமொழி
யொன்று முரையாமல் இறுமாப்போடிருந்த
னர். பாண்டியன் ஏவலாளர் அவரை மாறு
கொண்டு அடிக்க அஞ்சி, நாமிதனைப் பாண்டி
யனுக்கு உணர்த்துவோமென்று போய், அரி
மர்த்தன பாண்டியனை வணங்கி, எம்மரசே!
இம்மதுராநகரிலுள்ளார் யாவரும் தங்கள் தங்
களுக்கு அளந்துவிட்டபங்கை மலைபோலுங்
கரைகோலி அடைத்தனர். வந்திக்குக் கூலி

யாளாகவந்த ஒருவன், அரசர்செல்வப் பிள்ளைபோல் களித்தும், பாடியும், ஆடியும் காலத்தைப்போக்கி வேலை செய்யாதிருக்கின்றனன். அவனுடைய வடிவழகைப்பார்த்து அடிக்க அஞ்சிவந்தோம் என்றுகூறப் பாண்டியன் அமைச்சரோடும் எழுந்து, நாம்போய் அடைபட்ட பங்கையெல்லாம் பார்த்துவருவோம் என்று வையை யாற்றின்கரையை அடைந்து சந்தோஷத்துடன் பார்த்துக்கொண்டே வருகையில், வந்திபங்கடைப்பாரில்லாமல் அடுத்தகரையையும் வெள்ளங் கல்லியழிப்பதை நோக்கி, மிக்க சீற்றங்கொண்டு, வந்திக்குக் கூலியாளாய் வந்தவன் எங்கேயென்று கேட்டான். பாண்டியன் கோபத்தைக்கண்ட ஏவலாளர்கள் மிகவும்பயந்து இவன்தான் வந்தியாள் எனக்காட்டினர். பாண்டியன், அவரைப்பார்த்து கண்களில் தீப்பொறி பறக்கக்கோபித்து கையில் பொற்பிரம்புதாங்கி, சமஸ்த அண்டசரா சரங்களையும் சரீரமாகக்கொண்ட அவர் முதுகின்மேல் வீசியடித்தனன். உடனே எம்பெருமான் கூடையோடு மண்ணை உடைப்பினிற் கொட்டி மறைந்தருளினார். அந்தப்பிரம்படியானது, பாண்டியன், அமைச்சர் மேலும், சேனைகள்மேலும், யானை குதிரைகள் மேலும் பிரமன்முதலிய சமஸ்ததேவர்கள் மனிதர்கள் மற்றுமுள்ள எல்லா உயிர்கள் மே

லும்பட்டது. இவ்வதிசயத்தைக்கண்ட பாண்டியன் ஏவலாளர்கள் நரை மூதாட்டியிடம் போயினர். அவர்களைக்கண்ணுற்ற வந்தி பயந்து, நமக்குப்பாண்டியனு லின்னம் ஏதேனும் தண்டனையுண்டோ? போனகூலியாள் என் செய்தானே? இது எப்படிமுடியுமோ? என்று கூடல் எம்பெருமானை நினைந்து வருந்த, அவர் திருவருளால், நந்திகணத்தவர் ஒருதிவ்ய விமானம் கொண்டுவந்து, அன்னையே! வா என்று அதிலேற்றிக்கொண்டு, தேவர்கள் கற்பகப்பூமாரி பொழியவும், துந்துபி வாத்தியம் கோஷிக்கவும் சிவலோகத்துக்குக் கொண்டுபோயினர்.

இதுநிற்க, சிவபெருமான் ஒருமண்ணை உடைப்பிற்கொட்டி மறைந்ததும், அதனால் கரை மலைபோலுயர்ந்ததும், யாவரும் என்மேல் பிரம்படிபட்டது, என்மேல் பிரம்படிபட்டது என்று சொல்லுவதும், தன்மேலும் பட்டதும் பாண்டியன் நோக்கி, ஒன்றுந்தோன்றாமல், மனத்தில் ஆசங்கைகொண்டிருந்தான்.

அப்போது, சிவபெருமான் ஆகாயத்தில் அசரீரியாயிருந்து பாண்டியனைநோக்கிச் சொல்லுவார். கோடாதசெங்கோலோச்சும் மன்னனே! உன்பொருள்களெல்லாம் தருமவழியில் சம்பாதிக்கப்பட்ட தாகலின், அதை நம் அடியவனாகிய வாதவூரான் நமக்கும் நமது

தொண்டர்கட்கும் விநியோகித்தனன். அப்பொருளின்பொருட்டு, நீயவனைத் தண்டனை புரிந்தாய், அது நாம்பொறுமல் காட்டுநரிகளை யெல்லாம் பரிகளாக்கித்தந்தோம். அவை இரவில் பழையவுருவடைந்தோடின. பின்னும் நீயவனைத் தண்டஞ் செய்தபடியால், வையையாற்றைப் பெருகப்பார்த்தோம். அதுவுமன்றி வந்திகைப்பிட்டு வாங்கியுண்டு, அவளுக்குக் கூலியாளாய்வந்து பிரம்படியும் பட்டு, மண்ணை உடைப்பில்கொட்டி கரையுயரச்செய்து நரைமூதாட்டியாகிய வந்தியின் துயரை யொழித்து, அவளை நம்சிவலோகத்தில் சேர்த்தோம். இத்தனை காரியங்கள் செய்ததும் இந்த அன்பன்பொருட்டேயாம். இவ்வித்தகன் பெருமை நீ யாதும் உணர்ந்திலை. இவன் எம்மிடத்தன்புபூண்டு, உனக்கு இம்மை மறுமைப்பயன்களைத்தேடித்தந்த உத்தம புருஷன். இந்த அன்பனாகிய மாணிக்கவாசகனை நீ இச்சைவழியேவிட்டு, நெடிதுநாள் உலகத்தையாண்டு இன்புற்று வாழ்க என்று, திருவாய்மொழிந்தருளினார். அதுகேட்டபாண்டியன், அச்சமும் அதிசயமுங் கொண்டு, அன்பர் எங்குசென்றாரெனத்தேடி, சொக்கலிங்கப்பெருமான் ஆலயமடைந்து அங்கு தியானத்திலிருக்கும் மாணிக்கவாசக சுவாமிகளைக்கண்டு வணங்கி, நானும்முடையபெருமை யறியாதுசெய்ததீங்கு

களை யெல்லாம் பொறுத்து முன்போல் உம்முடைய புவியையாண்டு ரக்ஷித்தருள்கவென்று வேண்டிக் கொண்டனன். மண்ணிலாசையற்றவராகிய மாணிக்கவாசக சுவாமிகள் கேட்டு, உள்ளே நகைதோன்ற பாண்டியனை நோக்கி, நீர் தேவேந்திரனைப்போல் இவ்வுலகத்தை அரசாண்டு சுகித்துவாழ்க. எம்பெருமான் என்னைச்சிதம்பர க்ஷேத்திரத்துக்குப் போகப்பணித்தாராகையால், நீரும் அதற்கு இசைந்து விடையளிக்கவென்று பெற்றுக்கொண்டு, சொக்கலிங்கப்பெருமானைத் துதித்துத் தொழுது போகையில், பாண்டியன் பின்தொடர்ந்து செல்ல, அவனைநோக்கி, நீர் நில்லும் என்றுசொல்ல, அவன் கூப்பாடுதூரம் போய் மாணிக்கவாசக சுவாமிகளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு திரும்பிவந்து சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியடைந்து தான் கையிற்பிரம்பு நீட்ட முதுகுகாட்டிய எம்பெருமானுடைய கருணை வெள்ளத்துக்காக நெஞ்சம் நைந்துருகித் துதிப்பானாயினன். எம்பெருமானே! அருச்சுனன் அடித்த வில்லடியும், சாக்கியநாயனார் கல்லடியும்போல நாயிற்கடையேனாகிய யான் வெகுண்டடித்த பிரம்படியையும் உமது அருமைத் திருமேனிபொறுத்ததோ? அந்நாளில் சிறுத்தொண்டரிட்ட பிள்ளைக்கறியமுதும், மென்று சுவை பார்த்து

கண்ணப்பநாயனாரிட்ட இறைச்சியும்போல இன்று நரைமூதாட்டியிட்ட பிட்டையும் உகந்துண்டு என்று மடியவர்கட்கு எளியரானீரே. நரிகள் யாவையும் பரிகளாக்கி நடத்தியும், இக்காடையன்றி வேறொன்றையும் தரியாத தேவரீர் நாயேன் தந்த வஸ்திரத்தை வாங்கித் திருமுடிமேல் தரித்தும், என்பாசபந்தத்தைத் தேவரீர் அறுக்கவந்ததை யறியாமல், அந்தோ! நான் குதிரையாசைகொண்டு இறுமாந்திருந்தேனே என்று, பாண்டியன் பலமுறையால் துதித்து, சொக்கலிங்கப் பெருமானுக்குத் திருப்பணி பூசைமுதலியன நடத்தி எம்பெருமான் திருவடிக்கன்பு பூண்டு உலகாண்டு வந்தனன்.

இவ்வாறு அரசுபுரிந்து வாழுநாளில், அரிமர்த்தனபாண்டியன் ஜகநாதனெனும் புதல்வனைப்பெற்று, அவனுக்குமுடிசூட்டி, மாணிக்கவாசகசுவாமிகளுடைய சார்பினால் உண்மை ஞானம் விளங்கப்பெற்று, இருவினையொப்பு மலபரிபாகமும் அடைந்து சிவபெருமானுடைய திருவடிநீழலடைந்தனன். பின்னர், மாணிக்கவாசகசுவாமிகள் பலசிவஸ்தலங்களைப் பணிந்துசென்று சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்து, வீதிகள்தோறும் வீழ்ந்துவணங்கி, சிவகங்கையில்மூழ்கி, உமாதேவியார் காண நடேசப்பெருமான் அநவரதம் ஆநந்தத்தாண

ங்கிக்கொண்டு, ஒரு மண்டபத்தில் அறிஞர் கூட்டஞ்சூழ இருந்தனர். அப்போது, இலங்கையினின்றும் கப்பலிற்போந்த புத்தர்கள்வந்து தம்சமய உண்மையை யெடுத்துக் கூறி வாதஞ்செய்ய, மாணிக்கவாசகசுவாமிகள் அதைமறுத்து, தமதுசமயாதீத சைவநிலையின் உண்மையைப் பிரத்தியக்ஷப் பிரமாணமாகக் காட்டி, அவர்களை வாதில் வென்றனர். அது கேட்ட பௌத்தசமயத்தனாகிய சோழன் தான்பெற்ற ஊமைப்பெண்ணை சிதம்பரத்துக்குக்கொண்டுவந்து, யாவரேயாயினும் என்புத்திரியினுடைய மூங்கைத்தன்மையை நீக்கினவரே வென்றவராவர் என்றோத, புத்தர்கள் மணிமந்திரௌஷதங்களைப் பிரயோகிக்கவுந் தீராமைகண்டு நாணி நின்றனர். பின்னர், மாணிக்கவாசக சுவாமிகள் நடராஜப்பெருமானுடைய ஸ்ரீபாதங்களை மனத்தில் தியானித்துக்கொண்டு, எம்பெருமானுடைய புகழை வினாவுரையாகப்பாடலும், மூங்கைப்பெண் அவற்றிற்குத்தக்கவிடையளித்து மூங்கைத்தன்மை மாறினள். சோழராஜன் அதுகண்டு, சிவபெருமானே உண்மைப்பரம்பொருளென்று உள்ளந்தேறி, மாணிக்கவாசக சுவாமிகளையும், தில்லை மூவாயிரவரையும் வணங்கி, முன்புபுத்தர்கள் சபதஞ்செய்தவாறே அவர்களைச்செக்குறவிட்டுத்தண்டஞ்செய்து தான்சைவனாயி

ஞன். பின்னர், மாணிக்கவாசகசுவாமிகள் நெடுநாள் எம்பெருமான் திருத்தாளில் பாமாலை சாத்திப் பக்தி செய்துகொண்டிருந்து முடிவில் சிற்சோதியிற் கலந்தருளினர்.

திருச்சிற்றம்பலம்.

---

## பாண்டியன்சுரந்தீர்த்தபடலம்.

மதுராபுரியில், ஜகநாத பாண்டியனுக்குப் பின்னர், அநேகபாண்டியர்கள் அரசுபுரிந்து, சத்துருசாதன பாண்டியன் குமாரனாகிய கூன் பாண்டியன் செங்கோலோச்சிவருநாளில், அவன் தன்தோள் வலியால் சேர சோழர்களை வென்று மூன்றுநாடுகளையும் ஒருகுடைக்கீழாண்டு வந்தனன். அந்நாளில், சேரன், யானை பொன் ரத்னங்கள் பெண்கூட்ட முதலியன பாண்டியனுக்குத்தந்து அவனுடைய காலில் விழுந்து முன்போல் தன் நாடு பெற்றுக்கொண்டு போயினன். சோழன் தன் அரும்பெறற் புத்திரி யாகிய மங்கையருக்கரசி யென்னு மாதுசிரோமணியைப் பாண்டியனுக்கு மணஞ்செய்துதந்து தன் நாட்டைப்பெற்றுக்கொண்டு, தன்பெண்ணுக்கு ஸ்ரீதனமாக அளவிறந்தநிதியும், வஸ்திரமும் ரத்னமும் விளைநிலங்களும் பிறபொருள்களுந் தந்ததுமன்றி, குலச்சிறையாரென்னும் அறிஞரையுங் கொடுத்

தான். பின்பு, பாண்டியன் மதுரைவந்துசேர்ந்து, கல்விகேள்வியிலும் குணத்திலும் மதியிலும் குலச்சிறையார் சிறந்திருப்பக்கண்டு, அவரைத்தனக்கு மந்திரியாக வைத்துக்கொண்டு மண்ணுண்டுவருநாளில், முன்னைவல்வினையால், சரீரத்தில் கூனடைந்தது மல்லாமல், சமண்சமயத்தில்சேர்ந்தனன். அரசன் சமண் ஒழுக்கம் பூண்டோனுகவே, மதுராநகரமுழுவதும் சமணிருளில்மூழ்கிப் பூதிசாதனநெறியாகிய சைவசமயம் மறைந்திருந்தது. பாண்டியனுடைய கற்பிற்சிறந்த பத்தினியாராகிய மங்கையருக்கரசியாரும் மந்திரியாராகிய குலச்சிறையாரும் மாத்திரம் அந்தரங்கசைவச்சார்புடையவர்களாய், இப்பாழுஞ் சமண்களையைப்பறித்து, வேதசாரமாகிய சைவப் பயிரோங்கி வளரச்செய்பவர் யாவர் என்னும் சிந்தாகுலத்தினராய் மதுரேசனை வணங்கச் சென்றபோது, தங்குறையை எடுத்து விண்ணப்பித்தனர்.

அப்போது, சைவவேடந்தாங்கிய ஒருவேதியன் மதுரையெம்பெருமானைத் தரிசிக்கச் சிதம்பரத்தினின்றும் அங்குவந்திருந்தனன். அவ்வேதியனைமங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாருங் கண்டு, அந்தணரே! நீர் எங்கிருந்து வந்தீரென்று கேட்க, அவன் சோழநாட்டிலிருந்தும் வந்தேனென்றான். அங்கேதே

னும் விசேடமுண்டோ என்றவர்கள் கேட்க, சீகாழியில் சிவபாத இருதயரென்னும் ஒரு வேதியர் சிவபெருமானை நோக்கி அருந்தவஞ்செய்ய, முருகக்கடவுளே பிள்ளையாக அவதரித்து, மூன்றாமாண்டில் உமாதேவியாரது திருமுலைப்பாலுண்டு திருஞானசம்பந்தரென்னும் திருப்பெயர்பூண்டு, வேதாகமங்களை ஓதாதுணர்ந்து சிவபெருமா னெழுந்தருளியிருக்கும் திருப்பதிகடோறும் போய்த் திருப்பதிகமோதி, பொற்றாளமும் முத்துச்சிவிகையும்பெற்று, பாலையைநெய்தனிலமாக்கி, திருவீழிமிழலையிற் பொற்காசுபெற்று, திருமறைக்காட்டுக் கதவத்தைப்பதிகமோதி யடைத்து, மற்றுள்ள திருத்தலங்களையும் வணங்கிவருபவர் உங்கள் நாட்டுக்கும் வருவார் என்று வேதியன் கூறினான். அது கேட்ட மங்கையர்க் கரசியாரும் குலச்சிறையாரும் திருஞானசம்பந்தப் பெருமானுக்கு ஓர்திருமுகம் எழுதி அவ்வேதியன்கையிற் கொடுத்தனுப்பி விட்டு, மதுரைநாயகனை வணங்கிக்கொண்டு அரண்மனைபோய்ச் சேர்ந்தனர். அவ்வேதியன்போய், சம்பந்தப் பெருமானைக்கண்டு, அத்திருமுகத்தைக்காட்டி, அதில் "சண்பையர்கோன் திருவடிகளை வணங்கி, அடியேன் குலச்சிறை சொல்லும் விண்ணப்பமாவது, தேவரீர் இங்கெழுந்தருளிச் சமணிருளொழித்து,

எமதிறைவனாகிய பாண்டியனுக்கு விபூதிப் பிரசாத மளித்து பாண்டிநாட்டைத் திருநீற்று வழியில் நிறுத்தி, எங்களைக்காத் தருள்க'' வென்றெழுதியிருந்த வாசகத்தை வாசிக்கச் சம்பந்தப் பெருமான் கேட்டு, உடனே அங்கு போக எழுந்தனர். அப்போது, அவருடனிருந்த திருநாவுக்கரசுநாயனார் தடுத்து, உமக்கிப்போது கிரஹவலியின்மையால் செல்வது தகாதெனவோதலும், கோள்முதலியன சிவபெருமான் ஆணைவழி நிற்பனவாதலின், அவரேநம்முள்ளங் கோயிலாகக் கொண்டிருப்பது கொண்டு அவை நமக்கோர் தீங்குமிழையாவென்று எழுந்தனர்.

முரசவாத்தியமும்எக்காளமும் கடல்போலொலிக்க, திருஞான சம்பந்தப் பெருமான் முத்துச் சிவிகையின்மேல் ஆரோகணித்துக் கொண்டு, சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலங்கடோறும்போய்ப் பாடி, சோழநாடுகடந்து பாண்டிநாட்டை யடைந்து மதுராபுரியைச் சமீபித்து வருகையில், சம்பந்தமூர்த்திகளுடன் சென்ற பரிசனங்களில், சின்னமூதுபவர் பரசமயக் கோளரிவந்தார் என்று ஆரவாரிக்கும் கோஷத்தைச் சமணர்கள் கேட்டெதிரேவந்து, நீவிர் உயிர்களைக்கொன்று அறஞ் சொன்ன தேவனைக் கும்பிடவந்தால்,இந்தச்சின்னங்களெல்லாம் யாதுக்கு? நீவிர்

யாரைவென்றீர்? என்று தடைசெய்ய, சம்பந்தப்பெருமான் அவர்கள் தடையைக்கடந்து மதுரைநாயகனுடைய ஆலயத்துட் பிரவேசித்து, எம்பெருமானைவணங்கி, சுவாமீ! வேதாகமவழி நின்னைவழிப்பட்டு உய்யாதசமணர்களை வாதுசெய்து வெல்லத்திருவுளஞ் செய்தருள்க என்று விண்ணப்பித்துப் பதிகமோதித் துதித்து திருவருள்பெற்று மீளுகையில், அங்குள்ள வாகீச முனிகள் என்னும் ஒருபெரியவர்வேண்ட அவர் திருமடத்தில் எழுந்தருளி அன்றிரவு அவ்விடத்தில் திருவமுது செய்து இருந்தனர். அப்போது, திருஞான சம்பந்த சுவாமிகள் மதுரைக்குவந்த செய்தியையறிந்து அயல் மலைகளில் வாசஞ் செய்து வந்த சமணர்கள் எண்ணாயிரவரும் ஒருங்கு கூடி, அக்கினிபகவானையழைத்து, எமதுபகைவர்களிருக்கும் மடத்தை அழுதுசெய்து வருகவெனக் கட்டளை யிட்டனர். அவன்பூர்வம் தக்கன்யாகத்தில் செய்த சிவாபராதத்தால் கையிழந்துள்ளவனாகையால், அதுகாரியஞ் செய்தற்கஞ்சிப் போயினான். பின்னர், சமணர்கள் சடாக்கினியை எடுத்துக்கொண்டு போய், சம்பந்தப் பெருமான் இருக்குமடத்தில் செருகினார். அப்படிச்செருகிய மாத்திரத்தில் புகையெழலும், அதனை அடியவர்கண்டு சம்பந்தப் பெருமானுக்கு அறிவித்தனர். அது

கண்ட சம்பந்தப்பெருமான் அங்கிருந்தவண்ணம் மதுரேசனைக் குறித்துப் பதிகமோதி துட்டராகிய சமணர்நெறி மேற்கொண்டு, தரும மார்க்கந்துறந்தொழுகும் பாண்டியனை இத்தீப்பற்றுகவென்று விடுத்தனர். அக்கணமே அது, சுரநோயாய்ப் பாண்டியனைப் பற்றலும், அவன் சகியாமல் பதைப்பதை மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாருங்கண்டு மனந்தளர்ந்து வைத்தியர்களைக் கொண்டு பலமருந்தருத்தவும் தணியாமல் அதிகரித்தது. அதனால், அவர்கள்மிகவும் வருத்தமெய்தி, சமணர்களைவிடுத்துப் பார்க்கவும், அவர்கள் தவவலிமையாலும், மருந்தினாலும், அதுதணியாமையால், மிக்ககவலையடைந்திருந்தனர். பொழுதும் விடிந்தது. அப்போது, பாண்டியன்மாதேவியாகிய மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் பாண்டியனை நோக்கி, இந்தவெப்புநோய் ஸ்ரீஞானசம்பந்தப் பெருமானாலன்றி வேறொருவராலும் தீர்த்திடப் படாதெனக் கூறினர். பாண்டியன், ஆனால், நீர்கூறிய சைவர் நீறிட்டுப்பார்ப்பது தகுமோவென்ன, மஹாராஜனே! எவ்வகையிலேனும் உமக்கு நோய்நீங்குவதுதானே பிரதானம் என்று அவர்கள் கூற, பாண்டியன் அதற்கிசைந்து, அவரை இங்கு அழையுங்கள் என்று கட்டளையிட்டனன். உடனே குலச்சிறையார்நகரமுழுதும்

அலங்கரித்து, திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளியிருக்கும் திருமடத்துக்குப்போய் அவரைக்கண்டு வணங்கினார்.

வந்துபணிந்த குலச்சிறையை ஞானசம்பந்தப் பெருமான்கண்டு, எழுந்திரும் என்று பணித்து, மங்கையர்க்கரசியாரும் நீரும்சுகமேயிருக்கின்றீர்களோ என்று வினவ, எம்பெருமானே! உம்முடைய திருவருளுடையார்க்குக்குறை என்னிருக்கிறது, வஞ்சகச் சமணர்களொழியவும் விபூதிப்பிரசாதத்தால் பாண்டிநாடுய்யவும், இப்போது, பாண்டியனுக்குச் சுரநோய் வந்திருப்பதால், அதனைத் தேவரீர் தீர்த்தருளல் வேண்டுமென்று இரந்தனர். அவ்வாறு குறையிரந்த குலச்சிறையாரைநோக்கி, அங்ஙனமேயாகுகவென்று அருள்சுரந்து, முத்துச் சிவிகையின்மீதேறிக்கொண்டு, சர்வாடம்பரங்களுடன் பாண்டியன் அரண்மனையை யடைந்து அங்கிட்டிருந்த ஓர் சிங்காசனத்திலெழுந்தருளியிருந்தார். பாண்டியன் ஞானசம்பந்த வள்ளலைப் பார்த்து, பாவியேனுடைய பிணியை யொழித்து, எனையாட்கொண்டருளும் என்று வேண்டினான்.

அருகிருந்த சமணர்கள் அதுகேட்டு மனம்புழுங்கி, பாண்டிவேந்தே! உம்முடைய வலப்புறத்துநோய் இவரையும், இடப்புறத்துநோய் எம்மையுந்தீர்க்கும்படி ஆஞ்ஞாபித்தல்

வேண்டு மென்று கேட்க, அவ்வாறே செய்யுங்கள் என்று பாண்டியன் இசைந்து கூறுதன்முன், சமணர்கள் அருகக்கடவுளைத் தியானித்து, தம்கையிலுள்ள மயிற்பீலியால் தடவியும் கமண்டல ஜலத்தை யூற்றியும், நெய் சொரிந்த நெருப்பைப்போல் மேலிடக் கண்டனரேயன்றி, சிறிதும் தணியக்கண்டிலர். அதனால், சமணர் மானமிக்குடையவர்களாய்த் தங்கள் செருக்கடங்கி யிருத்தலும், ஸ்ரீ-ஞான சம்பந்தப் பெருமான் பையினின்றும் திருநீறெடுத்து, அந்நோய் நீங்குமாறுதியானித்தனர். அதனைமாய நீறென்று சமணர்கள் விலக்கினர். பின்னர், சம்பந்தப் பெருமான் மதுரையெம்பெருமானுடைய மடைப்பள்ளிச்சாம்பர்கொண்டு வரும்படிசெய்து, மருந்தும் மந்திரமும் வேதங்கள் கூறுமெய்ப் பொருளும் மோக்ஷவீடும் போகமும் பொருளும் தருவதும் இவை யெல்லாம், ஆலவாயான் திருநீறே யென்று திருப்பதிகமோதி, பாண்டியன் மெய்யிலிட்டுத் தடவிய மாத்திரத்தில், சுரநோய் நீங்கி, சந்தனமும் பனிநீரும் கலந்துபூசியது போல் மிக்க குளிர்ச்சியாயிருந்தது. பின்னர், பாண்டியனுக்கு இடப்புறம் வெப்பு அதிகரித்தலால், சம்பந்தப் பெருமானை நோக்கி, சுவாமீ! அடியேனால் இடப்புறத்தில் சுரம் சகிக்கமுடியவில்லை. நான் சமண்படுகுழியி னின்

றும் தப்பிப்பிழைக்குந் தேவரீருக்குத் திருவுள்ளமானால், இதனையும் தேவரீரே யொழித்தருளல் வேண்டு மென்று பிரார்த்தித்தலும், சம்பந்தப் பெருமான் அப்பாதகத்தையும் முன்போலவே மதுரேசனுடைய மடைப்பள்ளிச் சாம்பரிட்டுத்தடவவும், பாண்டியன் முன்னுள்ள கூனும் வெப்புமொழிந்து மாசொழிந்த மணிபோல் விளங்கினான். அக்காரணத்தால், அவன்சவுந்தரிய பாண்டியனென்னும் பேர்பெற்று, சம்பந்தப் பெருமானால் பஞ்சாக்ஷரோபதேசம் பெற்று, சமண்நெறி யொழிந்து சைவனாயினான்.

திருச்சிற்றம்பலம்.

---

## சமணரைக்கழுவேற்றியபடலம்.

பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் பெருமானாகிய குலச்சிறையாரும் ஸ்ரீஞானசம்பந்தப்பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கி, எம்பெருமானே! அடியேங்கட்கின்று மோர்குறையுளது. மதுராநகரமுழுதும் சமண்காடு மூடியிருக்கின்றது. அதனை வேர்களைந்து சைவப்பயிர் வளர்த்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தலும், ஞானசம்பந்த வள்ளலார் நான்மதுரையெம்பெருமானுடைய திருவுளக் குறிப்பை

அறிவேனென்று அவர்களுடன்சென்று பொற்றாமரைத் தீர்த்தத்தில் மூழ்கி மீனாக்ஷியம்மையார் சமேதனாகிய சொக்கலிங்கப் பெருமானைப் பணிந்து, சுவாமீ! எந்நாளும் காயத்தை வருத்தித் தவஞ்செய்வார் போல், அவமேபுரிந்து இம்மை மறுமைப்பலன்களை யிழந்து நீர் திருவாய்மலர்ந்தருளிய வேதவேள்விகளை நிந்தைசெய் தொழுகும் பேயர்களாகிய சமணர்களை வாதில்வென்று தண்டஞ்செய்யத் திருவுளஞ் செய்தருளல் வேண்டும் என்று விண்ணப்பித்தனர். அப்போது, சிவபெருமான் உனக்கிசைந்ததே எமக்குஞ் சம்மதமாகையால், நீபோய் அவர்களை வாதில் வெல்லுக. வெற்றிநினதேயாம், அவர்கள் அபஜயமடைந்து கழுவிலேறிமாய்குவர் என்று அசரீரியாய் மொழிந்தருளக்கேட்டு, சம்பந்தப்பெருமான் சந்தோஷித்து தம்மடத்துக்குப் போயினர். மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் அரண்மனை போய்ச்சேர்ந்தனர். மறுநாள் பாண்டிமா தேவியாரும், அமைச்சரும் ஸ்ரீ-ஞானசம்பந்த மூர்த்திகள் திருமடத்தையடைந்து அவருடன் சமணரை வெல்லும் சூழ்ச்சியை ஆலோசித்து அவருடன் பாண்டியன் சபையைக்குறுகி, மஹாராஜனே! சமண்காடே பாண்டிநாடெங்கும் மூடியிருக்கிறது. அதனைக் களைந்தெறிந்தால் சைவப்

பயிர் ஓங்கும் என்று சொன்னார்கள். அவ்வாறே செய்கவென்று பாண்டியனும் கட்டளையிட, ஸ்ரீ-ஞானசம்பந்த சுவாமிகள் சிவபெருமானுடைய திருவுளத்தையறிந்து மடத்திலிருந்தனர். அப்போது, சமணர்களை அவர்கள் மனைவிமார்களும் பிள்ளைகளும் நோக்கி, நீங்கள் பாண்டியனுக்குவந்த வெப்புநோயைத் தீர்க்கவலியிலராய், ஓர்மழலைவாய்க் குழந்தைக்குத் தோற்று அருகக்கடவுள் அடியவர்க்கெல்லாம் நீங்காப் பழியை விளைத்தீர். பாண்டியன் சைவசமயம் புகுந்து உங்கள் விரதநெறிகளையெல்லா மிகழ்ந்தனன். உமக்கினி என்னநிலையிருக்கிறது, என்று இகழ்ந்து கூறச் சமணர்கள் அதுபொறாராய், ஸ்ரீ-ஞான சம்பந்தப் பெருமானுடன் வாதுசெய்ய எழுந்தனர். அங்காலையில் மனைவிமார்கள் சமணர்களைத் தடுத்து, நீங்கள்வாதுசெய்து வென்றதுபோதும். இப்போதுங்கட்குக் காலபலம் ஒன்றும் சரியாயில்லை யென்று தாங்கள் அன்றிரவில் கண்ட தீக்கனவுகளை யெல்லாம் முறையே கூறி, நீங்கள் முன்யாகம் வளர்த்து யானை பாம்பு பசுமுதலியவற்றைப் பாண்டியன் மீதேவி விளைத்ததுன்பத்தையும் அறிந்திருக்கிறீர்கள். இப்போது, பாண்டியன் சுரத்தையும் தணித்தீரில்லை, ஆகையால், இனி நீங்கள் செய்யுங்காரியம் கைகூடுமென்பது என்னநிச்சயம்,

நீங்களே நன்றாயோசித்துப் பாருங்கள். இன்று நீங்கள்வாதுக்குப் போவதே தகாதுஎன்று தங்கள் கொழுநர்களைப் பற்றியிழுத்தனர். சமணர்கள் பெண்டிர்சொற்கேட்பது பழுதென்றெண்ணி மறைந்து செல்லலாயினர். பின்னும், அவர்கள் பத்தினிமார்கள் குழல்சரிய ஓடி வந்து, நீங்கள், எங்கள் சொற்கேளாது போவதால், அவமானப்பட்டு இடையூறடைகவென்று சபித்தனர். சமணர்கள், அதற்கும் அஞ்சாராய் வழியில் பலதுற்சகுனங்கள் கண்டு மனங்கலங்க யாவரும் ஒருங்குகூடி, நாம் பாண்டியனிடம்போய் அவன் அனுமதி பெற்று பகைவனை வாதில் வெல்வோமென்றெண்ணிப் பாண்டியன் சபைக்குப் போயினர்.

அச்சமையத்தில், ஸ்ரீ-ஞானசம்பந்த மூர்த்திகள் மதுரேசனடிபணிந்து, தமது திருமடத்துக்குப் போய்க் கொண்டிருந்தார். அவரைச்சமணர்கள் வழிமறித்தனர், மறித்தசமணர்கள் பின்வரத் தாம் பாண்டியன்சபை யடைந்து, அங்கிட்ட ஓர் சிங்காசனத்தின் மேலெழுந்தருளி யிருந்தார். சமணர்கள், அது பொறாமல் சம்பந்தவள்ளலை நோக்கி, மழலைச்சொல் இன்னமுமாறாக் குழந்தாய்! காகமேறப் பனம்பழம் விழுந்ததுபோல், நம்முடைய மந்திர பலத்தால் பாண்டியன் சுரத்தைத் தணித்தோமென்று நீதருக்கடைதல் தகாது.

சங்குநத்தை முதலிய ஊர்வன நடந்து செல்லும் வழியும் எழுத்தாய் அமைதலுங்கூடும். அதுபோல், உன்கையால் சிந்திய சாம்பலும் நீமொழிந்த சிறுசொல்லும் மருந்து மந்திரங்களாய்ப் பாண்டியன் சுரத்தைத் தணித்தன. ஆகையால், உங்கள்தெய்வ மந்திரத்தையும், எங்கள் மந்திரத்தையும் ஏடுகளில் எழுதி நெருப்பி விடுவோம். வெந்தது தோற்றது. வேகாதது வென்றதாம். அப்படிச் செய்வதும் உங்கள் சிவன் உறையும் தலத்தில் கூடாது, ஏனெனில், அவன் நடுநிலைதவறி உங்கள்சார்பாயிருந்து எங்கட்குத் தீமைவிளைப்பன். நாம் வேறொருதலத்திலிருந்து பாண்டியன் முன்னிலையில் தீவளர்த்து அதில் ஏடுகளையிட்டு வெந்தது வேகாததுகொண்டு வெற்றி தோல்வி நிச்சயிப்போமென்று சபதஞ்செய்தனர். பின்னர், சமணர்கள் மதுராநகருக்குக் கீழ்த்திசையில், ஓர் அக்னிகுண்ட மேற்படுத்தினார்கள். ஸ்ரீஞானசம்பந்தப்பிள்ளையார் பதினாறாயிரந் திருக்கூட்டமும் பாண்டியனும் அமைச்சரும் பின்வர, அவ்விடத்துக் கெழுந்தருளியிருந்தனர். சமணர்கள் பன்னீராயிரவரும் அங்கடைந்து தங்கள் மந்திரத்தை ஏட்டிலெழுதி நெருப்பி லிட்டனர். உடனே அவ்வேடுகள் சாம்பராய் விட்டன. அதுகண்டு, சமணர்கள் பரிபவப் பட்டிருந்தனர். ஸ்ரீஞானசம்

பந்த மூர்த்திகள் தம்தேவாரத் திருமுறை யைக் கயிறிட்டுவகிர்ந்து அதில் "போகமார்த் தபூண் முலையாள்" என்னும் பதிகம் அகப்பட அவ்வேட்டை யெடுத்துத் தீயிலிட்டனர். அவ்வேடு எரியாமல் நெடுநாள் ஜலத்திலிருந்த துபோல பச்சென்றிருந்தது. அங்குநின்ற பாண்டிவேந்தனும் அமைச்சரும் மங்கையர்க்கரசியாரும் மற்றவர்களும் அதுகண்டு ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகளைப் புகழ்ந்து, ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினர். அக்னிகுண்டம் ஏற்படுத்திய அவ்விடம் அன்றுமுதல் ஞானசம்பந்தப்பதி யென்றுவழங்கி வருகின்றது. பின்னர், சம்பந்தவள்ளலார் எரியிலிட்ட ஏட்டை எடுத்து திருமுறைப் புத்தகத்தில் கோர்த்து பாண்டியனை நோக்கலும், சமணர்கள் பொறாமையால் நாணமுந்தோன்றாமல், சம்பந்த மூர்த்தியைப் பார்த்து, ஓ சிறுபிள்ளாய்! நாங்கள் எழுதிவிட்ட எண்ணாயிரம் ஏடுகளும் நெருப்பில் தகிக்கப்பட்டன. நீயிட்ட ஏடொன்றும் பசுமையாக நின்றது.

ஆதலால், இது உன்மந்திரபலத்தால் அக்னிதேவனைக்கட்டியதாகும். உங்கள் ஏட்டையும், எங்கள் ஏட்டையும் வையைநதிவெள்ளத்தி விடுவோம். நீரை எதிர்த்துச்சென்ற ஏடு வென்றதும், சமுத்ரகதியாய்விட்ட ஏடு தோற்றதுமாகும். அதில், தோற்றவர்கள் வெ

றவர்க்கு அடிமையாய் விடவேண்டும் என்று கூறினார். அதுகேட்ட சம்பந்த வள்ளலார் சமணர்களை நோக்கி, சிவனடியார்களையும் சிவனையும் நிந்தித்தொழுகும் கொடியாராகிய உமக்கு அதுவோதண்டம். எம்பெருமான் திருவருளால் யாம் உங்களை வென்றோமாயின் உங்களைக்கழுமுனையிலேற்றுவோம். இதுவேதீர்மானம் என்று கூறினார். சமணர்கள் ஊழ்வலியால் அதற்குடன் பட்டனர். அஃதுணர்ந்த குலச்சிறையார் கச்சர்களைக் கொண்டு கழுமரங்கள் செய்வித்துப் பாண்டியனுக்கு முன் கொண்டுவந்து நிறுத்தினார். அப்போது, சம்பந்தவள்ளலார் சமணர்களை நோக்கி, இனி நீங்கள் விபூதிருத்ராக்ஷமணிந்து பஞ்சாக்ஷரமோதிச் சிவனடிக்கன்பராகி யுய்மின் என்று கருணையுடன் மொழிந்தனர். அதுகேட்டு, சமணர்கள் கோபம் பொங்கி, சம்பந்தரைநோக்கி, பிள்ளாய், முன்பு தீயில்வென்றனமே, இப்போது நீரில் எவ்வாறுமோ வெனவஞ்சி எம்மைச்சமாதானத்துக்கழைக்கின்றனை நாங்கள் அதற்கிசையேமென வைதுமறுத்து, ஆகாயத்தையளாவிவரும் வையையாற்றின் வேகத்தை மந்திரபலத்தால் தணிவித்து முன்போல ஏடுகள் எழுதி அதிலிட்டனர்.

பின்னர், ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகள், வேதம் சத்தியவாக்காயின், வேதங்கள்முழுவதும்

துணிந்த பரம்பொருள் சிவபெருமானேயாயின், இவ்வேடு நீரெதிரே செல்க, என்று "வாழ்கவந்தணர் வானவர்ஆனினம்" என்னும் திருப்பதிகத்தையெழுதி வையையாற்று வெள்ளத்திலிட்டனர். அவ்வேடு சிவபெருமான் திருவருளால், ஆற்றுவெள்ளத்தில் எதிரேறிச்சென்றது. சமணர்களிட்ட எண்ணாயிரம் ஏடுகளும் வெள்ளவழியேசென்று சமுத்திரகதமாய்விட்டன. அதுகண்டசமணர்கள் அச்சமும் நாணமுங்கொண்டு தலையிறக்க முற்றிருந்தார்கள். அப்போது, பாண்டியனும் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அதிக சந்தோஷமடைந்து சம்பந்த வள்ளலைப்பணிந்து ஆநந்த வெள்ளத்தில் மூழ்கி நின்றனர். பிறகு, சமணர்கள் பிள்ளையாரைநோக்கி, நாங்கள் இன்று உமக்குத்தோல்வியுற்றேம், நீரேவென்றீர் என்று கூறலும், சம்பந்த வள்ளலார் அவர்கள் மேல் கருணைகூர்ந்து, நான் இன்னும் தருமவழியே சிந்திக்கின்றேன். நீங்கள் என் வீணே இறக்கின்றீர். தாயினும் மிக்கன்புடையாராகிய எமது சிவபெருமானுடைய திருவடிக்காளாய் உய்யுங்கள் என்று பரிவுடன்கூறினர். சமணர்கள் ஓ! பிள்ளாய்! இத்தகைய அடாதமொழி நீ சொல்லுவது தகாது எனக்கூறி, மானமேற்கொண்டு தாமே கழுவிலேறத்தொடங்கினர். அவ்வாறு வலிந்து கழுவிலேறிய

வர்களொழிய மற்றையோரைச் சைவர்கள் பற்றிப்பற்றிக் கழுவிலேற்றினர். புதிதாய்ச் சமணசமயத்திற்சேர்ந்த மாணாக்கர்களா யுள்ளார், சாதற்குப்பயந்து திருநீறிட்டுத் தப்பிப் பிழைத்தனர். திருநீறு கிடைக்கப்பெறாதவர்கள் பசுவின் சாணத்தையிட்டுப்பிழைத்தனர். அதுவுங்கிட்டாதோர், கன்றைத்தோளிற்றாக்கிக் கொண்டு உயிர் பிழைத்தனர். மேற்கூறிய மூன்றுங்கிட்டாதோர், நீறிட்டார் நெற்றியிலும் சாணமிட்டார் நெற்றியிலும் தங்கள் நெற்றியை ஒற்றிக்கொண்டுபிழைத்தனர். பின்னர், பாண்டியன் சம்பந்தவள்ளலைநோக்கி, இன்று நீர் ஆற்றிலிட்ட ஏடெங்கேசென்றது என்றுகேட்க, அதனையாம் இப்போதேவருவிக்கின்றோமென்று சம்பந்தசுவாமிகள் மேற்றிசைநோக்கி நதி தீரத்தே சென்றனர். அவ்வாறுசென்ற சம்பந்தவள்ளலார்காணும்படி ஏடுகாததூரவரையில்சென்று உடனே மறைந்தது. ஆளுடைய பிள்ளையார், அவ்விடஞ்சென்று அங்கு பசுநிரை மேய்த்துக்கொண்டிருந்த சிலரை நோக்கி, இங்கேதேனும் விசேடமுண்டோவென்றுகேட்க, அச்சிறுவர்கள் நாங்கள் ஒன்று மறியோமென்று கூறினர். அப்போது, சம்பந்தசுவாமிகள் இங்கேதாவது விசேடமுண்டா யிருக்கவேண்டும். அதனை எப்படியாவது அறிதல்வேண்டும் என்று, சிவபெருமானைப்

பாடியருளினர். அப்போது, சிவபெருமான் சுயம்புவாய் ஒருவில்வ மரத்தின் கீழ் எழுந்தருளி யிருக்கக்கண்டு, சம்பந்தவள்ளலார் தரிசித்துவணங்கி சந்நிதியில் நின்றனர். பாண்டியன் இச்செய்திகேட்டு, தன்சேனையோடு அங்கு வந்து சேர்ந்தனன். சிவபெருமான் அவ்விலிங்கத்தினின்றும் ஒருவிருத்த வேதியராய்த்தோன்றி, சம்பந்தப் பெருமானுக்குத் திருநீறுசாத்தித் திருவருள்சுரந்து நின்றார். நின்ற எம்பெருமானைச் சம்பந்தப் பிள்ளையார் வணங்கி, சுவாமீ! நான் இன்றுவையையிலிட்ட ஏடு இங்குவந்துமறைந்தது. அதைநீர்தான் எடுத்திருப்பீர் அதனைத்தந்தருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க, எம்பெருமான், நீயின்னும் பலநாள் நாமுறையும் தலங்கடோறும் போய்ப்பாடி, மற்றுமுள்ள புறச்சமயிகளை வென்று, பின்னர், நம்மை வந்தடைகவென்று ஆசிகூறி ஏட்டைத்தந்து மறைந்தனர். சம்பந்தப் பிள்ளையார் அவ்வேட்டைவாங்கி பாண்டியனுக்குக்காட்ட, பாண்டியன் களிப்படைந்து அவ்விடத்தில் சிவபெருமானுக்கு ஆலயகோபுர மண்டபாதிகள்கண்டு, ஒருநகரம் ஏற்படுத்தினன். அன்றுமுதல் அப்பதி திருவேடகம் என்னும் பேர்பெற்று விளங்கியது. அப்பதியில் மேவிய சிவனைப் பாண்டியன் சமணரோடும் கூடி. யொழுகிய பாவநீங்கப்பூசித்துப் புனி

தருளினான். அந்நகரத்தில், பாண்டியன் சம்பந்தவள்ளலாரோடும் சிலகாலமிருந்து, பின்னர், மதுரையை அடைந்து வாழுநாளில், சிலநாட்சென்றபின்னர், சம்பந்தப்பெருமான் வடதேசத்துள்ள சிவதலங்களை வணங்கிப் பாடக் கருதி, சொக்கலிங்கப் பெருமானையும், அங்கயற்கணம்மை யாரையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு மீள்கையில், பாண்டியனும், மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும், சம்பந்தமூர்த்தி நாயனாருடன் பலநாள்பழகிய அன்பினால் பிரிவாற்றாராய்ப்பின் செல்லுகையில், அவர்களைப் பிள்ளையார்நோக்கி, நம்மிடத்து என்றும் அன்பு நீங்காதவர்களாய், பூதிசாதனத்தைப் பாதுகாத்து, சிவபெருமான் கீர்த்தி உலகில் ஓங்கும்படி வாழ்ந்திருங்கள். இதனைமறுக்காதீர் நில்லுங்களென்றுகூற, அம்மொழியை மறுக்கவஞ்சி, சம்பந்தவள்ளலை வணங்கி, மதுரைக்குப்போய்ச்சேர்ந்தார்கள். ஸ்ரீஞானசம்பந்தப் பிள்ளையார் சோழநாடுபோய்ச் சேர்ந்தனர்.

திருச்சிற்றம்பலம்

## வன்னியும், கிணறும், இலிங்கமும் அழைத்தபடலம்.

---

மதுராபுரியில், சவுந்தரிய பாண்டியன் செங்கோல் செலுத்திவருநாளில், சமுத்திரஞ்சூழ்

ந்த தீவின்கண் ஒருபட்டணத்தில் மிக்கசெல்வமுடைய ஒருவணிக னிருந்தான். அவன் நெடுநாள் புத்திரப் பேறில்லாமல் தன்மனையாளோடு பலதருமங்கள் புரிந்து ஒருபெண் மகவைப்பெற்றனன். அவ்வணிகனுக்கு மதுரையம்பதியில் ஒருமருகனிருந்தான். அவன் முதல்மண முடிந்தவன். அவனுக்கே தான் தவங்கிடந்துபெற்ற புதல்வியை மணஞ்செய்து தருவதாகத் தன் உறவினர் முதலிய யாவருக்கும் அவன் தெரிவித்திருந்தான். இவ்வாறிருக்கையில், சிலநாளைக்குப்பின்னர், ஊழ்வினைவலியால் மாமனாகியவணிகன் உயிர்துறந்தான். அவனுடனே அவனதுகற்பிற்சிறந்த மனைவியும் மாண்டனள். அவ்விருவருக்கும் சுற்றத்தார்கள் ஈமக்கடன்களை முடித்து அச்செய்தியை மதுரையிலிருக்கும் மருகனுக்குத் தெரிவித்தனர். அச்செய்தியறிந்த வணிகன் மிகவும் துயருற்று சிலருடன் மதுரையினின்றும் புறப்பட்டு அப்பட்டணத்தையடைந்து மாமன் வீட்டிற் சிலநாளிருந்து, தன் மாமன் புதல்வியை மதுரைக்கு கொண்டுபோய் அங்குபந்துக்கள் முன்னிலையில் மணஞ்செய்வோமென்று கருதி, தன்மாமன் பொருள்களையெல்லாம் கைக்கொண்டு அங்குள்ள உறவினரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மதுரையை நோக்கிப் பிரயாணப்பட்டு வருகையில், வழி

யில் ஒருநாள் இரவில் புறம்பியமென்னும் ஊரி ல்தங்கி அங்கு சிவபெருமான் கோயிலுக் கடு த்துள்ள வன்னிமரத்தடியில் போசனஞ்சமை த்துண்டு, கோயில் வாயிற்படியின்மீது தலை வைத்து நித்திரை செய்கையில், அந்தவணி கனை ஒருசர்ப்பந்தீண்டி மாய்ந்தனன். அப் போது, அவ்வணிகனுடன் வந்த பரிஜனங்க ளும் தோழிப்பெண்களும் மற்று முள்ளவர்க ளும் ஓ வென்று அலறி யழுகையில், தன் நா யகனது சரீரத்தை ஸ்பரிசியாது ஒதுங்கிவந்த கற்பிற்சிறந்த அவ்வணிகப்பெண் சகிக்கலாற் றாமல் கல்லு முருகும்படிக்குப் புலம்பினாள். அவ்வூரார் யாவரும் இவ்விபத்தைக்கண்டு உற க்கமீங்கி வருந்தமுற்றிருந்தனர். அச்சமையத் தில், ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள் சிவஸ்தலங்க டோறும் போய்ப் பதிகமோதி அந்தப்புறம் பிய நகரத்தையடைந்து அங்கோர் மண்டபத் தில் எழுந்தருளியிருக்கையில், இப்பேரொலி. கேட்டு, ஈதென்னென்று ஆள்விட்டு விசாரித் தறிந்து, கோயிலையடைந்து அவ்வணிகப்பெ ண்ணைநோக்கி, நீயார்? உனக்குற்றது யாது? என்று வினவினார். அவ்வணிகப்பெண் தன் வரலாற்றை யெல்லா முறையேகூற, சம்பந்த வள்ளலார் கருணைகூர்ந்து, விடந்தீண்டிய வ ணிகனிடம் வந்து சிவபெருமானைத்தியானித் துப் பதிகமோதலும், அவன் உயிர் பெற்றெ

ழுந்தனன். அதுகண்ட யாவரும் சம்பந்தப் பெருமானைத்தொழுது துதிசெய்து களிகூர்ந் தனர். வணிகப்பெண் கரைகாணாத ஆநந்தசா கரத்தில் மூழ்கி ஒரு புறத்து ஒதுங்கி நின்றி ருந்தாள். அவ்வணிகப்பெண், வணிகன் அர வந்தீண்டி இறந்தபோதும், மீண்டும் உயிர்பெ ற்றபோதும், தான் மாமன் மகளாயிருந்தும், அவனைத் தீண்டாமல் ஒதுங்கியிருந்த நிலைமை யையும், கற்பின் தன்மையையும் சம்பந்தவள் ளலார்கண்டு வியந்து, வணிகனைநோக்கி, நீ இ வ்விடத்திலேயே இப்பெண்ணை மணஞ்செய் துகொண்டு போகவேண்டுமெனச் சொல்லி யருளினர்.

அதுகேட்டவணிகன், ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகளுடைய கட்டளையைத் தலைமேற் கொண்டு, சுவாமீ! எமது உறவினராகிய வணி கர்களும், கலியாணத்துக்குரிய சாக்ஷிகளும் இல்லாமல் இங்கே எவ்வாறு மணமுடிப்பது? என்று வணங்கிக் கூறலும், சம்பந்தவள்ள லார், ஓ வணிகனே! உன்மாமன் தன்மகள் பிறந்தவன்றே சுற்றத்தார்யாவரு மறியும்படி உனக்கேகொடுப்பதாகச் சொல்லிய விஷயம் யாவரும் அறிவார்களே. உன் கலியாணத்துக் குச் சாக்ஷிகள் இங்குள்ள வன்னிமரமும் கிண றும் இலிங்கமுமாகும், ஆகையால், என் சொ ற்கடவாமல் இவ்விடத்திலேயே மணஞ்செய்

துகொள்கவென்று கூறியருளினார். வணிகன், பெருமானே! நீரே எனக்கு ஆசிரியர், நட்டோர், தெய்வம், உறவினராகு மென்று அவர்சொற்படி அங்குலிவாக முடித்துக் கொண்டு அவரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு வணங்கி மனையாளோடும் தன்வீடுபோய்ச் சேர்ந்தான். பின்னர், அவ்வணிகன் தன்பொருளையும் வைத்துக்கொண்டு தன்னிரண்டு மனைவிமார்களும் ஈன்றபிள்ளைகளால் இன்புற்று வாழ்ந்து வந்தனன். இவ்வாறிருக்கையில், மூத்தமனைவியினுடைய துஷ்டப் பிள்ளைகள் ஒருநாள், இளையாள்மைந்தனை யடிக்க இளையாள் அப்பிள்ளைகளை வைதனள். அதுகேட்டமூத்தவள்கோபமூண்டு இளையாளை நோக்கி, நீஎவ்வூர் என்னசாதியார்மகள்? நீயாவர்காண என் நாயகனை அக்கிசாக்ஷியாக மணஞ்செய்தனை? நீயென்மணாளனுக்கு ஆசைப்பட்டுவந்த காமக்கிழத்தியாகும். அப்படிப்பட்ட உனக்கு இவ்வளவுவாயும் வீறும் யாதுக்கு? என் நாயகன் உன்னை அக்கிமுன்னிலையில் மணஞ்செய்த தற்குச் சாக்ஷி ஏதாவதுண்டாயின் சற்றேசொல் பார்ப்போமென்று வைதுகூறினள். அதுகேட்ட இளையாள் நாணமுற்று, என்நாயகன் அரவின்விடத்தால் மாண்டபோது உயிர்தந்தருளிய ஸ்ரீஞானசம்பந்தர் திருவருளால்,புறம்பியநாதர்சந்நிதிவன்னிமரமும்,

கிணறும், இலிங்கமும் சாக்ஷிகளாயுள்ளன வென்று சொன்னாள். அதுகேட்ட மூத்தவள் நகைத்து உன் கலியாணத்துக்கேற்ற சாக்ஷிகளையே கூறினை. நல்லது, அம்மூன்றுசாக்ஷிகளும் இங்குவருமாகில், அதுவும் மெய்யே என்று கூறினாள். அப்போது, இளையாள் துயருற்று தெய்வத்தைநினைந்து மனம் நைந்து அன்றிரவு உணவும் துயிலும் ஒழிந்து மறுநாள் பொற்றாமரைத் தீர்த்தத்தில் போய் ஸ்நானஞ் செய்து, சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியில் வணங்கி, எம்பெருமானே! அன்று என்நாயகன் என்னை மணஞ்செய்தபோது அதற்குச் சாக்ஷிகளாய் நின்ற தேவரீரும், வன்னிமரமும் கிணறும் அப்படியே இன்று இங்குவந்து என்மாற்றாளுடைய பரிஹாசத்தை யொழித்து என்னைக்காத்தருளல் வேண்டும். இல்லையேல், நான் உயிர்துறப்பேன் என்று வருந்திக் கூறினாள். அதுகண்ட கருணைபயோநிதியாகிய எம்பெருமான் திருவருளால், அம்மூன்றும் உடனே அங்கு சொக்கலிங்கப்பெருமான் ஆலயத்துக்கு வடகீழ்த்திசையில் வந்து நின்றன.

அதுகாலையில், இளையாள் மூத்தவளை அழைத்துக் கொண்டுபோய் அம்மூன்றினையும் காட்டி, இவைதாம் என்மணத்துக்குச்சாக்ஷிகளென்று கூறினாள். அது கண்ட மூத்தவள்

சோமசுந்தரக்கடவுளுடைய திருவிளையாடல்களைக்கேட்டுச் செவிபடைத்தபேறடைந்தோம், கேட்டவண்ணமே கண்கள் களிகூரக்கண்டு மலரிட்டிறைஞ்சவிருப்பமுடையேமென்று கூற, அகஸ்தியர்கேட்டகமகிழ்ந்து, வாருங்களென்றவர்களையழைத்துக்கொண்டுபோய் சுபதினத்தில் கங்காநதியில் மூழ்கி விசுவநாதரைவணங்கி விடைபெற்றுக்கொண்டு, பஞ்சாக்ஷரஞ்செபித்து சைவதவத்தேர்மேற்கொண்டு,ககனமார்க்கமாய் நடக்கலுற்றனர். அப்போது, மார்க்கத்தில் புண்ணியமிக்க தெய்வத்தலங்களும், மாதவர் தபோவனங்களும், தீர்த்தநதிகளும், மகரிஷிகள் தவஞ்செய்யும் விதங்களும் அகத்தியமுனிவர்காட்ட முனிவர்கண்டு கைகூப்பித் தொழுது சென்றார்கள். அவ்வாறு செல்லும்போது, அகஸ்தியமுனிவர் இருடிகளைநோக்கி, தபோதனரே! இந்த விருபாக்கமென்னுந்தலம், இலங்கைவேந்தனாகிய இராவணனைவதைக்குமாறு, இராமன் பூஜித்து அநுக்கிரகம்பெற்ற இடமாம். இந்தத்திருப்பருப்பதம், தன்சிகரத்திலேறி வீழ்ந்திறந்தவர்கள் முன்னெண்ணிய வண்ண மறுபிறப்பிலடையும்படி நல்குமலையாம். இந்தத்திருக்கோகர்ணம், பசுவின்காதைப்போல் குழைந்து இலிங்கவுருவெய்திய பரமேஸ்வரனுடைய சிவராத்திரியில் இரதோச்சவ நடக்குந்தலமாம்.

இத்திருவஞ்சைக்களம், மேலைக்கடற்கரையில் கார்த்திகைமாதத்துக் கார்த்திகைநக்ஷத்திரத்தில் சிவபெருமான் இரதோற்சவம் நடக்குந்தலமாம். இத்திருக்காளத்தி, வேடர்குலத்தவதரித்த கண்ணப்பநாயனார் மென்று சுவைபார்த்திட்ட ஊனைவிரும்பியருந்திய பரமன்வாழுந்தலமாம். இத்திருவாலங்காடு, சிவபெருமான் காளிதோற்க இடத்தாளை ஊர்த்துவமாகத்தூக்கி நிருத்தஞ்செய்த தலமாம். இத்திருக்காஞ்சிபுரம், மாவிருக்ஷமூலில் உமாதேவியார் தவஞ்செய்யுந்தலமாம். இத்திருமாற்பேறு, திருமால்காவற்றொழில்பெற அரனைப்பூசித்த தலமாம். இத்திருவோத்தூர், சிவபெருமான் சங்கைகூட்டி அந்தணர்க்கு வேதமோதிய தலமாம். இத்திருவண்ணாமலை, அரிபிரமர்கள் பன்றியன்னங்களாய் கீழ்மேலறியாவண்ணம் சிவபெருமான் அழற்பிழம்பாய்நின்ற மலையாம். இத்திருக்கழுக்குன்றம், கழுகுருவடிவங்கொண்டு இருமுனிவர் தவஞ்செய்யுந்தலமாம். இந்தவிருத்தாசலம், பல்லூழிகாலம் அழிவறநிற்குமலையாம். இத்திருக்கோவலூர், அந்தகாசுரனைவதைத்து திரிலோகத்துந் துயரொழித்த சிவபெருமான்வீற்றிருக்குந்தலமாம். இத்திருவதிகை, திரிபுரங்களையும் சிரித்தெரித்து நீறாக்கி மூப்புராதியர் வழிபட அவர்கட்கநுக்கிரகஞ்செய்த பரமேஸ்வரன் வீற்றிருக்குந்தல

மாம். இச்சிதம்பரம், சச்சிதாநந்தப்பொருளாகிய பரமசிவன் அசைவற்றாநந்த நிர்த்தனஞ்செய்யுங்கனகசபையாம். இத்திருவாரூர், பிறக்கமுத்திதருவதாகியதலமாம். இத்திருமறைக்காடு, வேதங்கள் பக்தியினாற்பூஜித்ததலமாம். இத்திருத்தோணிபுரம், பிரமவிஷ்ணுமுதலியதேவர்கள் பிரளயத்திலிறவாமல் சிவபெருமான் தோணியிலேற்றிய பன்னிருதிருநாமங்கள் பெற்றதலமாம். இப்புள்ளிருக்குவேளூர், சடாயுசம்பாவென்போர்பூசிக்க அவர்கட்கருள்சுரந்தளித்து பிறவிநோயொழித்த பரமசிவன் வாழுந்தலமாம். இம்மாயூரம், உமாதேவியார் மயிலுருவங்கொண்டு மகேஸ்வரனைப்பூஜித்து ஐப்பசிமாதத்தில் காவேரிஸ்நானஞ்செய்யுந்தலமாம். இத்திருக்கோடிகா, மூன்றுகோடிமுனிவர்வந்து வழிபட்டதலமாம். இத்தருமபுரம், அறக்கடவுள்பூஜித்ததலமாம். இத்திருவெண்காடு, நாற்கோட்டயிராவதம் தாருகாசுரன் துணித்தகொம்பைத் தவஞ்செய்துபெற்றதலமாம். இத்திருப்பனந்தாள், மாலைசாத்திய தாடகையென்னுமாதுசிரோமணியின் மானத்தைக்காக்கும்பொருட்டு தாழ்ந்துபூங்கச்சிட்டிழுத்த குங்கிலியக்கலய நாயனாரன்புக்கு நிமிர்ந்த சிவபெருமான்வாழுந்தலமாம். இத்திருச்செங்காட்டங்குடி, கஜமுகாசுரனைவதைத்து ஆனைமுகக்கடவுள் பூசித்ததலமாம்.

இத்திருச்சேய்ஞலூர், தாருகாசுரனைக்கொன்ற முருகக்கடவுள் சிவபெருமானைப்பூசித்ததும் ஆத்திமரத்தின்கீழ் மணலினாற்சிவலிங்கமமைத்து ஆவின்பாலாட்டிச் சிவபெருமான் திருமுடிமாலையைப்பெற்ற சண்டேசுரநாயனார் திருவவதாரஞ்செய்ததுமாகியதலமாம். இத்திருக்கடவூர், நமனையுதைத்து மார்க்கண்டேயருக்கு அழியாவாழ்நாள் தந்த சிவபெருமான்வாழுந்தலமாம். இத்திருவழுவூர், கஜாசுரனைவதைத்து தோலைக்கிழித்துப்போர்த்த பரமன்வாழுந்தலமாம். இத்திருக்கண்டியூர், பிரமதேவன்சிரத்தைக்கிள்ளியபிஞ்ஞகன்வாழுந்தலமாம். இத்திருக்குறுக்கை, காமவேளை நெற்றிக்கண்ணாலெரித்தநிருமலன்வாழுந்தலமாம். இத்திருப்பறியலூர், ஆட்டுத்தலையை மாமனாகிய தக்கனுக்கீந்த மகேஸ்வரன் வாழுந்தலமாம். இத்திருப்புறம்பியம், ஓர்வணிகப்பெண் விவாகச்சாக்ஷிகளாக வன்னி கிணறு இலிங்கங்களை உலகறியக்காட்டிய வுமாபதியுறையுந்தலமாம். இத்திருவிடைமருதூர், சிவபரஞ்சுடர் தன்னைத்தானருச்சித்ததும், வரகுணபாண்டியனைப் பற்றிய பிரமஹத்தி தோஷத்தைநீக்கி யநுக்கிரகித்ததுமாகியதலமாம். இத்திருக்குடந்தை, கங்காநதியானது மாமகந்தோறும்வந்து தன்னிடம்மூழ்கினோர் பாவங்களைத்தொலைக்கும்புண்ணியதீர்த்தஸ்தலமாம்.

இந்தச்சுவாமிமலை, தந்தையாகிய பரமேஸ்வரனுக்கு உபதேசஞ்செய்து எமது குருநாதனாகிய முருகக்கடவுள் எழுந்தருளியிருக்குந்தலமாம். இத்திருவீழிமிழலை, பரசிவப்பிரபு நெடுமால் கண்ணிடந்தடியில் சாத்த மகிழ்ந்து சக்கரப்படை யளித்ததலமாம். இத்திருவையாறு, நந்தியெம்பெருமான்பூஜித்து திருவருள்பெற்றதலமாம். இத்திருவானைக்கா, சிலந்தி யானை உமையம்மை திருமால் இவர்கள் தவஞ்செய்து பேறுபெற்ற தலமாம். இத்திரிசிரபுரம், திரிசிரனென்னு மசுரன்பேர்கொண்ட மலையாம். இக்காவேரிநதி, மூழ்கினோர் பாவராசிக ளனைத்தையும் போக்கும் புண்ணியதீர்த்தமாம் பாருங்கள். வையையாறுசூழ்ந்து அதோ தூரத்தே தெரிகின்றது பாண்டிநாடாம் என்று, அகஸ்தியர்காட்டத் தரிசித்து விசும்பு வழியாகப் பிரதக்ஷிணஞ்செய்துவரு முனிவர்கள், கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருவாடானை, திருப்புனவாயில், திருப்பூவணம், கானையார்கோயில், திருச்சுழியல், திருவிராமேச்சுரம், திருநெல்வேலி, திருக்குற்றாலம், திருப்பரங்குன்றம், திருவேடகம், திருவாப்பனூர் முதலியதலங்களைவணங்கி, வையைநதியை யெதிர்பணிந்து, கோபுரமுன்னிறைஞ்சி உள்ளேபோய் வீதிகள்தோறும் பணிந்தெழுந்து கோயிலைக்குறுகிப் பொற்றாமரைத்தீர்த்தத்தில்மூழ்கி செய்கடன்முடித்து பஞ்சாக்ஷரஞ்செபித்து சித்திவிநாயகர் திருவடிகளைவணங்கி, அங்கயற்கணம்மையைத்தொழுது, இந்திரவிமானத்தி லெழுந்தருளியிருக்குஞ் சோமசுந்தரக்கடவுளை